## கவிஞர் கம்பதாசன்

உலகைக் கண்டு சிரிக்கத் தெரிந்தவனே உண்மைக் கவிஞன். கொடுமைகளைக்கண்டு அவன் உள்ளம் குமுற லாம்; சுற்றிலும் நிலவும் வெறித்தனம் கண்டு வேதனைப் படலாம்; இனிய காட்சிகளைப் புன்முறுவலுடன் போற்ற லாம்; கன்னல் மொழியிலே கருத்துக்களைக் குழைத்துக் கற்பனையிலே காவிய நலம் மிளிர பாடலாம்; ஆயினும், இத்தனைக்கும் மேலே எதிர் நிற்கும் சாவையும் எள்ளி நகையாடத் தெரிந்தவனாகக் கவிஞன் இருக்க வேண்டும்; சூழ் நிலைக்குத் தலைவணங்கி அடிமைப்பட்டு விடாமல் அதைக் கண்டு சிரிக்கத் தெரியவேண்டும்; அவன்தான் கவிதா தேவிக்குக் காலத்தால் வாடாத நல்ல பல கவிதை மாலைகளைச் சூட்ட முடியும்.

கவிஞர் கம்பதாசனுக்கு வாழவும் தெரியும்; வாழ்வின் கோர விளையாட்டுக்களைக் கண்டு சிரிக்கவும் தெரியும். அதனால்தான், இயல்பான கவிதைகள் அவர் எழுத்திலே உருவாகின்றன. கட்டுப்பாடுகள் என்ற சிறைக்குள் அடைத்துத் திணறிக்கொண்டு ஏதோ நானும் இருக்கி றேன் என்று தன்னைப் புலப்படுத்திக் கொண்டிருக்கும் எழுத்துக் கோர்வையல்ல அவரது படைப்புக்கள். இஷ்

டம்போலச் சிறகடித்து இன்பமாகப் பறக்கும் சிட்டுக் குருவிகள் போன்று, கற்பனையுலகிலே தங்கு தடையின்றிப் பவனி வரும் அவரது சுதந்திரப் போக்கு கவிதை நயத்தைக் குலைப்பது இல்லை; மாறாக அதற்குக் களையூட்டுகிறது.

கவிதை எழுதவேண்டும் என்று அவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பது இல்லை. கவிஞனாக வேண்டும் என்ற எண்ணத்தினால் உந்தப்பட்டு அந்தக் கலையைக் கற்றவரும் அவர் அல்லர். அவர் பிறவிக் கவிஞர். அவரது சிந்தனை கண்ணோட்டம், பேச்சு எல்லாமே கவிதைதான்.

வளமை, வறுமை இரண்டையும் ஒன்றாகக் கருதும் கவலையற்ற கவிஞரின் பண்பை அவரது பல்வேறு கவிதைகளிலும் நாம் காணமுடியும்.

இயல், இசை, நாடகம் ஆகிய மூன்று துறையிலும் ஈடுபாடும் தேர்ச்சியும் உடைய கவிஞர் கம்பதாசன் தமிழகம் பெருமைப்படவேண்டிய ஒப்பற்ற கவிஞர்.

தென்னாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த உலகாபுரத்தில் 1916-ல் தோன்றிய கவிஞரின் இயற் பெயர் இராஜப்பா. நாடக நடிகராக உலக அரங்கிலே காலடி வைத்த அவர் இன்று கவிஞராகத் திகழ்கிறார். ஐம்பதுக்கும் மேற்பட்ட திரைப்படங்களின் கதை வசனம் பாட்டுகளில் அவருக்குப் பங்கு உண்டு.

கவிஞர் கம்பதாசன் அவர்களின் கவிதைகள் அனைத்தையுமே தொகுத்து ஒரே பெருநூலாகத் தமிழகத்திற்கு அளிக்கவேண்டும் என்று விரும்பினோம். சூழ்நிலை இப்

போதுதான் துணை செய்கிறது. முதல்தொகுதியாக இதனை இந்த அளவிலே வழங்குகின்றோம்.

கம்பதாசன் கவிதைகள் அனைத்துமே இதன்கண் இடம்பெற்று விட்டன என்று பெருமைகொள்ள எங்களால் முடியவில்லை. காரணம், இந்தத் தொகுப்பிலே சேராமல் இன்னும்பல இருக்கின்றன. அவை இரண்டாம் தொகுதியாக வெளிவரும்.

உள்ளத்தின் அடித்தளத்திலேயிருந்து உணர்ச்சி வெள்ளமாக ஊற்றெடுத்து பொங்கிவருவது கவிதை. அந்த உண்மையை உணரவேண்டுமானால் இக்கவிதைத் தொகுதியினைப் படிக்கவேண்டும். மொழியின் இயக்கத்திலேதான் எத்துணை உயிர்ப்புச் சக்திகளைத் தூண்டி அவை சமுதாயத்திலே நிலையாக ஒளிருமாறு செய்யமுடியும் என்பதைக் கவிதைகள் ஒவ்வொன்றுமே ஒவ்வொரு கோணத்திலே நின்று நிலைப்பெறுத்துகின்றன.

இதனை வெளியிட இசைவுதந்த கவிஞர் அவர்களுக்கும், இவற்றுட் பலவற்றை முன்னரே புத்தக வடிவிலும் பத்திரிகைகளிலும் வெளியிட்ட அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு இதனைத் தமிழன்னைக்கு அணிசெய்து போற்றுகின்றோம்.

வணக்கம்

**பதிப்பகத்தார்.**

## கவிஞர் வாக்கு

'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே...' என்றார் தாயுமான சுவாமிகள். அது முற்றிலும் உண்மை என்பது இந்நூல் வெளியீட்டால் நான் கண்டறிந்ததாகும். என் கவிதைகள்,

சின்னஞ் சிறுகவிதை—மலர்மேல்
சிந்தும் பனித்துளிபோல்
சின்னஞ் சிறுகவிதை—உழவன்
சிந்தும் விதைநெல்போல்
சின்னஞ் சிறுகவிதை—அகலின்
தீப ஒளியதுபோல்
சின்னஞ் சிறுகவிதை—குழந்தை
செவ்விதழ் முத்தம்போல்.

இவைகளை ஒருசேரத் திரட்டி, நாட்டிற்குத் தர வேண்டுமென்ற நல்ல மனத்தோடு, தோழர் கடலூர் 'தயாநிதி' இராமசாமியும், புலியூர்க் கேசிகனும் விரும்பினர். இவர்களது முயற்சியால், என் கவிதைகளைத் தமிழ் இலக்கிய ரசிகர்கள் சுவைக்கத் தருபவர்கள் அருணு வெளியிட்டினர். இந்நூலை அவர்கள் பெரும் பொறுப்போடு பதிப்பித்துத் தந்ததற்குக் காரணம், "எளிய பதங்கள்; எளிய

நடை; எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய சந்தம்; பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு; இவற்றினிடையே காவிய மொன்று தற்காலத்தில் செய்து தருவோன் நமது தாய் மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகிறான்" என்று மகாகவி பாரதியார் சொல்லியதே ஆகுமென நம்புகிறேன்.

இவர்களுக்கெல்லாம் என் இதயம் கலந்த நன்றி உரித்தாகும். வாழ்க தமிழ்! வாழ்க வையகம்!!

வணக்கம்,

கம்பதாசன்.

## காவியங்கள்



## இயற்கையின் எழில்

## காதல் கவிதைகள்

## தொழிலாளர் உலகம்

## 11

## நாடும் மொழியும்

## பல்வகை.

## இசைப் பாடல்கள்

# வேளை வந்தது

பூமகள் கண்ணெனவே பூத்த மகதமதில்
காமக் கடலாடும் கணிகையர் தம்மரபில்,
வந்த புதுமலராம், **வாசவ தத்தை** என்பாள் ;
அந்தர மேனகைபோல் ஆடும் தொழிலுடையாள் ;
அன்னவள் அன்புபெற, ஆளும் அரசரெலாம்
என்பும் உருகிநிற்க, ஏழை இரந்துண்ணும்
பித்தன், **உபகுப்தன்** என்னும் பெயருடைய
புத்தபிக்ஷு பேரெழிலில் சித்தம் பறிகொடுத்தாள்.
கன்னிப் பருவமுற்ற கட்டழகி, காளையவன்
அன்பை அடைந்தின்பம் ஆரத் தழுவுதற்குச் 10
செய்த உபாயமெல்லாம் தீபத்தின் முன் இருள்போல்
பொய்பட்டுப் போகப் புசிப்பில் கவனமின்றி
மேனி தளர்வடைந்து மெல்யாழ் இசை இழந்து
வானின் நிறங்காட்டும் வாரி எனவிழித்துக்
கூண்டுக் கிளியதுபோல் கோள்கூடும் மாளிகையில்
நீண்ட நினைவுகளில் நெஞ்சதனை ஓடவிட்டாள்.
பாங்கியர்கள் பக்கமுற்றார் ; 'உண்மை பக'ரென்றார் ;
ஏங்கிப் பெருமூச்சு விட்டே இதழ்துடிக்க,
"நெஞ்சமே நெஞ்சுடனே கொஞ்சுகின்ற வேளையிலே
மிஞ்சு துயரதனில் மென்மையின்பம் ஒன்றுளது" 20

என்றே உரைத்தாள், இருளாடும் கண்ணழகி ;
வன்னி மிகுமாடிச் சன்னல் தனைத்திறந்தாள்.
நீல முகிலதனை நேராம் முடிப்பிக்ஷு,
சாலை வழியாகச் சாடும் மழைதனிலே
செவ்விய ஆடையிலே சேற்றின் துளிபாயக்
கவ்வும் குளிரதனில் கால்நோவ வந்திடுதல்
கண்டாள்; விழிமிலிர்க்கக் கட்டும் கலை அவிழ
வண்டாய்ப் பறந்து மணிவாயில் வந்தணுகிப்
பிக்ஷுவென்று கூவினள், 'பிக்ஷு'வென்றாள், பின்னுமவள்
'பிக்ஷு!' என்றாள்; யாதோவோர் பித்துப்பிடித்தாள்போல்.
பாம்பை மிதித்துப் பதறினற் போல்துடித்துக்
காம்பனையா தோளுடைய கன்னியவளை நோக்கி,
'என்னம்மா தாயே' எனவே, இளங்குயிலாள்
கன்னி கனிந்த கனிஇதழைத் தான்திறந்து
''ஈர உடையுடனே ஏகுவதென் னேசுவாமி?
ஈர உடைகளைவீர் என்வீட்டுத்திடுவீர்''
என்றே இசைத்திடலும், எல்லாம் தெரிந்தபிக்ஷு
குன்றும் கரைந்துருகும் அன்புக் குரலினிலே:
''பச்சை படர்ந்தமரம் நாளையே பட்டுலரும்
இச்சை அறிபவர்யார்? ஈர உடையுனைவேன் 40
வீட்டைத்தான் பார்க்க விருப்பம் அதிகமுண்டு
நாட்டம் எனக்கின்னும் நன்றாய்த் தெரியவில்லை ;
ஆயினும் வேளைவரும் அவ்வேளை யில்வருவேன்
தாயினும் அன்புடையாய் தன்டம் வருகின்றேன்''
என்றே கடலலைதான் ஏதோ கரையிடத்தில்
விண்டே மறைவதுபோல் சென்றான் மழைதனிலே.
வேளைவரும் நாளைவரும் விண்ணின்பம் தேடிவரும்
பாளைச் சிரிப்புடனே பார்க்கவரு வான்பிக்ஷு
என்றே கணிகைமகள் எண்ணம் பலகொண்டு
பொன்னே யெனுமேனி பொங்கும் அழகு செய்தாள். 50

விண்ணில் இரவிமலர் விம்ம விரைந்துவரும்
கண்ணில் துயில்புகுமுன் காதற் கனவுவரும்
வட்ட முழுமதியம் வாரிதி பொங்கவரும்
கொட்டும் முரசதிரக் கோயில் விழவுவரும்
அன்புடைய பிக்ஷுமட்டும் ஆள வரவில்லை
சென்றன நாட்கள்; சிதைந்தன ஆண்டிரண்டு.
தோகை அவள் ஆசை தோன்றி மறைகின்ற
மேகவான் விற்போல் மிளிர்ந்து மறைந்திடுமோ
என்னும் நினைவுகொண்டே ஏங்கிச் சருகாவாள்.
என்றாலும், 'சொன்னமொழி என்றும் தவறான்காண் 60
ஆகையால் வந்திடுவான் ; அன்பும் அடைந்திடுவாய்,
சோகம் விடு'எனவே சொல்வாள் மனந்தனக்கே.
தேன்கொண்ட பூவினையே தேடும் மதுகரம்போல்,
மான்விழியாள் காதல் மயக்கேறி,மானமின்றி,
ஈசன் வசிக்குமிடம் என்றே, அவள்மனைமுன்
வாசல் வழியாக வந்தான் ஒரு செல்வன்,
வஞ்சி அவள் தாயாம் நச்சுக் குலைக்கிழவி,
பஞ்சு நிறத்தலையாள் பல்லில்லா வாய்திறந்து,
"கோடி பவுன்கொடுப்பான்; கோட்டைத் தளபதிகாண்;
கூடிக் கலத்தலின்றிக் கோதாய் ஒருமுத்தம் 70
தந்தால் அதுபோதும், என்றே, தவிக்கின்றான்"
வந்துள்ளான் நம்முடைய வாயில் தனைத்தேடி
"ஆலயத்தில் முன்னொருநாள் ஆவித் துடிப்பினைப்போல்
காலில் சதங்கை கொஞ்சக் கட்செவிபோ லேநெளிந்து
கைவழியே கண்செல்லக் கண்ணுற் சுவைகாட்டி
ஐயநுண் ணிடையாள்நீ அற்புதமாய் நட்டமிடப்
பார்த்தானும்! அன்றுமுதல் பார்வைதனி லேஉன்றன்
நேர்த்தி வதனமலர் நின்றே சிரித்திடுமாம்
மாதாவாம் என்சொல்லை மானே மறுக்காதே
போதாகுமுன் அவன்முன் போவாய் முகம்மினுக்கி" 80

என்றே பலவிதமாய் ஏழைக் கிழவிசொல்ல
மின்னிடை மாதரசி மேனிமுழுதும்பதறிக்
"கன்னிஎன்றன் கண்களினால் காதல் விளக்கேற்றி
முன்னம் ஒருவனுக்கு முத்தங் கொடுத்துவிட்டேன்
நீரி விடும்கோட்டை நேராம் பொருள்நாடி
ஊரிலுள்ள காமுகரை ஒன்றும் கருத்தில்லை
உள்ளம் விரும்பார்பால் ஓடியே கொஞ்சுவது
கொள்ளி யதனுடனே கொஞ்சும் குணமாகும்"
என்றே எதிர்உரைக்க, ஈனக் கிழவியவள்
சென்றாள் தலையாடச் சேதிசொல்ல வாசலுக்கே. 90

தேசு மிகும்உடலைக் காசுக்கு வாங்கவரும்
மாசு நிறைந்தமக்கள் பாசம் தனைக்கஞ்சி
நேசபிக்ஷுவை எண்ணி நெஞ்சம் நெருப்பாகி
வாசவ தத்தையவள் வாழ்வில் வெறுப்புற்று
வையந் தனைமறந்து வாயிற் பலபிதற்றி
நையும் நடுஇரவில் நாதியில் லாஒருவன்
தீராப் பெருநோயால் திண்டாடித் தேகமெலாம்
ஆறாகச் சீழ்வடிய 'அம்மா பசி'எனவே
கூவி அழைத்தகுரல் கூர்அம்பு போற்பாய்ந்தே
ஆவி தனைப்பிளக்க ஐயோஎன இரங்கி 100

வாழைக் கனியுடனே வாச மிகும்பாலும்
ஏழை யவன்முன்னே இட்டுப் புசிஎன்றாள்.
தீப்பட்ட சுள்ளிஎனத் தேய்ந்திருந்த கைவிரலால்
சாப்பிடக் கூடவில்லை, சன்னப் புழுக்களவன்
மேனிக் குழிப்புண்ணில் மின்னல் எனநெளிய
வானின் நிலாநுதலாள் காணும் தருணமதில்
'நேசன்பிக்ஷுக்கெனவே போற்றி நிறைத்தஉடல்
நீசர் விழிசுடுதல் நீங்கிப் பிழைப்பதற்கு
நொய்ய அவன்போலே நோயை அடைந்திடுவேன்;
தெய்வம்வழி கூட்டும்'என்றே சித்தம் துணிந்துவிட்டாள்

தோன்றி, கணம்மறைமுன் துள்ளும் சிலபுழுவைத்
தேங்குழல்போ லேயெடுத்துத் தின்றாள் திகைக்காமல்.
வஞ்சியவள் செய்கைகண்டு, வாய்மூடி மெய்நடுங்கி
அஞ்சி அகன்றானவ் வாதுலன்மை சாசமென்றே.
காதற் பசிதனக்குக் கண்ணீர் உணவென்று
போதனை செய்ததுவோ பொல்லா விதியதுதான்!
நாட்கள் சிலசெல்ல நங்கை உடல்மழுங்கக்
காட்சி யளித்ததங்கோ கன்னங் கருங்குட்டம்!
கூன்முதுகுத் தாயார் கொடுத்த மருந்துகளை
வீண்செய்தாள் உண்ணாமல் வேடிக்கை காட்டிநின்றாள்.

இந்து நிகர்முகத்தில் இருளே கவிந்திடவும்
சுந்தரந் தான்குறைந்தாள், சுற்றம் தனையிழந்தாள்.
ஊரார் அவளிடத்தில் ஊறிவரும் நோய்கண்டு
பாராமல் பார்த்துப் பரிகாசம் செய்தார்கள்.
தேய்பிறையே போல அவள் தேகம் குறைந்ததனால்
நாய்களும் அன்னவளை எள்ளி நகைநாடும்;
கொத்துங் கருங்காகம் கூடிக் குறிப்புன்னைக்
குத்திக் குருதிசெய்யும் கொள்வாள் மிகுவாதை;
கார்காலம், முன்வேனில் என்றும் பருவமெலாம்
பார்மேவி அன்னவளைப் பார்த்துப் பயந்துசெலும்; 130

பக்கம் இருந்தவளைப் பாலிக்க யாருமின்றித்
துக்க விழிநீர்தான் சொட்டுங் களைப்புடனே
நாட்டினெல்லை தாண்டினாள்; நாட்டு மரத்தின்கீழ்க்
கோட்டான் எனவிழிப்புங் கொண்டு குளிர் இரவில்
தூய மணிமஞ்சம் தோய்ந்த மலருடலாள்
பாயும் புழுதி படிந்த தரைக்கிடந்தாள்.
காற்றிற்கும், கார்முகிற்கும், காயும் ரவிதனக்கும்.
ஊற்றிற்கும் அன்பதனை முன்னம் உரைத்தபுத்தன்
பாத மலர்பணிந்து பாரெங்கும் அன்புமதப்
போதந் தனைப்புரிந்து பொன்மகத நாடடைய 140

அவ்வழி யாகவரும் அன்பன் உபகுப்தன்
செவ்விய தாள்அவள்தன் தேகத்தில் பட்டிடற
நின்றான்; விழிகள் இருள்நீந்த நோக்கினான்;
அன்பு பெருக்கெடுப்ப, ஆர்வக் குரலினிலே
"ஐயோ அபசாரம்" என்றே அவளை இரு
கையால் எடுத்திடலும் காத்திருந்த அக்கணிகை;
"இன்றே அடிகள், இணைமா மலர்விழிகட்
கென்றன் முகங்காணும் இச்சை பிறந்ததுவோ!
மாலை மயக்கினிலே முன்பு மழைதனிலே
வேளை வரும்என்றுரைத்த வேளை இதுதானோ? 150

பிச்சை எடுத்துண்ணும் பேய்நான் தமதுள்ளம்
மெச்ச எதுதருவேன்? மேனி தனிலிருந்த
கட்டிளமை நீங்கக் கடுநோய் மிகக்கொண்டு
பட்டமரம் போலப் பசையிழந்து போனேனே!
நாகத் தலையிருக்கும் நல்ல மணிபோல்என்
ஆகத்தி னுள்ளேநும் ஆசை ஒளிருதையோ!"
என்றே புகன்றிடலும், ஏதும் மனம்மறவா
அன்பு நிறைமுனிவன், அபலை மிடிகண்டே
கொண்ட உடைகிழித்துக் கோதை உடல்தனிலே
கண்ட கரும்புண்ணைக் கட்டுதற்கு முந்துங்கால், 160

குட்டப் பிணிபிடித்த கோதை, "எனதுடலைத்
தொட்டால் நுமையுமிந்தத் தொற்றுநோய் பற்றிவிடும்
வேண்டாம், அகன்றிடுவீர்!" என்று விழிகடலாய்
மூண்ட துயராலே மூர்ச்சை அடைந்துவிட்டாள்.
மோகக் கணிகையினை மூர்ச்சைதெளித் தேஎழுப்பி
மேகத் திடைவந்த வெண்ணிலா வைக்காட்டிக்
"கண்டிடுவாய் விண்ணையங்கே; கங்குற் கருங்குட்டம்
கொண்டே நிலாவென்னும் சீழைக் கொடுப்பதுவும்,
புண்ணில் நெளியும் புழுப்போலப் பல்கோடி
விண்மீன் துடிதுடித்து வேதனை கொள்வதுவும் 170

நன்ருகப் பார்த்தறிவாய்; நாடெல்லாம் ஈதேபோல்
புன்னையில் ஆழ்ந்திருக்கப் பூவாய் வருந்துவதென்?
எல்லாப் பிணிகளையும் இல்லா தொழிப்பதற்கு
நல்லோன் நமதுபிரான் புத்தன் அருளொளியே
தக்க மருந்தாகும்; சான்ருேன் அவன் சரணம்
எக்காலும் போற்றுவதே இன்பமிதை நம்புகநீ''
என்றே அவள்செவியில் ஏதோ புகன்றிடலும்,
புன்னைய் அகன்றுமங்கை பூர்ணிமையைப் போல்நின்ருள்.
''மேனி யழகினிலும் மேன்மையுறும் உள்ளழகை
யானிங் கணையநினைந் தாசையுடன் வந்தேன்காண் ;
தர்ம வெளியினிலே சற்றும் பயமின்றி 180
நிர்வாணம் கொண்டேநாம் நித்தம் சுகித்திருப்போம்.
வாராய்'' எனப்பிக்ஷு சோலை வழிநடக்கத்
தீராத நோய் தீர்ந்தாள், சென்ருள் அவன் பின்பே.
வேளைவந்த தென்னவே விண்ணின் இருள்நீக்கிக்
காலை மலர்ச்சியுடன் வந்தான் கதிரவனே !

# இரத்த ஓவியம்

## (அகவல்பா)

அமுதம் என்னும் அழகுப் பெயராள் ;
கன்னிப் பருவம் கனிந்த வனமலர் ;
புகழ்சால் செந்தமிழ்ப் புதுவை நகர்சூழ்
கானில் ஆடும் கலாபம் ; கண்டோர்
உள்ளத் தொன்றும் ஒயில்மிகு மறத்தி ;
அம்புயம் தன்னில் அளிகள் இரண்டு
சொக்கிற் றென்னச் சுடர்செய் கண்ணுள் ;
தங்கம் உருக்கித் தகதகத் திடவே
பவளப் பொடியில் பனிமலர்க் கள்ளும்
கொவ்வைக் கனியின் சாறும் கூட்டி, 10

அந்தித் திரையில் ஆதவன் தீட்டும்
சுந்தரச் செக்கர் தோற்றம் கண்டு
விழியும் மனமும் விண்ணில் மிதக்க
மகிழ்வில் மூழ்கி மௌனம் பற்றிப்
பூத்திடும் முல்லைப் புதரின் பக்கம்
வார்த்த செப்பு வடிவென நின்ருள்.
அக்கால், தனித்து அவ்வழியாக
செவ்வே ளனைய திருநிறைக் காளை
சித்தனன் என்ற சித்திரக் கலைஞன்
வந்தான். வானை, வனிதையை நோக்கினுன். 20
"அற்புதக் காட்சி அமைப்பாய் ஓவியம்"

என்றே கண்ணும் இதயமும் சொல்ல;
கீழே கிடந்த வேல்முள் எடுத்து
ஆலமரத்தை அணுகினன் விரைந்து
சால வித்தை தளிர்க்கை செய்தது 25
வல்லவன் தனக்குப் புல்லும் ஆயுதம்!
அமைவொடு இருளும் அணுக,
இமைகளை அசைத்தாள் எழுதொணுப் பாவையே!

(சிந்து)

"இன்னும் ஒருநிமிடம்—நிற்பாய்
இமை சிமிழ்க்காமல்"
என்ற உரைகேட்டு—மழைமின்
என்ன, உடல் நடுங்கிக்
கன்னிப் பருவத்தினள்—செவ்வான்
காட்சி தனை மறந்து
முன்னும் பின்னுமாகத்—தனது
வேலின் விழி விடுத்தாள். 1

விழுதுறும் ஆலமரப்—பட்டைமேல்
வேலமுள் தானோட்டி
பொழுதமர் வேளையிலே—தனது
பொன்னின் வடிவமதை
எழுதிடும் காட்சிகண்டாள்—கலைஞன்
இளமை நிலையுணர்ந்தாள்
பழுது விளைந்திடுமோ—என்றஞ்சிப்
பட்சி எனப்பறந்தாள்! 2

'கோலக் கவிதையிலும்—கண்டிடாக்
கோதற்ற கோமளத்தைக்
காலமென்பான் எனது—விழிமுன்
காட்டி மறைத்தனனே?
நீல விண்ணை அளக்கும்—மதியை

நேர்த்த நயனங்களை
ஆல மரந்தனிலே—எழுத
யாவரே சம்மதிப்பார்?' 3

என்றதோர் எண்ணமுடன்—கரடி
என்ன வந்த இருளில்
சென்றனன் வாழ்குகைக்கு—எனினும்
சிந்தையில், 'அவ்வணங்கை
இன்னும் ஒருமுறைதான்—கண்டிடா
இருகண் இருந்துமென்னே?
புன்னையின் பூப்போல—இரவே
புலர்வாய்!' எனத் துடித்தான். 4

(எண்சீர் விருத்தப்பா)

மயில்தோகை யால்வனைந்த குடிசை யொன்றில்
மலர்விழியாள் மையிருளின் மயக்கந் தன்னால்
துயிலுற்றாள்; அத்துயிலில் சுடர்வான் வில்போல்
சுந்தரமாம் கனவுபல தோன்றும் வேளை
வைரம்போல் நகைஒளியை வாரி வீசும்
வடிவழகன் சித்தன்னன் வரைந்த சித்ரம்
கயற்கண்கள் பெற்றதுபோல் காட்சி கண்டு
கண்மலர்ந்தாள், காலைமலர் வேளை தன்னில்- 5

உள்ளத்தே நினைவெழுப்பும் நற்கனவின்
உண்மைதனைக் கண்டறிய ஆசை யுற்றுக்
கள்ளோடு கலந்ததினை மாவைத் தின்னும்
கருத்ததனில் வெறுப்புற்றுக் குடிலை நீங்கி
முல்லைப்பூப் புதரோரம் வந்து நின்றாள்.
முத்தங்கள் உடைவனபோல் உதிர்த்த முல்லை
சொல்லுமொரு வாழ்வென்னும் சோகங் கண்டு
துடிப்புடனே ஆலமரந் தன்னைத் தொட்டாள். 6

உற்றசில விநாடியிலே என்னை ஒப்ப
ஒண் உடலம்; மின்னல்இடை; ஓங்கு மார்பு;
கற்றைகுழல்; சங்குமிடர்; வள்ளைக்காது;
கமலமுகம்; மாங்கனியின் கன்னம் தீட்டி
சுற்றுசுடர் நிகர்த்தஇரு கண்ணை மட்டும்
சோதிபெற எழுதிடஏன் மறந்தான்? அந்தக்
குற்றமெலாம் எனதாகு மன்றோ? என்று
குறைபட்டாள் கண்ட கனாப் பலியாக் கோதை. 7

அறிவுயர்ந்த கவிஞரிலா அவையைப் போன்ற
அந்தகமாஞ் சித்திரத்தின் அமைப்பை நோக்கி
வெறிமனத்தாள் வெகுநேரம் நின்றாள். கங்குல்
விடியாதோ எனத்துடித்த கலைஞன், துள்ளி
மறிஎனவே புதர்தாண்டி, குடைநேர்ஆல
மரந்தந்த நீழலிடை வந்தபோது
பொறிஐந்தும் வியப்பதனால் போதை கொள்ள
பூவிழியாள் எதிர்நிற்கும் புதுமை கண்டான்! 8

அமுதம்தன் கடல்விழியின் ஆழம்காட்ட
அதனைஅவன் வான்விழியால் அளந்துவக்க,
குமுதப்பூச் செவ்விதழில் குமிண்சிரிப்புக்
குலுங்கிடவே குடத்தனத்தாள் நாணி நின்றாள்.
இமைப்போதில் அவ்விருவர் நெஞ்சிரண்டும்
எண்ணரிய ரகசியமே பேசி ஒன்ற,
தமிழாடும் நாவழகன் தயக்கத்தோடு :—
"தயைகூர்ந்து கண்எழுதச் சற்றே நிற்பாய்!" 9

என்றேதன் சொல்லினிமை காட்டலானான்.
இருவிழியில் கருத்தெல்லாம் எட்டிப் பார்க்க
ஒன்றும்விள் ளாதமுதமவள் ஊமைபோல
ஓவியத்துப் பாவைஎன உற்றுப் பார்த்தாள்.

அன்பென்னும் சுடர்போலத் தாவி அன்னோன்
அமுதூறும் அவளிதழாங் கமலம் தன்னில்
பொன்னென்ன முத்தத்தின் புதுமை தீட்டிப்
புதுத்தேனை சுவைத்தமணி வண்டே யானான். 10

"துடுக்கான செயல் செய்தாய் பெயர்தான் என்ன?
சொல்லிடுக!" என்றமுதம் பாம்பாய்ச் சீற,
நடுக்கமொரு பக்கமகிழ் மற்றோர் பக்கம்
நனவிழந்த செய்கையெலாம் ஒன்றாய்க்கூடி
ஒடுக்கியது அவன்நாவை எனினும், சொல்வான்:—
"ஒண்டொடியே! என்பெயர்சித் தன்னன் என்பார்
அடுத்தமலைக் குகைதிருத்திப் புதுவை வேந்தன்
அழைத்திடவே சித்திரங்கள் அமைக்க வந்தேன். 11

பொன்னிநதி செந்நெல்தரு சோழ நாட்டின்
பூம்புகார்ச் சிற்பியர்கள் மரபில் பூத்தேன்.
அன்னை இல்லை; தந்தையுண்டு. அவரும் என்போல்
அருஞ்சித்ரம் அயன்போல ஆக்கும் மேதை.
தன்னந்தனி யாய்நேற்று உலாவ வந்த
தருணத்தில் நினைக்கண்டேன். உண்மை கேட்கில்?
என்னை உனக் கீந்துவிட்டேன்; உனை நானேற்க
எதிர்நிற்கும் தடை என்ன? இன்பச் செல்வீ!" 12

என்றுமொழிந் தவள்உள்ளக் குறிப்புணர்ந்து
இனிதெடுத்து மார்பணைந்து இதழையுண்டு
துன்பமிலா இன்கடலின் அலைமேல் திங்கள்
சோதிஎனக் கலந்திழைந்த, சுகத்தைக் கண்டு
கன்னிஎனில் கரும்பென்னும் முடிவு கொண்டான்
கார்கண்ட மயில்போலக் களிக்கும் நெஞ்சன்
அன்றுமுதற் களவொழுக்கம் அநுசரித்தான்.
அறுதினங்கள் சென்றனஓர் அந்திப் போதில் 13

இருளென்ற நீலமணி மேடை மீது
எண்ணிலா விண்மீனும் விளக்கு வைத்து
விருந்துண்ணக் காதலரை வரவு கூறி
வெண்ணிலவு அல்லிஎன விரியும்வேளை
கருங்கூந்தல் அமுதமவள் ஆலின் கீழே
காதலனே நடந்துவரும் வழிமேல் கண்ணுய்
புருவங்கள் தான்நெரித்து முன்னும் பின்னும்
போய்ப்பார்த்து விரகத்தால் புழுங்க லானுள். **14**

கலைக்குமரன் சித்தன்னன் நிலா ததும்பும்
காவிருந்து குயிலிசைக்கும் கீதம் கேட்டான் ;
சிலையினிலே உயிர்புகுந்த திருவாம் அன்னுள்
தேன்மொழியாள் அழைக்கின்ருள் என்றுணர்ந்தான்.
தலைநடுங்கத் தன்தந்தை அடுத்த குன்றில்
தனியிருந்து சித்திரங்கள் தீட்டு கின்ருர் ;
அலைபுரளும் கடலணையும் நதிபோல் யானே
அமுதத்தை கலந்தணைந்து இன்பம் காண்பேன். **15**

எனஅகமே துடிதுடிக்க இருக்கை விட்டு
எழுந்திடவும், தந்தை எதிர் இருமிவந்து,
"எனதுயிரே இளங்குமரா! இரவில் எங்கே?
எதைநோக்கிச் செல்கின்ருய்? திங்க ளாருய்
உனதுசெயல் மாறுதலாய் உள்ள தேடா ?
உண்மையினை உரைத்திடுவாய் மேலும் நாளை
உனதுதிறல் ஓவியத்தைக் காண்பதற்கு
உலகாளும் வேந்தனுமே வருகின் ருனும்." **16**

என்றுஅருந் தந்தைசில எடுத்துக் கூற
ஏந்திழையை அன்றிரவு காணும் வேட்கை
தன்னுளத்தே தணித்திட்டான், எனினும், காதல்
தகித்ததவன் ஜீவனையே தணலாய் நின்று.

"மன்னனுக்கு என்கடமை சித்ரம் தீட்டி
வருகின்றேன் மன்னிப்பாய் திருவே" என்று,
தென்றலின்பால் காதலிக்குச் சேதி சொல்லித்
சித்ரமிலா இருட்குகையிற் சென்றிருந்தான். 17

"வானமதில் வட்டநிலா வந்தாற் போல
வடிவழகன் முகம்காட்ட வருவான் நன்றே
தேனிதழில் முத்தமிழைச் சேர்ப்பான் நெஞ்சில்
தெய்வீகக் காதலொளி திகழு மன்றோ!
கானகமே! கரும்இரவே! உமக்கே நல்ல
காட்சி யுண்டு! கவலையுமேன்? பொறுப்பீர்" என்று
மீன்விழியாள் இமையாது நோக்கத் தென்றல்
வந்ததன்றி சித்தன்னன் வரவே யில்லை! 18

சென்றதினம் காதல்குளிர் கீதம் செய்த
தென்றலது இன்றவளைத் தீயாய்த் தீண்டக்
கன்னமதில் கையூன்றிக் கண்ணீர் சிந்திக்
கல்லாகச் சமைந்திருந்தாள். அக்கால் பின்னே
பன்னெடுநாள் பசிகொண்டு பதைத்துத் தீயின்
பந்தங்கள் கண்டேற்று வந்த வேங்கை
மின்னிடையாள் தனைக்கண்டு சீறிப் பாய்ந்து
மேல், கால், கை உடல்கிழித்து உயிர் போக்கிற்று! 19

(கும்மி)

தந்தையின் சொற்படி சித்தன்னனும் —வரும்
தார்வேந்தன் கண்டு மகிழுதற்கு
விந்தைகொள் சித்திரம் தானெழுதப் —பல
வித்தார யோசனை செய்திளைத்தான்.

பகல்சென் றிரவும் படர்ந்திடவே —ஒளி
பாய்ச்சிப் பொலிந்த திருவிளக்கில்

நகைத்து அமுதம் அழைத்தனளோ ! —அவன்
நடந்தனன் கான்வழி தான்நோக்கி

'காதலி தன்னைப் பிரிந்திருப்பேன் —நிலை
கட்டிலா வானைப் பிரிந்திருக்கும்
ஆதவன் நிலைபோ லாகுமென —யான்
அன்பாய் அவள்பால் எடுத்துரைப்பேன்.

என்னும் கருத்துடன் ஆலடிக்கீழ் —உயிர்
ஏந்திழையை எதிர் பார்த்திருந்தான்.
கன்னங் கரியதோர் கொண்டல்வந்து —வான
காய்ந்த நிலவினை மூடியது.

பார்த்துப் பார்த்து விழி பூத்துவிட்டான் —எழிற்
பைந்தொடி வந்திடு வாளெனவே
நேத்திரம் மூடிடாக் கோட்டான்களும் —நடு
நிசிகண்டு மெள்ள உறங்கினவே.

'நேற்றுயான் வந்திடாக் காரணத்தை —அவள்
நெஞ்செண்ணி இன்றாடி நின்றனளோ ?
கூற்றுவன் தடுத்துக் கூறிடினும் —நாளை
குளிர்நகை காட்டியே வந்திடுவாள்'

என்னும் திடங்கொண்டு நள்ளிரவில் —மன
ஏக்கத் தோடேகிக் குகையடைந்து
மன்னன் உதயம் வருவானெனப் —படம்
வரைந்திடத் தூரிகை கைஎடுத்தான்.

(எண்சீர் விருத்தப்பா)

அடர்மழையின் மூட்டத்தில் படரும் மின்போல்
அவன்அறிவில் கற்பனையின் அலைகள் தோன்றி
நடம்புரிய லாயிற்று அடுத் தடுத்தும்
நான்குமுறை தோன்றியஓர் கருத்தைப் பற்றி

கடகடஎன் றுடும்இடிக் கூட்டம் போலக்
கண்களிலே பயங்கரத்தின் கவினைக் காட்ட
இடர்அடவி தனிலோர்பெண், புலியின் வாய்க்கு
இரையாகும் காட்சிதனைக் குறிப்பு வைத்து 1

மஞ்சளொடு நீலமணி வண்ணம் கூட்டி
மரகதத்தின் நிறத்தினிலே காட்டைத் தீட்டி
பஞ்சுநிற வெண்மையிலே பழுக்கா சேர்த்து
பூலாச்சுளையின் மேனிதனைப் புலிக்குப்பூசி
அஞ்சனத்துக் கோடுகளை அதன்மே லிட்டு
அம்பிறைபோல் கோரப்பல் வாயுள் காட்டி .
வெஞ்சினத்தை விழிகளிலே விடம்போல் சேர்த்து
மலரிதழ்போல் வளைந்துநிமிர் நாவைத் தீட்டி 2

கள்ளர்களே மறைந்திருந்து குத்தும் வாள்போல்
கால்களிலே கூர்நகங்கள் கௌவத் தீட்டி
வெள்ளருவி எனப்பாயும் வீரம் காட்டி
விழிபிதுங்கக் குழல் அவிழ, விதிர்ப்புத் தோன்ற
வில்வளைவு எனப் பெண்ணின் உடலைக்காட்டி
விசையற்ற அம்புகள்போல் கைகால் தீட்டி
விள்ளரிய மரணபயம் இதழ் விலக்க
விம்மிடுமார் தனில்பொங்கும் ரத்தம் தன்னை 3

செக்கரென நிறம்சேர்த்துத் தீட்டிப் பார்த்தான்
திருப்தியது அவன்மனத்தைத் தீண்டவில்லை
தக்கதெனத் தணல்நிறத்தைப் பூசிப்பார்த்தான்
சரியில்லை எனக்கண்டான் பெண்ணின் மார்பில்
எக்களியாய் வழிகின்ற இரத்தம் காட்ட
எந்தநிறம் பொருத்தமான எண்ணி எண்ணித்
தக்கதெனத் தன்மார்பில் புதைத்தான் வாளைத்
தாவிற்று செங்குருதி தடவி வீழ்ந்தான். 4

புதுவைநகர் மன்னவன்றன் பரிவா ரங்கள்
புடைசூழ உதயத்தில் குகைய டைந்து
ஒதுக்கோரம் விடாதபடி எழுதி யுள்ள
ஓவியங்கள் பலநோக்கி உவகை மிஞ்ச,
வியப்புற்றுப், புலிச்சித்ரம் தன்னை நோக்கி
வினவினன் ஓவியனின் பெயரை ஆங்கே
எதிர்நின்று முதுகலைஞன், "வேந்தே! இஃதை,
எழுதியவன் என் மைந்தன் ஆனால் என்ன?" 5

என்றுரைத்து எரிமூட்ட மறைத்து வைத்த
இளங்கலைஞன் இரத்தஉடல் எடுத்துக் காட்டித்
தன்விழிகள் கோடைமழை பொழிய விம்மித்
"தனையா, என்தவப்பயனே! கண் திறப்பாய்!
மன்னனைப்பார்! மாட்டாயோ? கலைக்கு யிரை
மரணத்தின் கையளித்தாய்! மகனே! மகனே!
இன்னிலமேல் இனிஎன்னை 'அப்பா' என்று
எவரழைப்பார்? சித்தன்னு, தமிழ ரேறே!" 6

(அகவல்பா)

என்றே பலவிதம் ஏங்கிக் கதறினன்.
மன்னன் அவனது மாதுயர் கண்டு,
"மாண்டோர் அழுவதால் மறுபடி வருவரோ?
உள்ளம் தேறுக; உன்றன் மகனே
தமிழ்மொழி உளவரை தமிழகம் உளவரை
சித்திரக் கலைதான் செகமேல் உளவரை
குன்றுப் புகழைக் கொண்டு விட்டான்!
**சித்தனன்** என்ற சீர்த்திப் பெயரால்
உத்தமக் கலையின் **வாசலொன்** றிங்கே
அமைப்பேன் அதற்கும் ஆசான் நீயே! 10

*அற்புதக் கலைஞன் அங்கமே அனலில்*
*வெந்தே கருக விரும்பேன் இவனை*
*இங்கே சமாதி யிட்டே யானும்*
*இறைஞ்சித் தொழுவேன்'' என்று*
*உரைத்தான் தமிழால் உலகாள் வேந்தே.* **15**

## கனவு

ஆடி நடந்தேன் அசைந்
தாடி நடந்தேன் வனம்
நாடிமின்னோடு தெனும் கொடிப் பாதையில்
ஆடி நடந்தேன். 1

செக்கச் சிவந்தது வானம்
செக்கச் சிவந்தது ஏழை
விக்கிவிடும் மூச்சில் வீசும் நெருப்பைப்போல்
செக்கச் சிவந்தது. 2

புட்கள் பறந்தன கூடிப்
புட்கள் பறந்தன நல்லோர்
உட்பகைக் கஞ்சியே ஓடும் அகந்தைபோல்
புட்கள் பறந்தன 3

இருளுங் கவிந்தது மைபோல்
இருளுங் கவிந்தது கல்விப்
பொருள் தேடா நெஞ்சில் பொருந்தும் மருளைப்போல்
இருளும் கவிந்தது, 4

கர்ஜனை ஓசை சிங்க
கர்ஜனை ஓசை தமிழ்
தர்மப் பயிர்காக்கும் தக்கோர்கள் சொல்லைப்போல்
கர்ஜனை ஓசை. 5

எண்ணம் உதித்தன பல
எண்ணம் உதித்தன நீல
வண்ணக் கடலின்மேல் மின்னும் அலைகள்போல் 6
எண்ணம் உதித்தன.

மொட்டுகள் தைத்தது கூர்
மொட்டுகள் தைத்தது நகர்
உட்புகும் யுவர்கள் உறும் நாகரிகம் போல் 7
மொட்டுகள் தைத்தது.

ஆவென் றலறினேன் பயந்
தாவென் றலறினேன் கைம்மை
நோவிற்சிக்கி நெஞ்சம் நோவுங் குமரிபோல் 8
ஆவென் றலறினேன்.

வழிந்தது காலில்
இரத்தம் வழிந்தது உழவர்
கருத்த விழியில் கசிந்தூறும் நீரைப்போல் 9
இரத்தம் வழிந்தது.

மூர்ச்சைய தானேன் சோர்ந்து
மூர்ச்சைய தானேன் நன
வோர்துளியின்றி உயிரற்ற உடலைப்போல் 10
மூர்ச்சைய தானேன்.

வானத்தை முட்டும் நீண்ட
வானத்தை முட்டும் பெருங்
கானகயானை கவின் தந்தத்தைக் கொண்டே 11

கட்டிய வீடு யாரோ
கட்டிய வீடு அதில்
பட்டப்பகற்போ லொளி சிந்தும் வயிரத்தூண் 12

வீட்டிற்கு முன்னே வண்ண
வீட்டிற்கு முன்னே கம்பன்
பாட்டின் சுவையாவும் பாவை உருக்கொண்டு 13

நின்றாள் ஒருத்தி நேரில்
நின்றாள் ஒருத்தி அவள்
தன்னுணர்ச்சி யாவும் கண்புயலில் வீச 14

அலைந்தது உள்ளம் சிதறி
அலைந்தது உள்ளம் ஒரு
நிலையின்றி ஓடும் நிறமற்ற காற்றைப்போல் 15

காரை நிகர்க்கும் கருங்
காரை நிகர்க்கும் குழல்
சீரொடு கோதிப் பிறைதேக்கும் தோகைபோல் 16

அருகினில் வந்தாள் என்றன்
அருகினில் வந்தாள் தென்றல்
உருபெற்று வந்தாற்போல் ஒயிலுக்கு ஊற்றினள் 17

பேசினள் ஆகா! கொஞ்சிப்
பேசினள் ஆகா! வீணை
வாசிப்பு, குழலன்று! ஆசியா ஒளிபுத்தன் 18

நேசித்த சொல்லை மிக
நேசித்த சொல்லை காந்தம்
ஊசிகொள் பான்மைபோல் உள்ளம் பறிபோச்சு 19

சற்று நேரந்தான் சங்கை
சற்று நேரந்தான் பின்பு
உற்றிருவர் நோக்க உவகைப்புது வெள்ளம் 20

கூடிற்று ஒன்ருய்ப் பொங்கிக்
கூடிற்று ஒன்ருய் நதி
ஓடியே கடல்முத்தம் சூடிடும் பான்மைபோல் 21

அந்தநல் வேளை இன்பம்
அந்தநல் வேளை "நான்
இந்த இடம்வந்ததேது நீ யாரென்று 22

விள்ளுக நங்காய்! உண்மை
விள்ளுக நங்காய்! நெஞ்சம்
சல்லடைக் கண்ணுன மீனருள் வான்போல்" 23

என்றே யிசைக்கப் புகல்
என்றே யிசைக்க அவள்
புன்முறு வல்செய்து கன்னித் தமிழில், 24

"விள்ளுவேன் கேளாய்! யாவும்
விள்ளுவேன் கேளாய்! கானில்
முள்தைத்து நீ மூர்ச்சையாகிய போதில் 25

வந்தேன் நானங்கே ஓடி
வந்தேன் நானங்கே வாழும்
அந்தரம் விட்டுன்னைக் காத்திட அன்பால்" 26

என்று புகன்றே உண்மை
என்று புகன்றே "தடை
ஒன்றுங் கூருதென்ற ஞேடுவா" என்ருள். 27

ஊசியின் வழியே தைக்கும்
ஊசியின் வழியே மௌனப்
பேசியே பின்செல்லும் பேதைநூ லைப்போல். 28

நிழல்போல் தொடர நானே
நிழல்போல் தொடர வானின்
அழகியும் வழிகாட்டி அமைதியா யேகினள் 29

தங்க மரங்கள் பசுந்
தங்க மரங்கள அதில
பொங்கும் புதுநிலா போன்ற வாடாப்பூ 30

படிக நீரோடை தூய
படிக நீரோடை ஞானி
வடிவினைப்போல் பாச மற்றிசை பாடிச் 31

சென்றிடும் ஓடை பெருகிச்
சென்றிடும் ஓடை ஜீவன்
குன்றிடுமுன் செல்லும் குடிவாழ்க்கை யைப்போல். 32

கல்லும் முகர கருங்
கல்லும் முகர வாசம்
அள்ளித் தெளித்திடும் அம்போருகம் மீது 33

மின்னகை தவழ இதழில்
மின்னகை தவழ உயர்
அன்பே வடிவாயானந்த மதாய்க் குந்தி 34

ஒருவன் இருந்தான் காளை
ஒருவன் இருந்தான் வில்லின்
புருவத்தை நெரித்திமை பொருந்திய வண்ணமே. 35

உற்றே அவனைக் கூர்ந்து
உற்றே அவனை யானும்
சற்றே பார்த்து மூச்சு விட்ட சமயத்தில் 36

மாணிக்கத் தட்டில் நாக
மாணிக்கத் தட்டில் 'என்றன்
காணிக்கை யீதென்று' வானத்துத் தேவப்பெண் 37

பலவித மாக வண்ணம்
பலவித மாக சுடர்
இலகிடும் பாத்திரம் ஈரைந் ததனிலே 38

அமுதம் நிறைத்து திவ்ய
அமுதம் நிறைத்து 'தங்கள்
குமுதவாய் பருகிடக் கோரிக்கை' என்று 39

கொண்டு கொடுத்தாள் வேண்டிக்
கொண்டு கொடுத்தாள் ஜீவன்
உண்டில்லை யோ என்று ஐயுட்டும் காளைக்கு. 40

கண்கள் மலர்ந்தே அருள்
கண்கள் மலர்ந்தே தனக்
குண்ணக்கொடுத்ததை உற்று நோக்கிக் காளை 41

"வானம தொன்று படர்
வானம தொன்று அதில்
மீனினம் எண்ணில மெய்யிது மெய்யே! 42

காற்றது ஒன்று குளிர்
காற்றது ஒன்று அது
ஏற்றுத் தழுவு மிடங்கள் கணக்கில்லை! 43

சூரியன் ஒன்று செழுஞ்
சூரியன் ஒன்று அதில்
வீறிட்டெழும் சுடர் விண்ணுக் கடங்கா 44

கண்ணாடி ஒன்று ரசக்
கண்ணாடி ஒன்று அது
எண்ணற்ற முகங்காண இடந்தானே யீயும் 45

முகிலது ஒன்று மழை
முகிலது ஒன்று அதில்
நெகிழும்நீர்த் துளிகளோ நினைவில் அடங்கா! 46

வீதியோ ஒன்று செல்லும்
வீதியோ ஒன்று அந்த
வீதிவழிச் செல்லும் மாந்தர் அனேகம்! 47

மண்ணது ஒன்று களி
மண்ணது ஒன்று வேளான்
பண்ணிடும் பாண்டங்கள் பற்பல வாகும்! 48

நடிகை ஒருத்தி! நல்ல
நடிகை ஒருத்தி! அவள்
அடைவுகள் காட்டுவ தாயிரங்கோடி! 49

வீணையே ஒன்று நாத
வீணையே ஒன்று அதில்
பாணர் பலர்பல கான மிசைப்பார்! 50

பாத்திரம் பத்து வண்ணப்
பாத்திரம் பத்து அமுது
மாத்திரம் ஒன்று மாதேநீ கொணர்ந்த மா 51

சூத்திரம் கண்டேன் அருஞ்
சூத்திரம் கண்டேன் இன்றே
ஆத்திரம் நீங்கிற்று அகிலத்தின் உயிர்யாவும் 52

ஒன்றென்று சொல்லும் தெய்வம்
ஒன்றென்று சொல்லும் உண்மை
இன்சுடர் காட்டிஎன் நெஞ்சிருள் போக்கிட்ட 53

அம்மையே! என்று; சத்தி
அம்மையே!'' என்று, மூச்சை
இம்மென் றொடுக்கினன் எழுந்ததோர் ஜோதி! 54

விட்டில் விளக்கை சித்ர
விட்டில் விளக்கை கூடும்
சட்டத்தைப் போலத் தயக்கம தோன்றின்றி 55

கூடிக் கொண்டாளே! அதில்
கூடிக் கொண்டாளே! என்னை
நாடியே கூட்டிக் கொண்டே போன நங்கை 56

விண்மீனைப்.போல; சின்ன
விண்மீனைப் போல; இந்த
மண்மேல் விழுந்தென் மருளுந் தெளிந்தே 57
ஆடி நடந்தேன்......

# காணிக்கை*

## 1

சீர்மிக்க கேரளத்தில் ஆல்வா யாறு
செழிப்பருளும் காலடியே என்ற ஊரான்;
பார்தன்னில் அவளை மணம் கொண்ட பார்ப்பான்
பரமனடி சேர்ந்திட்டான்; அவளென் செய்வாள்?
பேர்கொண்டாள் விதவையென உண்மைப் பேரோ
பெருமைமிகும் மேற்சாதி ஆர்யாம் பாளாம்
நேர்கண்டு அவள் மிடியை நீக்கி வைத்த
நெருப்பூதும் பொற்கொல்லன் தன்னைச் சேர்ந்தாள்.

## 2

சூல்கொண்டாள் அதைமாற்ற மருந்து தின்னத்
துடிதுடித்தாள் என்றாலும் பிரம்மஹத்தி
வேல்போலத் தனைத்தாக்கும் என்றே அஞ்சி
வெருண்டிட்டாள்; ஊரார்கள் வசை நினைத்தாள்;
நாள் செல்லச், சூல்பெருக மயங்கிச் சாய்ந்தாள்
நடுநிசிநேர் விழிதிறந்து தியங்கிப் பார்த்தாள்
பால் போன்ற வைகாசித் திங்கள் தன்னில்
பாலகனை கீச்சிட்ட பாடல் கேட்டாள்.

---

*ஆதிசங்கரர் தன் பிறப்பினை உணர்தல்.

தோன்றிட்ட விழுதததுதான் ஆல்த னக்குத்
துணையாகும் பலமாகும் என்றே தேர்ந்து
தான்பெற்ற பிள்ளைதனை ஊரார் காணத்
தாலாட்டிச் சீராட்டி பாலும் ஊட்டி
மான்குட்டி போல்வளர்த்தாள்; **சங்கரன்** என்று
மகிழ்ச்சியுடன் பெயர்வைத்தாள் வளர்ந்த மைந்தன்
தேன்கண்ட வண்டதுபோல் ஒருநாட் காலை
சென்றிட்டான் கான்வழியே திரும்ப வில்லை!

4

சென்றிட்ட மைந்தனையே எண்ணி எண்ணி
சித்தந்தான் பித்தானாள்; சோதி டர்பால்
சென்றோடிக் கேட்டிட்டாள்; கோயில் சென்று
சேவித்தாள்; யாத்ரீகர் தம்மைக் கேட்டாள்;
என்செய்தும் பத்தாண்டாய் மகனைப் பற்றி
ஏதுமொரு செய்தியில்லை. இளைத்தாள்; மூப்பால்
குன்றிட்டாள். பொற்கொல்லன் பாம்பு தீண்டக்
குமிட்டிதனை அவள் தனமாய் வைத்துச் செத்தான்.

5

ஆற்றொணு வறுமையிலே தவிக்க லானாள்;
அகன்ற மகன் தனைக் கருதிக்கண்ணீர் பெய்தாள்;
காற்றாடி போலுடலம் உயிரா லாடக்
கண்ணுறக்கம் நொய்க்கஞ்சி கந்தை யின்றி
மாற்றார்கள் மனை நடந்து பிச்சை கேட்பாள்;
மறுத்தவர்கள்; அவள் பரத்தை! பாவி! என்று
தூற்றிட்டார்; தூரத்தே விலகிப் போனார்;
தொல்லையிந்தக் கிழப்பிணத்தால் என்றார் மற்றோர்!

மாருத அவமானச் சின்ன மானேன்
மைந்தனையும் பெற்றெடுத்தேன் மறைந்தான் மின்போல்
ஊரார்கள் பேய் போல வெறுத்துப் பேச
உற்பவித்தேன் படுபாவி! விதிதான் என்னே?
காராக இருந்தசலம் மழையாய்ப் பின்பு
கதிரொளியால் காராகும் காட்சி கண்டேன்.
சீரான மார்க்கமது செப்பு வோரைச்
சென்றடைவேன் எனமனத்தில் திட்ட மிட்டாள்.

## 7

சாய்கின்ற மண்குடிலை நாடி வந்தாள்;
தனக்குதவும் பொருளுண்டா என்று பார்த்தாள்.
ஓய்வாக இருந்திட்ட குமுட்டி கண்டாள்
யோசித்தாள், குளிர்தணிக்க உதவு மென்று
தேய்வான கைச்செம்பு நைந்த ஆடை
சில எடுத்து முடிச்சாகக் கட்டிக்கொண்டு
காய்கின்ற வெய்யலிலே கைக் கொம்போடு
கான்வழியே களைப்புடனே நடக்க லானாள்.

## 8

பண்டாரக் கோலமுடன் சிலர்கள் கூடிப்
பாதையிலே போவதனை பார்த்தாள்; நின்றாள்
திண்டாடும் தன் நிலையைச் சொன்னாள்; பாவம்
தீர்கின்ற வழிகேட்டாள்; ஒருவன், அன்பால்
விண்டிட்டான்: 'முதியவளே! உனது நெஞ்ச
வேட்கையது மிகநன்று, நன்று! ஆனால்,
கண்கெட்ட பிறகேனோ சுடரைக் காணக்
கருதுகின்றாய்? உன் கவலை தீர வேண்டில்

## 9

வெங்கானில் அலைவதிலே பயனென்றில்லை;
விரைந்தோடி ஜெகத் குருவின் பாதம் போற்று;
சிங்கேரி மடந்தனிலே தங்கி யுள்ளார்;
சிறு வயது; எனில், பெரிய சித்தி யாளர்,
மங்காத சுடர்மேனி; காவிபூண்டோர்;
மாசற்றோர்; சுகர் போன்ற மாண்பு யோகி
பங்கேரு கன்போல வேதம் நான்கின்
பாங்கெல்லாம் தெரிந்திட்ட பரமமூர்த்தி!

## 10

கண் முன்னே தோன்றுவது மறைந்து போகும்;
கண்விட்டு மறைந்ததுவே பிறகு தோன்றும்.
எண்ணுங்கால் அதன் பெயரே மாயை யாகும்!
இறப்போடு பிறப்பற்ற பிரம்ம மொன்று
உண்டென்பேன், அப்பிரம்மம் நானே, மற்றும்
உலகெல்லாம் நிறைந்ததுவும் அதுவே யாகும்.
பண்பான அத்வைத மார்க்க மொன்றே
பவம் நீக்கும் துணையென்று போதிக்கின்றார்.

## 11

போய்க் காண்பாய் என்றவனும் போகலானான்
புதையலுள செய்திகேட்ட ஏழை நெஞ்சாள்,
நாய்போலக் கீழ்நிலையை அடைந்த தாலே
நடந்திட்டாள் இரவுபகல் பல காதங்கள்;
பாய்கின்ற ஓடைகளில் தாகம் தீர்ப்பாள்;
பழந்தின்பாள்; பாழான சத்தி ரத்தில்
பேய்போலப் படுத்திடுவாள்; பலரை வேண்டிப்
பீடுடைய சிங்கேரி மடத்தைக் கண்டாள்.

## 12

பல்லக்கு, யானை, பரி, பணியாட் கூட்டம்;
பரவுகின்ற ஷண்மதத்து அடியார் கூட்டம்;
சொல்லொண்ணு தெய்வீநிலை மர்மம் தன்னைச்
சோதித்து சர்ச்சையிடும் புலவர் கூட்டம்;
நெல்லோடு மற்றும் நவ நிதிகள் கொண்டு
நிவேதனமே செய்கின்ற தனிகர் கூட்டம்;
செல்வோரும் வருவோரும் ஒல்கடல் போல்
ஜெயசங்கர் எனமுழங்கல் பலவும் கண்டாள்.

## 13

தள்ளாடி மடவாயில் நுழைய லானுள்;
தடைசெய்தான்; ஒருதொண்டன், ஏன்என்றிட்டாள்.
"எல்லோரும் **காணிக்கை** தருதல்போல
இசைந்தளிப்பாய் ஆயிரம்பொன்; குருவைக் காண
உள்ளேநீ செல்வதற்கு விதியீ தாகும்!
உதவாது வீண்பேச்சு வெளிச்செல்" லென்றுன்.
முள்வேலி தனைத்தாண்டி வயலில் சென்று
மூண்டபசி தணிக்கவொணுப் பசுப்போ லானுள்.

## 14

என்செய்வாள் தொண்டுகிழம் ? வறுமை வாழ்வில்
எவ்வாறு பொன்தருவாள் ? ஏங்க லானுள்;
அன்றுடம் மடவாயில் முகப்பில் நின்று
அழுதிடுவாள்; 'வில்' யாழ்போல் கூனல் கொண்டாள்;
சென்றேடித் தங்குதற்குத் திண்ணையின்றித்
தெருவோரம் சேற்றின் புழுப் போலி ருந்தாள்.
மின்னேடி இடிகுமுறி வானம் மூடி
மேகந்தான் இருண்டுமழை பெய்த தோர்நாள்.

## 15

கட்டுண்ட எருது, பசு, பரிகள், யானை
காற்றலேயும் குளிர்மழையும் தாங்கா தாகி
முட்டுண்டு வெருண்டோட முனைய் லாச்சு
முன்னோடித் தடுத்திட்டார் தொண்டர் கூட்ட
கொட்டுண்ட கார்மழையில் வெடுவெடுக்கக்
கும்மிட்டி மூட்டைதனைக் கையி லேந்தி
வெட்டுண்ட மின்னொளியில் பாதை கண்டு
விரைந்தோடி மடவாயில் உள்ளே சென்றாள்.

## 16

மான்தோலின் ஆசனத்தே அமர்ந்த வாறு
மழைமுகத்தைக் காணுமல் மனம் லயித்து
ஆன்மாவின் புத்துணர்வில் **சங்கர** னும்
ஆதிகுரு இருப்பதனை வியப்பாய் நோக்கித்
தேன்மேவும் பதமலராம் இரண்டைப் பற்றிச்
சீறு துயர் நெஞ்சடைக்கத் தேம்பி வீழ்ந்தாள்.
வான்போன்ற அமைதியிலே யிருந்த தேவன்
வளர்மதியக் கருணைவிழி திறந்து பார்த்தான்.

## 17

"அம்மணியே யார்நீங்கள்? ஊர்பே ரென்ன?
அழுவது மேன்? அடியேனின் அடிகள் பற்றிக்
கும்மிருட்டு இருள் மழையில் வந்ததேனோ?
கூறுங்கள்! எழுந்திருங்கள்!" என்று சொல்ல,
"வெம்மையிலே வாடுகின்ற பயிர்நான் ஸ்வாமி!
விதிகெட்ட விதவைநான்; பார்ப்ப னத்தி;
செம்மைமிகும் கேரளத்தில் ஆல்வா யாற்றுச்
சிற்றூராம் காலடியே என்னும் ஊராள்;

இம்மையிலே விபசாரி; மகனைப் பெற்றும்;
இழந்திட்டேன்; பெரும்பாவி! புகல்தா னில்லை.

18

செய்திட்ட பாவமெலாம் தீரத் தங்கள்
திருச்சேவை காணுதற்குத் தேடி வந்தேன்.
கைகொண்ட பொன்னில்லை தங்கள் பாதக்
**காணிக்கை** உள்ளுருகும் என்கண் ணீரே!
மெய்யாக என்னிடத்தில் உள்ள தெல்லாம்
மிச்சமென நைந்துள்ள பழைய கந்தை;
அய்யா! இக் கும்மிட்டி குளிரைப் போக்க
அனல்மூட்ட உதவுமிதை ஏற்பீர்' என்றாள்.

19

வேதங்கள் கேட்கின்ற செவியான்; ஞான
வெள்ளிமணிக் குரலுடைய செவ்வாய் மூடி
ஏதொன்றும் சொல்லாமற் சிலைபோ லானான்;
இருவிழிகள் முத்துமழை பெய்த வாறு
நாதத்தின் உண்மைதனைக் கண்டோன் போல
நாக்குழற "நான்பாவி! என்னைப் பெற்ற
தீதில்லாத் தாய்நீயே!" என்றான்; கேட்ட
திருச்செவியாள் "சங்கரனே!" என்றாள் செத்தாள்.

## காதலும் கண்ணீரும்

**ஆசைதனை அகந்தனிலே** ஒப்பு வித்து
அச்சமற்று விதிக்காட்டில் நுழைந்து விட்டாய்!
பேசவொரு துணையில்லை சிந்த னைப்புள்
பெருமூச்சாம் வலையினிலே துடிக்கு தேடி!
கூசுதையோ! கருவிழிகள் சுடரைக் காணக்
குமைகின்றேன் கோட்டான்போல் துன்பப் பொந்தில்
காசினியில் மின்விட்டுப் பொழியாக் கார்போல்
காதலதும் கண்ணீரும் பிரிந்தி டாதோ? 1

**தண்புனலில் நிழல்காட்டிச்** சென்ற மான்போல்
தனியிருந்த என்நெஞ்சில் உனது ஆசை
வண்ணமதைக் கொட்டிவிட்டு விழிம றைந்தாய்
வளருதடி வாழையடி வாழைச் சோகம்!
பண்ணினிக்கும் செந்தமிழால் பகரு கின்றேன்
படிகங்கர் காதலதே இதற்குச் சாட்சி
கண்சமைத்த வெண்பருக்கை அனைய என்றன்
கண்ணீரால் கொடுங்காலப் பசிமாறுதோ? 2

**பொன்னிறத்துப் புனைமயில்நின்** நடன ரேகை
பூங்கொடிதான் தென்காற்றில் புரளும் போது
என் நயனம் தொட்டழைத்துப் பிறகே மாற்றி
ஏக்கமெனும் எரிதழலின் ஜ்வாலை யாச்சே

கன்மலையைப் பிளந்தூன்றும் அரசின் வேர்போல்
காலத்தை என் காதல் பிளக்கு மேடி!
சன்னமணல் சுடும்பாலை வனத்து ஊற்று
தண்குமிழிழ்கள் என் கண்ணீர் விம்மல் கண்டாய்! 3

சித்திரமே வரைந்ததில் நின் செழிய கோலம்
சிறைபிடித்து வைத்திடவே ஆவல் மீறி
எத்துபல செய்திட்டேன் கண்ட தென்ன?
ஏமாந்தேன் தேன்மாந்தா வண்டு போல!
நித்திரையில் நின்கனவைக் காண்போ மென்றால்
நீசமெனத் தூக்கம்கண் நீங்க லாச்சே
பித்தனெனப் பிதற்றுகிறேன் எனினும் கண்ணீர்
பெருமலையின் அருவியெனப் பெருகு தேடி! 4

மாங்குயிலே வசந்தத்து மாலைப் போதில்
மதுரமொடு இசைக்கும்பண் கேட்கும் போது
தேங்கமழும் குங்குமப்பூ இதழ்சி விர்க்கச்
செந்தமிழால் நீநெருத்திச் சொன்ன சொற்கள்
தூங்கிடா தென்செவியைச் சுற்று தேடி!
துயருக்கே அதனைநிகர் மருந்து முண்டோ?
வீங்குவெயில் தனில்பழனம் உழுவோன் நெற்றி
வேர்வையென என்கண்ணீர் விரையு தேடி! 5

சூழ்ந்தடிக்கும் சோகமெனும் சூறைக் குள்ளே
சுழலுதடி என் உள்ளம் பஞ்சு போலே!
வாழ்ந்திருந்து நீபுனையும் சேலை தன்னில்
வரி இழையாய் ஆவதற்கு வகைதா னுண்டோ?
தாழ்ந்திருக்கத் தலைவிதியோ? குப்பைக் குள்ளும்
சந்தமிகும் குருக்கத்தி பூத்தல் உண்டே!
சூழ்ந்திருக்கும் காதலினால் கண்ணீர் சிந்தித்
தோகை உனக் கணிவிக்க ஆசை கொண்டேன். 6

**மஞ்ஞையது மாரிதனைக் கண்டு** ஆடும்
நாண்பதுபோல் கண்ணீர்தான் மல்க மல்க
விஞ்சையரின் இன்பமென எனது உள்ளம்
விசைபெற்று நர்த்தனம்தான் ஆடு தேடி!
தஞ்சமெனப் புகன்றுலக மக்கள் தம்மைத்
தண்டனிட்டு அடிமையுறச் சகிக்க மாட்டேன்!
அஞ்சுகமே! வெளிப்பறந்து சென்று லும்நீ
அடைந்திருந்த பொன்காதற் கூடுண் டென்பால்! 7

**கிள்ளைமொழிக் கள்ளதனை என்றன்** உள்ளக்
கிண்ணியிலே வார்த்திட்ட நினைவு நாட்கள்
உள்ளமதில் நிறைந் தெழுந்து குமிழ்போல் விம்மி
ஓசையொடு உன்கனவைத் தொடரு தேடி.
பள்ளமதில் வீழ்ந்திட்ட மின்பூச் சைப்போல்
பதைபதைத்து வாடுகின்றேன் சாவின் தூண்டில்
துள்ளி உயிர் தனைத்தொட்டுப் பிடித்திட் டாலும்
சுடர்வானத் தாரகையாம் துடிக்கும் கண்ணீர்! 8

**தேன்பிலிற்றும் மொட்டென நீ** கர்ப்ப முற்றுத்
தெய்வீகப் பாலகனை ஈன்ற வேளை
வான்பிளந்த புதுப்பலமே என்றன் தோளில்
வண்ணமொடு குடியேறி நின்ற தேடி!
கான்புகுந்த அமைதியெனக் கலந்த வாழ்வின்
கலயத்தை விதிக்கையே உடைத்த தாலே
பேன்நிறைந்த கூந்தலென என்னை எண்ணிப்
பிறரிடமா சிப்பதனைக் கேட்கச் சென்றாய்? 9

**ஈரமிலா மண்ணிலே** கரையான் புத்து
எடுத்துலவல் போலே யான் வைய கத்தில்
சாரமிலா வாழ்க்கைதனைக் கொண்டிட் டாலும்
சந்தனத்துப்பொதிகைமலைக் காட்டில் தங்கும்

வாரணத்தின் நிலைவெனவே உன்றன் எண்ணம்
வன்மையொடு என்மனத்தில் வளரு தேடி.
பூரணமாம் மதியொளியில் வெடிக்கும் தென்னைப்
புதுப்பாளை மணிபோன்ற தெனது கண்ணீர்! 10

**தொல்லுலகோர் அடிமை யெனும்** சொல்லை நீக்கத்
துடிக்கின்றார் அவர்நாடும் சுதந்தி ரத்தால்
பல்லுலகோர் எனைப்பழியே கூறி னாலும்
பாவத்தின் சிறையிலெனைத் தள்ளி னாலும்
வெல்லுதிறன் காதலுக்கு அடிமையாவேன்
விடுதலையே வேண்டாதவ் வியப்பி லாழ்வேன்
முல்லைமலர் என்கண்ணீர்க் கனவைக் கண்டு
மோகினியின் முறுவலினைக் காணும் ஓர்நாள்! 11

**கண்விளைத்த தீபங்காள்! செல்வீர்! செல்வீர்!**
காதலெனும் கோவிலுக்கே! செல்வீர் செல்வீர்!
பண்ணிசைத்து மென்மையுடன் செல்வீர் செல்வீர்!
பாவத்தின் வழிகடந்து செல்வீர் செல்வீர்!
ஒண்ணறிவின் ஒளியினிலே செல்வீர் செல்வீர்!
உரைகடந்த பறவைகளாய்ச் செல்வீர் செல்வீர்!
புண்ணியத்துப் பீடத்தே செல்வீர் செல்வீர்!
புகழ் '**சித்ரா**' விடம்தூதாய்ச் செல்வீர் செல்வீர்! 12

## புத்தன் புனர்ஜென்மம்

தன்நிகரில் வளநகராம் கபில வாஸ்து
தனைநோக்கித் தன் அடியார் தொடர்ந்துகூடப்
பொன்ததும்பும் மேனியிலே செக்கர் போன்ற
புனிதமிகும் காவியுடை பொலிய, வான
மின்னனைத்தும் வீற்றதென முடிச் சிகைதான்
மேல்மூச்சு என விம்மி, வெயிலி லாட
அன்பமுதைப் புவிக்கெல்லாம் அருளும் **புத்தன்**
அங்கையிலே ஓடேந்தி நடந்து வந்தான்.

களங்கமிலா நிலவைநிகர் பளிங்குக் கல்லால்
ககனமெட்டச் சமைத்தமா ளிகையின் முன்னே
அளப்பரிய சோகமதே வடிவ மாகி
அடித்தசிலை எனநின்ற **யசோத** ரையாள்
உளந்தனிலே புதைத்திருந்த காதல் தன்னை
ஒளிமலர்ந்த விழியிரண்டில் முத்தாய்ச் சிந்தி
இளமகவாம் **இராகுலனே** ஏங்கிப் பார்க்க
எதிர்பார்த்த பதிபுத்தன் தாளில் வீழ்ந்தாள்.

"இளங்கொடியும் பூமுகையும் என்ன நாங்கள்
இரவினிலே துயிலுங்கால் விட்டுப் போனீர்!
விளக்கெனினும் காற்றலைக்கும் வெளியில் வைத்தால்
விளையும்கதி தங்களுளம் தெரிந்தி டாதோ?

முளரிமலர் மீதினிலே நடந்த பாதம்
முட்களிலும் கற்களிலும் நடக்க லாச்சே!
வெளியுலகம் உமதெழிலைப் பருகு தற்கு
விரும்பேன்யான் விருந்துண்ண வாரீர், அன்பே!''

''அன்பென்று சொல்வதற்கு அறிந்தாய், அம்மா!
அகத்தினிலே அவ்வன்பின் ஆழம் காண்க!
முன்சென்ற நாட்கள்வெறும் சருகாம்; அந்நாள்
மூண்டபெரும் துயர்த்தளையை முறிக்க வேண்டில்
தன்போன்று எவ்வுயிர்க்கும் அன்பே ஈவாய்;
சாவதனை வென்றிடுவாய்; சங்கம் சேர்வாய்;
அன்பாகக் கறவைவரில் அதைத் தொடர்ந்தே
அழகுஇளங் கன்றுவரும் பிக்ஷு யீவாய்' ''

சங்கத்தொடு பிக்ஷுஉண்டு சாந்த மூர்த்தி
தான்மொழிந்த கருத்துணர்ந்து யசோத ரையாள்
செங்கதிரின் ஒளியின்றித் திங்கள் தன்னில்
சேருமொளி இல்லைஎனச் சித்தம் தேர்ந்து
புங்கவனின் புதியமதம் புகுந்தாள் ராஜ
போகமதைப் புறக்கணித்துப் புதல்வன் தானும்
சிங்கமதன் பிடரிநிகர்க் காவி பூண்டு
சித்தார்த்தன் நிழலெனவே பின்பே சென்றான்.

மாளிகையுள் சித்ரமஹால் வழியாய், வீதி
வாயிலுக்குக் கருணைநிதி வருங்கால், தூணில்
வாளிநிகர்க் கண்பெற்றும் பிறரை, வாட்டா
மாயைஎனும் மாதரசி 'சித்ரம்' நோக்கித்
தோளிணைகள் அலையெழவே கண்ணீர் சோரத்,
தொண்டரெலாம் திகைத்திடவே, நின்றான் புத்தன்
தாளிணையே சத்யமெனும் சாரிபுத்ரன்
''சற்குருவே! தாம்வருந்தல் என்னே?'' என்றான்.

"ஒன்றுமிலாச் சூனியத்தில் இருந்த என்னை
உயிர்தேக்கும் சிசுஎனவே உலகில் பெற்ற
அன்றிரவே மரணவிருள் அடைந்த என்றன்
அன்னையவள் சித்திரமிதே! அவள்தான் செய்த
நன்றிதனை மறந்திட்டேன் அந்தோ! இன்று
நான்கண்ட முடிபதனை அவள்பால் சொல்லி
புன்மைதரும் மரணத்தைப் போக்கு என்று
புகலாமல் புவிக்கெல்லாம் போதிக் கின்றேன்!......

கழனியதன் உரமதனால் விளைந்த நெல்தான்
கழனிதனை மறந்தக்கால் கண்ய முண்டோ?
அழலதிலே சிலிர்த்திட்ட தீக்கொ ழுந்து
அதன் பிறப்பை மறந்தக்கால் ஆக்க முண்டோ?
விழையுதுகாண் என்நெஞ்சம் பெற்ற அன்னை
விடுதலையைக் காணுதற்கு. அதனால் யானும்
மழையினிலே நுழைகின்ற மின்னல் போல
மானிலத்தே மற்றுமொரு பிறவி காண்பேன்."

"தூயவனே! இன்னுமொரு பிறவி பெற்றால்
தோற்றுவது எவ்விடத்தே வடிவ மென்ன?
தாயனையாய் அம்மர்மம் தன்னைச் சொல்ல
தயைசெய்வீர்," எனக்கேட்டான் சாரி புத்ரன்
மாயைமகன் ஞானமணிக் குரலில் சொல்வான்:
**"மானிடனாய், அகிம்சை எனும் மாண்பு சொல்லிப்,
பாயுமொளிப் பாரதத்தில் ஜனிப்பேன்; கையில்
பாடல்செயும் ராட்டினமே பழகும் கண்டாய்!"**

## சாவுக்கு விருந்து

உழவனும் அழகிய முத்தனுக்கு
ஒடிந்தது காலொன்று வாலிபத்தில்
கிழவனாய் மாறிடும் வேளையிலே
கிட்டிற் றவனையே குட்டரோகம்

2

நாட்டு வைத்தியம் செய்ததினால்
நன்மை பெரிதில்லை. நோயும்
காட்டுக் கனல்போல் உடல்பரவ
கத்தி கதறி நகரடைந் தான்.

3

வைத்திய சாலையைக் கண்டு சென்றான்
வாஞ்சையாய் முத்தனை 'வா' என்பார் யார்?
பைத்தியம் பிடித்த நாய்களைப்போல்
பாய்ந்தனர் சிற்சில பேரவன்மேல்.

4

ஏழை உழவனும் முத்தனுக்கு
என்ன செய்வதெனத் தோன்றவில்லை.
பாழை விளைத்திடும் நோயை எண்ணி
பலருக்கும் கும்பிடு போடலானான்

எத்தனை கும்பிடு போட்டிடினும்
இம்மியும் நோயது போகவில்லை!
முத்திய நோயே முடிந்திடாது
முத்தனே போஎனச் சொல்லிவிட்டார்.

பசியினுல் காது அடைத்துவிடும்
பாழ்நோயும் கூட வதைபுரியும்
கசிந்திடும் துர்நீர் துடைப்பதற்கும்
கந்தை கிடையாது முத்தனுக்கு!

7

மாடிவீ டொன்றின் வாயலிலே
மாடெனக் கூவிப் பிச்சை என்முன்
'ஆடி அமாசை விரதமடா
யாரும் இன்னும்சோ றுண்ணவில்லை"

8

என்று இளித்தோர் கிழவிசொல்ல
ஏங்கிக் களைத்த முத்தன்மெள்ள
இன்னெரு வீட்டின் படியடைந்து
இழவொன் றிருப்பதைக் கண் டகன்முன்.

மற்றெரு மனையையும் அவன்நாட
'மார்வாரி' எனும்அம் மனையாளன்
" பற்பல பேச்சுப் பேசவேண்டாம்
படிதனை விட்டே நட''என்முன்

## 10

மாலை மங்கும் வரை திரிந்தான்
வயிற்றுப் பசிதான் தீரவில்லை.
சாலை மரநிழல் தங்குங்கால்
'சார்ஜண்ட்' டொருவன் விரட்டிவிட்டான்.

## 11

கடற்கரை யதனை நோக்கிப் போனான்
கவ்விற்று வானையே கங்குலது.
உடல்தளர் வுற்ற முத்தனுக்கு
உணர்வு மெள்ளக் குறைந்ததுவே.

## 12

வீசும் அலைகடல் காற்றினிலே
விழிகள் மூடிப் பசிமறந்து
மாசிலாத் தூக்கம் தனில்மூழ்கி
வையம் நினைவுற் றெழுந்திடுங்கால்.

## 13

கண்ணில் தூக்கம் படிந்ததுபோல்
கடல்மேல் இருட்டு இருந்ததையும்
எண்ணம் எரிவது போல்வீதி
இருந்த தீபம் எரிந்ததையும்.

## 14

பார்க்கவே முத்தன் பலநினைந்தான்
பசிதான் வயிற்றை எரித்திடவும்
ஆர்த்தெழும் கடல்நீர் அருந்திடவே
ஆவலாய்ச் சென்றான். அருந்தவில்லை

## 15

உப்பு உரைத்த நீர்குடிக்க
ஒவ்வா தவன்வாய் குமட்டியது
எப்படி நகரம் சென்றிடுவான்
எவரங் கிரங்குவர் ஏழைகட்கு!

## 16

விரட்டி அடிக்கும் நகரத்தையும்
வேட்கை அகற்ருக் கடல்நீரையும்
பறக்க இறக்கையில் பறவைஎன
பார்த்துப் பதைத்துக் கண்ணீருடன்

## 17

அலைகடல் தன்னையும் நகரினையும்
அசையா இமையுடன் மாறிமாறி
நிலைத்த விழியுடன் நோக்கிவிட்டு
நிமிர்த்திஞன் வதனம் வான்நோக்கி.

## 18

இருள்தோய் திருந்தது எட்டாவான்
இந்து ஒளியது காணவில்லை!
பொருமி அழுதன தாரகைகள்!
பொத்தென வீழ்ந்தனன் முத்தன் மணல்!

## 2. அழகு ராணி

ஆத்மாவின் புத்தொளியே !
அழகே ! உன்னை
அர்ச்சிப்போர் காதலதாய்
ஆகின்ருர்கள் !

காற்ருடும் காற்ருடி
யான தேகம்
கருக்கொள்ள விதிவகுக்கும்
கடமை நீயே !

கோத்தபூ மாலையென
உலக மீது
குலுங்குகிருய் கடல்; மலையாய்;
இருசுடர், மீனுய் !

நேத்திரத்தை முத்தமிட
எதிரே நின்று
நிர்த்தனமே ஆடுகின்ருய்
அழகு ராணி !

## 3. அழகு எங்கே?

காம்பின்றி நின்றிருக்கும்—இனிய
காயாம்பூ வான வானம்.
சோம்பித் திரியாமல்—உலகைத்
தூண்டிடும் காலைச் சுடர்.
கூம்பும் இருளிடையே—கலந்து
கொஞ்சும் அமைதிக்குரல்.
ஆம்பல் நிறை பொய்கை—அமுதை
அள்ளிப் பொழியும் நிலா!

கன்னியர் கண்வீச்சு—வீரர்
கைபிடிக்கும் வெற்றிவாள்.
மின்னும் முகில் யாழில்—இடியே
மீட்டும் மழைப் பாட்டு.
தன்னலம் காணாது—புவியின்
தாபம் தவிர்க்கும் நதி.
தென்றல் குளிரேற—மழலை
சிந்தும் சிறு குழந்தை!

3

விம்மிய மோனத்தினால்—அகன்ற
விண்ணைத் தழுவும் மலை.

சிம்ம கர்ச்சனையுடன்—மனது
சிதறப் பாயும் புனல்.
செம்பவள இதழும்—தரளத்
தேன்நகை காட்டும் கடல்.
பம்பும் திரைகளது—அரவின்
படமெனவே நெளிதல்!

4

அச்சந் தனை மறந்து—சிறுவர்
அம்புய வாவியிலே
மச்சம் என நீந்தல்—மரத்தில்
மந்தி எனத்தாவல்.
உச்சிப் பொழுதளவைத்—தனது
உடல் நிழலில் கண்டு
பிச்சை புகும் ஆண்டி—கனிந்து
பேசும் பழங் கதைகள்!

5

நெற்றியில் வேர்வையாட—நெஞ்சில்
நேசனின் ஆசையாடச்
சுற்றிய சேலை தன்னில்—சேற்றின்
துளிகள் தொய்யலாட
வெற்றிலைச் சாரத்துடன்—நாவில்
வித்தாரச் சிந்தாடப்
பொற்றனங்கள் குலுங்க—உழத்தி
பூங்கையால் நாத்திடுதல்!

6

ஆயிரம் பிறையுடன்—பகலில்
ஆடிடும் தோகைமயில்

*வாயின் மொழியின்றி—மனித*
*வாழ்வு சொலும் வான்வில்*
*தோயும் வசந்த காலம்—பொன்னின்*
*சுடர்செய்யும் தீபம்*
*தாயின் தமிழ்மொழியில்—உயிரில்*
*தங்கியுள்ள தழகே!*

## 4. மலரும் பனி!

தண்வாவிப் பள்ளிதுயில்
தாமரையின் முகைமேல்,
விண்மீனின் கண்ணீராம்
வெண்பனிநீர் வீழ;

கண்சொக்கும் துயில்கலைந்து
கமலமுகை தானும்,
வெண்முத்து நேர்பனிநீர்
வெடுவெடுக்கச் சொல்லும்:

"கருக்கிருளின் அழுக்கினிலே
கலந்துவந்த பனியே!
திருத்திகழென் மேனியைநீ
தீண்டிடத் தகாது.

கண்கொள்ளாக் காட்சியினைக்
கண்டிருந்தேன் கனவில்;
துண்டித்தாய் என் கனவைத்,
தூரப்போ, போ, போ!

வயிரத்தின் ஒளிமேனி
வடிவழகன்; வானோன்:
"உயிருள்ள தெனக்குன்றால்
ஒண்காதல் கமலி!

காதலியே உன்முகத்தை
காணுதற்கே என்கண்
பூதலமேல், பிறபாரேன்
பூவாய்'' என் றுரைத்தான்—

என்று, மலர் முகைநெஞ்சம்
இறுமாந்து விம்ம,
சின்னபனித் துளியதுதான்
தேகமுந் தள்ளாடி

வாவியிலே வீழ்ந்தே தன்
வருத்தம்கொள் வாழ்வின்
ஆவியினை விடுந்தருணம்
அருணன்வந் தணைந்தான்!

பனித்துளியை முத்தமிடும்
பரிதியினை நோக்கிச்
சினத்துடனே விரிந்தமுகை
சிரித்துச்சிந் திக்க......

''கண்ணீரே காதல்பெறும்
கனவல்ல'' என்னும்
உண்மைதான் உதிக்குங்கால்
ஓங்கியது இருளே!

## 5. வசந்தம்

வந்தது வசந்தம்! வந்தது வசந்தம்!
வானக் கதிரொளி மாணில மங்கையின்
சிந்தையைக்கிள றிச் சிலிர்க்கச் செய்திட
எண்ணம் விழித்துக் கண்கொட்டி நகைக்க
வந்தது வசந்தம்! வந்தது வசந்தம்! 1

உள்ளங் கொதித்து உணர்ச்சி வெடித்து
உலகம் சிதறிய ரத்தத் துளிகள்
கள்ளவிழ் ரோஜா! கண்ணீர்ச் சொட்டுகள்
கவின்மிகு முல்லை! காதலைத்தேடி
வந்தது வசந்தம்! வந்தது வசந்தம்! 2

மாமரம் செந்தளிர் நாவை நீட்டிட
மலர்கள் பூத்து வியந்து நோக்கிட
காமனின் சரம்போல் கோகிலம் கூவிட
கந்தம் சுமந்து தென்றல் தள்ளாட
வந்தது வசந்தம்! வந்தது வசந்தம்! 3

இன்பக் காவியம் இயற்கை ஏட்டில்
எழிலுறக் காணுது மலர் எழுத்தினுல்
அன்பர் கூடுவோம் ஆழ்ந்துபடிக்க
அற்புதப் பட்டாம் பூச்சி விளக்கொடு
வந்தது வசந்தம்! வந்தது வசந்தம்! 4

மகுடி ஓசையில் மயங்கும் பாம்பென
மனது சொக்கினர் மங்கையர் காளைகள்
புகுந்தது வண்டினம் புதுப்புதுத் தேன்மலர்
பூண்டது இயற்கை எழிலின் போர்வை
வந்தது வசந்தம்! வாழ்ந்தது காதல்! 5

## 6. சித்திரை

புத்தமுத ஜோதிவெள்ளம்
பொங்கிவரும் நாளே !
பொன்நிறமாய் வேப்பமரப்
பூமணக்கும் நாளே ! 1

கத்துகுயிற் கவிதையில் மாங்
கனிகனியும் நாளே !
காதலர்கள் நெஞ்சிலின்பக்
கனல் சிலிர்க்கும் நாளே ! 2

முத்துமுல்லை யோடுதென்றல்
முத்தமிடும் நாளே !
மூடுபனி நீங்கிஎழில்
முகமலரும் நாளே ! 3

சித்திரையின் முதல் நாளே
தேன்வசந்த நாளே !
செந்தமிழர் புதுவருடம்
செல்வத்திரு நாளே ! 4

## 7. அருணோதயம்

அச்சவிருள் அற்றதடா
அனற்பவள ஜோதி !
ஆண் சிங்கப் பிடரி எனச்
சிலிர்க்குதடா ! சோலை, 1

பச்சை துளிர் பொற்றகடாய்
பள பளக்க, வாவி
பங்கயத்தின் புன்னகையாற்
பறவை இசை பாட, 2

எச்செயலும் எவ்வுணர்வும்
எழுச்சியில் முன் னேற,
இமத் துளியும் வைர மணி
எழில் தேக்கி மின்ன, 3

உச்சிதமாம் சுதந்திரத்தின்
குங்குமப் பொட் டென்ன,
ஒளி கூட்டி உயிர் காக்கும்
அருணோதயம் காண் ! 4

## 8. தென்றல்

பொதியத்தமிழ் மலைப்பிறந்து அருவியாடிப்
பூமணத்தைச் சந்தனத்தைப் பூசிக் கொண்டு
மதியதனில் நகைஏந்தித் தென்னங் கீற்றில்
மந்தநடை தான்நடந்து மயங்கும் மாலை
பொதியவிழும் மல்லிகையின் கொடியைச் சீண்டிப்
பொன்மயிலார் முந்தானை பிடித்தி ழுத்துக்
குதிகுதித்துப் பதினெட்டாம் பெருக்குப் போலக்
குயில்கூவ வந்திட்டாள் குமரித் தென்றல்

## 9. உதய ஒளி!

குருட்டு மலர்மொட்டு விழி பெற்றது—செக்கர்
கொண்டைகொள் சேவல் குரல்பெற்றது
இருட்டை யணைத்துச் சுவைத்த கண்கள்—கனு
ஏக்கத்தால் விம்மியே பூத்திட்டன
சுருட்டிரைப் பாயலைத் தூக்கிக்கொண்டு—நுரை
தூவிக்கடல் கத்திப் பொங்கியது
நெருப்புக் கோளம் நீர் குளித்தும்—சுடர்
நீங்காது வான் நீந்தும் விந்தைகண்டோ?

## 10. தாரகை

மேற்குக் கடலில் கதிரவனே—உடல்
மீறிய வெப்பம தாறமூழ்க
ஏற்பட்ட எண்ணில் குமிழிகளோ—கரும்
இருளினில் பூத்திட்ட தாரகைகள் 1

நீலமல ரொன்றில் பட்டாம்பூச்சி—பல
நின்று மஞ்சள் நிறச் சிறகைமெள்ளக்
கோலம் ஒளிர அசைப்பதுவோ—இமை
கொட்டும் குளிரொளித் தாரகைகள் 2

வானெனும் பெரிய கம்பளமேல்—இருள்
வஞ்சியே சொக்கட்டான் தானுட
மீனெனும் சோழி குலுக்கிக்கொட்டி—அதில்
மிளிர்ந்திடும் எண்ணினைக் கூட்டுராளோ? 3

சுருக்கிச் சுருக்கி இமை திறந்து—ஒளி
சொட்டிச் சொட்டி இருள் கழுவும்
அரும்பை யனையதாம் தாரகைகள்—இளம்
அமங்கலைக் கண்ணீரின் சொட்டுகளோ? 4

புகையில் தெறிக்கும் கனற்பொறிபோல்—இருள்
போர்வையில் மின்னிடும் தாரகைகள்
வகையில் உழவர் குலமதுவே—நுதல்
வைத்திடும் வியர்வைப் பொட்டுகளோ ? 5

இந்து ரவியாம் இருகரங்கள்—கரும்
இருளை உலக மீதிற்சலிக்கும்
அந்த ரமாகிய சல்லடையில்—ஒளிர்
அளவில் துவாரமோ தாரகைகள் 6

## 11. வானவில்

பாடும் மழைவரப் போகுதடா—அதோ
பளிச்சென வானவில் காணுதடா
ஆடும் மயிற்பீலி கண்ணிறம்போல்—அதில்
அழகாய் எழுநிறம் தோன்றுதடா

2

சூரியன் மேகத் திரைதனிலே—வசந்தச்
சோலை மலரின் நிறமெடுத்துப்
பாருக்கும் வானுக்கும் மானிடரின்—வாழ்வைப்
படமாய் எழுதியே காட்டுதடா

3

காலையில் மேலைத் திசைகளிலும்—இருள்
மாலையில் கீழைத் திசைதனிலும்
கோலக் கனவொடு எழுசுரமாம்—தெய்வக்
குமரி உலாவிடும் பாலமடா

4

பூமியாம் காதலி தன்னுடனே—வானம்
பொங்கிக் கலவிகொள் போதினிலே
தேமலர் வாய்மென்ற தம்பலத்தைத்—துப்பச்
சித்திர வானவில் ஆனதடா!

## 12. மழைத்தாரை

**வா**னவர் மென்மலர் தூவுராரே?—அன்றி
வெப்ப அரக்கனைக் கொல் சரமோ?
மானில நங்கையின் மானம்காக்க—வெளி
மகிழ்வோடு நெய்திடும் நூலிழையோ?
தேனொளிர்ப் பூங்கணை மன்மதனே—காதல்
சேதி சொல்லிவிட்ட தூதுவரோ?
ஏனெனக் கேட்பாரற்ற உழவர்—நிலைக்கு
ஈசன் உகுக்கும்கண் ணீர்த்துளியோ?

## 13. மேகம்

வானமென்னும் கடலிடையே—பெரிய
மரக்கலம் எனச் சுழல் முகிற்குலங்காள்!
மாநிலம் சீர் பெற்றிடும்—உங்கள்
விழி உதிர்த்திடும்மழை மணியணிந்தே
மீனெனும் அம்மை வடுக்கொள்—வானம்
மேனிபெற மின்மஞ்சள் பூசிடுவீர்
கானக்குயில் வெட்கி ஒடுங்கப்—பாடிக்
களிப்பீர் இடியென மயிலாடவே! 1

துணையின்றித் தவிப்பவற்கு—அரிய
தூதென ஓடுவீர் எண் திசையும்
இணை நீங்கிய காதலர்—உயிரை
ஈர்த்திடும் ஏமனின் வடிவுமாவீர்
கிணர் மூடும் பாசியைப்போல்—செழிய
கிரண மிகும்ரவி முகம் மறைப்பீர்
கணவன் கல்மலை எனினும்—தூய
காதலிற் கனிந்து முத்தம் பெறுவீர் 2

தேங்கிய மேகத் துண்டுகாள்—நீங்கள்
சேர்ந்தே குளிர்மழை பொழிவதனை
பாங்குடன் பார்க்கும் வேளையிலே—இன்பப்
பாட்டொன் றென்செவிப் பாய்ந்திடுதே :
" ஓங்கிடும் உரிமைகெட்டு—உள்ளம்
உடைந்தே கலங்கும் தொழிலாளர்
ஈங்கு ஒன்றதாகிவிட்டால்—என்றும்
இனிது செய் சுதந்திரம் சுதந்திரமே !" 3

## 14. மின்னல்

**கா**ரெனும் கரிய மேதிகளைத்—தன்
கை யுள்ள மின்சாட்டை யா லடித்துப்
பாரில் புதுப்புனல் வருகுதென்று—உழு
பண்ணைக்கே ஓட்டிடும் வேலையாள் யார்?

2

கொண்டலாம் புற்றதை விட்டெழுந்து—கண்
கூச நடமிடும் மின் பாம்பைத்
தண்காற்று மகுடி யாலூதி—முள்
தாழை நகைத்திடச் செய்பவன் யார்?

3

மேன்மையாம் வான்வில் யாழ்தனிலே—ஒளி
மின்னலெனும் தங்கத் தந்தியிட்டுக்
கான் வாழும் விலங்கு புல் பூண்டுக்கு—அமுத
கான மளித்திடும் பாணனும் யார்?

## 15. கடல்

பச்சைப் பனைஓலை வெட்டி ஓரம்
பொன்னிற ஈர்க்குப் புனைந்ததுபோல்
வெளுத்த மணற்கரை நீலக்கடல்
விசிறியடா காலத் தேவனுக்கு !

2

நெளிதிரை நாவைச் சுழற்றிக்கொண்டு
நீலக்கடலாம் பெரும் எருமை
மணற் கரையான தவிட்டைத் தின்ன
'மா' என்றே கத்தி மகிழுதடா !

3

கட்டிட்ட அடிமைச் சங்கிலியைச்
சுக்கு நூறாக ஒடித்தெறிய
விழி உறங்காது மேல் மூச்சுவிடும்
விஷநிறக் கோர அரக்கன் கடல் !

4

வெள்ளலை யாகிய தந்தம் நீட்டி
வீறுகொண்டு விம்மும் மதயானை
உலகமாகிய கரும்புத் தோட்டம்
ஒருநாள் அதன்வாய்க் குணவாகும் !

## 16. கிரஹணம்

**கா**ற்றை யடைத்துப் 'பலூ'னதனைக்
கையால் தட்டி விடுவது போல்
சேற்று நிறத்துத் திரைகடல் மேல்
செம்மதி வட்டம் வரக்கண்டேன். 1

கூனல் முதுகு கிழவன் கையில்
குளிர்விளக் கேந்தி வருவது போல்
வான வளைவில் நிலாதவழ
வாடை கண்ணுள் சில்லிட்டது 2

வெள்ளியை உருக்கி விட்டதுபோல்
விம்மியே விரிந்த அலைகளின்மேல்
தெள்ளிய அமுதம் சிந்தியதோ !
சிரித்தது துமிகளில் சீதவொளி. 3

வெண்டாமரையின் மலர் நாடி
வண்டு தேன்குடித் தோடுதல் போல்
தண்மதி தன்னைக் கிரஹணம் விடத்
தாவி நீந்தி நீராடி 4

கடலை விட்டுக் கரையடைந்தேன்
கடலோ அலையை விடவில்லை !
கடவுள் ஒருவன் இருக்கும்வரை
கண்ணீர் விடுமோ ஏழைகளை ? 5

## 17. மதி

கவிதை யணங்குவாழ் வெண்மலரோ—சூறைக்
காற்றுக்கு மணையாத் தீபமதோ?
ரவிதான் எடுத்த புனர்சென்மமோ—இருள்
ராணிம குடமொளிரும் முத்தோ?

2

திங்கள் எனும் பெண் திரும்பிடவே—அவள்
சேலையிருள் சிறிதேவிலக
கொங்கை களிலொன்று காண்கிறதோ—கடல்
கூவித் திரை கைகொட்டிச் சிரிக்க!

3

உடலதை யொளித்து வான்குளத்தில்—முகம்
உந்தியே நீந்தும் ஒளிமங்கையோ?
கடல் நடுவிலொரு வெள்ளித்தீவோ—எழில்
கந்தர்வ ராடிடும் பந்துதானோ.

4

பதுங்கிய எண்ணமாம் பூனைகளே—சுவை
பார்த்திடப் பொங்கிய பாற்குடமோ?
பொது வுடைமை முழக்கம்புரிய—கடல்
பொங்கி எழுந்திட்ட வெண் சங்கதோ?

5

தாரணி மகிழ்ந்து பூசுதற்கு—நிலா
தங்கிடுஞ் சந்தனக் கிண்ணமதோ?
சாரமுள்ள இளங் காதலர்க்கு—மதன்
தம்பலம் வழங்கும் வைரத்தட்டோ?

6

கண்ணன் விசும்பதை மோதிடவே—செழும்
கைகொண்டு வீசிய வெண்ணெயதோ?
விண்ணமுதோடு தமிழ் கூட்டி—மலர்
வேதன் விழிப்பசி மாற்றுவனோ?

7

அன்பினால் வளர்ச்சி பேராசையால்—மிகு
அழிவு விளைந்திடும் என்று போதம்
இந்நில மாந்தர்க்குக் கூறும் **மதி**—அந்த
ஈசன் முடிகண்டு பெற்றதுவோ?

## 18. நீலகிரி

வண்ணத்துடனே மண்டி நிற்கும்
வகை வகையான பசும் புதராம்
மண்ணுப் பாண்டம் தனையடுக்கி
இயற்கைக் குயவன் கரும் சேறு
திண்ணம் பெறவே பூசித் தீ
திணித்துவிட்டப் பெருஞ்சூளை.
கண்ணின் கரிய விழி உறவு
காட்சிக் கினிய நீலகிரி!

2

சூளை வாயே கக்கும் புகை
சுருண்டே திரைபோற் திரண்டதுவோ
ஊளை நிறஞ் சேர்முகில் படலம்
உந்தி விண்ணில் ஓடுவதே
தாளிகை தேனை மாந்திச் சற்று
தயங்கிப் பறக்கும் தன்மை நேர்க்கும்.
காளை ஒருவன் புயம்போலாம்
காட்சிக் கினிய நீலகிரி!

3

பனிதனில் மூழ்கித் தாவரமாம்
பருவமோகப் பெண்களெல்லாம்
கனிச் சுவையோடை நீராகும்
கண்ணுடியில் தம்முகம் பார்த்து

நனி மகிழ்கொண்டே ஆடுகின்றார்
நாதன் காற்றின் வருகையதால்.
கணிகையர் நிமிர்ந்த தனம்போலாம்
காட்சிக் கினிய நீலகிரி!

4

மரகத மலையைத் துளைத்ததுபோல்
மணிக்காய் கமுகம் நீள் தருக்கள்
தரை மகள் அணிந்த தாவணிதான்
சரிந்தே காற்றில் பறப்பதைப் போல்
விரிவொடு வளைந்தே செலும்பாதை
விசித்திரம் காணக் காண இன்பம்.
திரநிலையடைந்த ஞானியைப்போல்
சித்தம் வளரும் நீலகிரி!

## 19. நதி

மின்ன லுடனே கூடி
மேகப்பெண் பெற்றெடுத்த
தன்னேரிலா எழிலே!—நதியே!
சளையாமற் போவ தெங்கே?

2

ரவியின் கிரணத்திலே
ராட்டினம் சுற்றிவந்து
புவியில் வீழ்ந்தனையே!—நதியே!
பொங்கிநீ போவதெங்கே?

3

தரையின் மணற் சரிவில்
தாள ஜதிகள் கூட்டி
உரைத்திடும் கற்களையே—நதியே
உதைத்துநீ போவதெங்கே?

4

புரவிவாய் நுரை போலப்
பொங்கியே வேகமாக
அரவது போல்நெளிந்தே—நதியே
ஆடி நீ போவதெங்க?

5

புவியெனும் வீணையிலே
பூட்டிய தந்தியைப் போல்
செவிதான் குளிர்ந்திடவே!—நதியே
சிந்துடன் போவதெங்கே?

6

உள்ளம் சுழற்றும் பெண்கள்
உந்திச் சுழியுடனே
வெள்ள நுரைக்கனவில்—நதியே
வேகமாய்ப் போவ தெங்கே?

7

கங்குல் பகலறியாக்
கபோதியைப் போல் நீயும்
பொங்கரும் புல்வெளியில்—நதியே!
புரியாமற் போவதெங்கே?

8

இழந்ததையும் ஏற்பதையும்
எண்ணு மனமுடைய
குழந்தையைப் போல்நீயும்—நதியே
குதித்துமே போவதெங்கே?

9

பித்துப் பிடித்தவன் போல்
பிறரின்றித் தான் ஒலித்து

*மற்றதெல்லா மறந்து—நதியே*
*மகிழ்ந்து நீ போவதெங்கே?*

## 10

*மலையிற் பிறந்தவள் நீ*
*விரிகடற் காதலனின்*
*நிலையெழில் காண்பதற்கோ—நதியே!*
*நில்லாமல் ஓடுகிறாய்?*

## 20. கன்யாகுமரி

கவிதைத் தமிழ்க்குமரி—முத்துக்
கடலுடை கொள்குமரி
சிவனார் மனங்குளிர—காதல்
தேக்கும் இளங்குமரி

அந்தி வர்ணக்குழம்பை—புவியில்
அள்ளித் தருங்குமரி
சிந்தை களிபாய—குளிர்ந்த
தென்றல் மொழிகுமரி

கால விழிகளிலே—தீபக்
கவினென ஒளிர்குமரி
நீலவான் மதிக்குடைகீழ்—தவம்
நிகழ்த்தும் அருங்குமரி

ஊழி அலைகளிலே—நடனம்
உற்ற கலைக்குமரி
வாழி தினம்வாழி—இளமை
வற்றா கன்யாகுமரி.

மூன்று கடல் முனையில்—கமல
முகைபோல் திகழ் குமரி
ஆன்ம ஒளிவீசும்—எங்கள்
அன்னை கன்யாகுமரி

## 21. குயில்

குளிர்மாந் தருவின் கோட்டுக் கிளையில்
குக் கூ! குக் கூ! எனக்குரல் விக்க
கூவுவ தேனோ கூறாய் குயிலே!
தின்ற பழத்துள் ஒன்றிய வித்துச்
சிக்கிற் றோவுன் செழுந் தொண்டையிலே?
அந்தோ அந்தோ, அப்படி யாயின்
அடைந்த குரலை மடைதிறப் பதுபோல்
திறந்தே விடுவேன் பறந்தே வாவா!
என்றே இரங்கி யானும் இயம்பச்
சோலைக் கவியாம் நீலக் குயிலது 10
சோகம் தோய்ந்த தொனியில் சொன்னது:
"மூடிய வானக் கூடையின் கீழே
கோழிக் குஞ்செனக் நாழிகை போக்கி
வாழும் மானிட வாழ்வின் குருத்தே!
உண்மையைச் சொல்ல எண்ணில் உள்ளம்
அலைக்கும் காற்றில் உலர்ந்த சருகுறும்
நடுக்கம் போலப் படபடக் கின்றது.
எனினும், உன்னிடம் இயம்பு கின்றேன்!
எண்ணமாம் வீட்டின் இருசன் னலெனும்
கண்களின் வழியாய்க் காதலர் உகுக்கும் 20

முத்தாம் கண்ணீர் சொட்டச் சொட்ட
உற்பவ மாகிய ஒலியின் அணுக்களைக்
கட்டித் திரட்டிக் கனலையும் கலந்து
மலர்மூச் சாகிய மணத்தையும் கலந்து
இருளின் அமைதிபோல் இன்குர லேற்று
மோனை எதுகையில் வானத்து மொழியில்
கட்டுத் திட்டமில் களிப்பின் மயக்கில்
குக்கூ! எனயான் கூறிடும் பாட்டில்
தொக்கியே நிற்கும் அருத்தம் இதுவே:

பாடு! பாடு! பாட்டின் எல்லை 30
ஜீவன்! ஜீவன்! வீடு! வீடு!
ஜீவ அன்பே தேவன்! தேவன் !
குக்கூ! குக்கூ! குக்கூ! குக்கூ !

## 22. பச்சைக் கிளி.

சீரான பைங்கிளியே—உனக்கு
சின்னப் புத்தியாகுமா ?
ஊரார் உரிமைபெற்றே—கூண்டில்
ஊசலும் ஆடுவதேன் ?

2

காலைச் செழுஞ்சுடரில்—மாஇலை
மேலெழுங் காட்சியது
சோலைப் பசுங்கிளியே—உன்றனின்
சுந்தரத் தோற்றமன்றோ ?

3

மழையாம் கணைபொழிந்து—வெப்பத்தை
மாய்த்திடும் வானவில்தான்
பழமுணும் பைங்கிளியே—கழுத்துப்
பட்டய மாகுமன்றோ ?

4

குன்றி மணிகளதே—உன்றனின்
கோல விழிகளன்றோ ?
பெண்களின் காதல்மொழி—உனது
பேச்சின் பிரதியன்றோ!

5

மண்வரு கெம்புமணி—உன்றனின்
மாங்கனி மூக்கல்லவோ ?
கண்நேர் சுதந்தரத்தை—விற்றதால்
கண்டம் கறுத்ததுவோ

## 23. காக்கை.

1

கங்குற் பொழுது கரைந்ததென்று—காலைக்
கதிரினை வாழ்த்திடும் மாந்தர்களே!
உங்கள் மடமதி எண்ணியன்றோ—உப்பு
உததி ஓயா நகை கொண்டுவிட்டாள்
எங்குஞ் சிதறிப் பொங்கிப்பறந்த—கங்குல்
எழில் உரு எங்களை யன்றி யுண்டோ?
பங்கம் புரிந்திட்ட உங்களுக்கும்—நாங்கள்
பண்ணும் நலமோ பலகோடியாம்!

2

காலை விழிக்குமுன் கண்விழித்தே—துயில்
கலைய கண கண ஓசையிட்டோம்
மாலை சூட்டி மகிழ் தந்திடவே—வரும்
மக்கள் விருந்தினை முன் உரைத்தோம்
நீளறிவுபெற்ற மானிடர்காள்—வாழ்
நியதிக்கு ஒற்றுமை காட்டித் தந்தோம்
மேலுற்றுப் பறக்கக் கற்றிடினும்—அந்த
மெய்யிடம் 'கா! கா!!' உலகை என்றோம்.

## 24. மயில்

வானத்துமின்னற் குழம்பினிலே—ஒளிர்
மரகதமணியின் பொடி தூவி
மோனத்தழகே படைத்ததுவாம்—மின்னும்
முகில்கண்டு ஆடும்மயில்மேனி !

2

இளம்பிறை தன்னிலே ஆயிரமும்—வான்
இந்திர வில்லினில் ஆயிரமும்
கலந்திழையும்திருக் காட்சியடா !—முகில்
காணநடமிடும் தோகையின் கண் !

3

ஆண்பெண் உடல்களின் சங்கமத்தால்—அன்பு
அன்றே அழிவுற்றுப் போகுமெனக்
காண்பிக்கக் காதல் படைத்ததுவாம்—இன்பக்
காவியத் தோவியம் கானமயில் !

4

கந்தமலர்ச்சோலைக் கன்னிமயில்—தனது
கண்களால் தாய்ப்பால் குடித்ததுபோல்
விந்தைமிகும் அதன் கண்ணிணைச்சுற்றி—முத்து
வெள்ளைநிற வட்டம் தோன்றுதடா !

5

சரக்கூடத்தோகை தனை விரித்து—வளை
தாரைநிகர்கழுத் தை நெளித்துப்
பரதநடனமே பயிலுதடா !—மனப்
பரவசமாய் எழிற் பள்ளியிலே !

## 25. சின்னஞ் சிட்டு

நெல்மூக்கு: கடுகுக்கண்; காற்றில் நீந்தும்
நிலவெனவே பஞ்சுடலம்; நெஞ்சம் தன்னில்
வெள்ளம்போல் புத்துணர்ச்சி; விம்மும் மூச்சில்
விடுதலையின் மென்கீதம்; விண்ணும் மண்ணும்
கொள்ளைகொள் தனிக்காதல் கொழுந்து உள்ளம்
கொத்தின்றிக் கூடுகட்டி வாழும் கொற்றம்
கள்வர்தம் பயமூட்டும் செல்வம் காணுக்
கலைஞானம் கண்டதடா, சின்னஞ் சிட்டு!

கணைஎனவே கட்டுகளைத் துளைத்தே தூய
கதிரவனின் ஒளிதனிலே இறக்கை தோய்த்து
இணையுடனே சுதந்தரத்தின் ஏற்றம் நோக்கி
எவ்விடத்தும் மனம்போல ஏகிச் சுற்றி
பணமோழை இவன் ஏழை எனப் பிரிக்கும்
பார்மக்கள் அறிவதனைப் பரிக சித்து
மணமிழையும் தென்றலிலே ஊஞ்ச லாடும்
மாகவிதை வடிவமடா சின்னஞ் சிட்டு.

## 26. பலி ஆடு

கூர்ந்துதரை நோக்கிக்—கறுத்த
ஆட்டுக் குட்டி யிரண்டு
சோர்ந்து கிடந்தனவே—இருளே
துண்டு பட்டாற் போல!
நேர்த்தி நிலவினிலே—கறைதான்
நின்று ஒளிர்வதுபோல்
பார்த்த அதன் விழிகள்—கண்ணீர்
பாய உரைத்த தென்பால்:—

2

"மாமலைகள் ஏறி—பசியை
மாற்றத் தழை தின்று
பூமி செழித்திடவே—எமது
புழுக்கை எருவாக்கிச்
சேமம் மக்கள் அடைய—வலிமை
தேக்கு நற் பால் அளித்தோம்;
சாமி பெயர் அதனால்—எமது
தலையை வெட்டுவதோ?

3

சாவில் மறைவதற்கு—நாங்கள்
சற்றுமே அஞ்சவில்லை!

பூவில் பிறந்தயாவும்—மரணப்
பொன்னடி சேரல் திண்ணம்!

நோவுறும் மக்களுக்கு—மருந்து
நூறுண்டு செம்மைபெற!
"காவு" கொடுப்பதினுல்—கடலில்
காண் அலை நின்றிடுமோ?"

## 27. சிவப்பு ரோஜா

எண்ணமெனு முட்கள் தைக்கத்தைக்க—இருள்
இதய ரத்தம் சொட்டித் தோய்ந்ததுவோ?
கண்ணொடு மண்ணும் மலர்ச்சிகாணக்—குளிர்
கடலெழும் காலையின் செங்கதிரோ?
பண்சுவை பதிந்த பாவையரின்—மொழி
பாக்கியம்வாழ் பச்சைக் கிளியலகோ!
வண்ணக் கனவில் குளித்தெழுந்து—மனம்
வாறித் தெளிக்கும் சிவப்புரோஜா!

## 28. முல்லை மலர்

ஆடவர் கைதொடாக் கன்னியர்கள்
அஞ்சனக் கூந்தற் கருவானை
நாடிநன் முத்தமே நல்கிடுவேன்
நட்சத் திரம்நிகர் முல்லைமலர் ! 1

எழிற்கடல் பூத்த முத்ததுவோ
எனவே கவிபுகழ் பெண்பல்லைப்
பழித்திடும் மேன்மைப் பதம் பெற்றேன்
பாடிடும் வண்டுறை முல்லைமலர் ! 2

மணத்தை அளித்துத் தளர்ந்தமனம்
மகிழ்வால் மலர்ந்திடச் செய்திடுவேன்
பணத்தைப் பழித்திடும் வெண்சோறு
பற்றிடும் பால்நிற முல்லைமலர் ! 3

வந்திக்கும் தெய்வச் சபைதனிலும்
வரவேற் பெனக்கு அதிகமுண்டு
இந்தியக் கைம்பெண் இனம்மட்டும்
என்னை அவமானம் செய்கின்றனர் ! 4

அந்தோ கைம்பெண் நிலையதுதான்
ஆழப் பதிந்தென் ஆவிதனைக்
கொந்திக் குணத்தை குறைக்காவிடில்
கோமள மேனியும் வாடிடுமோ ! 5

## 29. உதிர்ந்த மலர்

முள்ளுடைச் சிறுசெடியின்—கனவாய்
மூண்டு சிரித்தமலர்
கள்ளெனும் பொக்கிஷத்தால்—விம்மியே
கர்வம் அடைந்த மலர்.

பனித்துளி மணிசூடித்—தென்றலின்
பாட்டினைக் கேட்ட மலர்
கனிந்துள விண்ணைதன்கீழ்—மௌனக்
கல்வியைக் கற்றமலர்

அந்திச் சிவப்பினையும்—விண்மீன்
அழகின் விழிப்பினையும்
சிந்தையிற் கொண்டமலர்—மணமே
செய்து திளைத்த மலர்

வீழ்ந்து கிடக்குதையே!—உச்சி
வெய்யிற் சுடலையிலே
வாழ்வின் விருப்பங்களை—மண்ணிலே
வரைந்துளதோ வண்டே?

## 30. இருட்டு

இருட்டே ஓடிவாடி—சாவு
என்ன நடம் ஆடி
குருடன் கண்ணதுபோல்—பண்டம்
கொத்தும் காகம் போல்
இருட்டே ஓடிவாடி 1

குகையின் உட்புறம் போல்—மழை
கொண்ட கார்முகில் போல்
பகைவன் நெஞ்சது போல்—சேற்றில்
படிந்த எருமையைப் போல்
இருட்டே ஓடிவாடி 2

கன்னி கண்மைபோல்—தீபம்
காட்டும் சிட்டம் போல்
அன்னை கருவயிறுபோல்—கரிய
அரவின் நெளிவது போல்
இருட்டே ஓடிவாடி 3

சுடரொளி நுழையாத—காடு
சூழ்ந்த நிழலதுபோல்
உடலின் சுமை மறக்க —சாந்தி
ஊட்டும் தூக்கம் போல்
இருட்டே ஓடிவாடி ! 4

வண்ணான் சாலினிலே—நீலம்
வைத்துக் கரைத்தது போல்
என்றன் இமைகளிலே—முத்தம்
இட்டு இரா இனிக்க
இருட்டே ஓடிவாடி ! 5

## 31. வருவாளா?

காக்கைசிறு குஞ்சொன்று வாய்பிளந் தாற் போல
கங்குலினைப் பின்வைத்து முன்னின்ற செக்கர்
நோக்கிவரு கருமுகில்கள் பொன்மெருகு கொள்ளும்
நூதனத்தை விழிகளினால் சிறைசெய்து நின்றேன்
தாக்கியது என்செவியை! என்ன அது? அடடா!
தணியாத பெரும்போதை தமிழ்ப்போதை போலே
ஊக்கியது நாடிகளை; உயிரிலோர் மலர்ச்சி
உண்டாகக் காதல்தேன் ஊட்டியது தென்றல்!

* * *

முத்தம்தரு தென்றல்எனும் மோகனப்பெண் ணோடு
முத்தம்நிகர் முல்லையது மொட்டவிழும் காட்சிச்
சித்திரமே பார்த்திருந்தேன்; சிலிர்த்ததடா வானில்
தேன்துளியில் வைரப்பொடி தேக்கம்என உடுக்கள்!
கத்தியது காவின்குயில் கவிக்கனவு கண்டு!
காலமெனும் குருடன்தான் கைவீசி வந்தான்!
நித்திரையில் எனை ஆழ்த்தி நெஞ்சத்தைக் கொண்டு
நிலவுதனைக் காவலிட்டு உலவுதென்றல் சென்றாள்.

## 1· பெண் சக்தி!

தையலென்ற போதே—ஒரு
சக்தி பிறக்குதம்மா!—அவர்
மைவிழி காண்கையிலே—மனம்
மையலில் சிக்குதம்மா!

நடையைக் கண்டுவிட்டால்—ஞானம்
நழுவிப் போகுதம்மா!—அவர்
வடிவைக் கண்டுவிட்டால்—வாய்
மௌனம் அடையுதம்மா!

சிரித்த முகம் பார்த்தால்—சுடர்
சிந்தை குழையுதம்மா!—அவர்
பரிவுடன் பேசிவிட்டால்—தெய்வ
பக்தி பறக்குதம்மா!

கையினுல் தொட்டுவிட்டால்—நெஞ்சம்
கள்வெறி கொள்ளுதம்மா! அவர்
செய்யவாய் முத்தமிட்டால்—அருள்
ஜீவன் சிலிர்க்குதம்மா!

## 2. பெண் யார்?

பெண்ணை என்ன
பெயர் சொல்லி அழைப்பேன்?
மண்ணில் மறைந்தோர்
மண்ணில் பிறப்போர்
மாய விசை பெண்!

கண்காணாக் காற்று
கடல்காணா ஆழம்
மென்மலர் வெந்தீ
மிதந்துசெல் படகு
மேகநிழல் வான்வில்

பெண்ணை என்ன
பெயர் சொல்லி அழைப்பேன்?

கண்ணீரின் ஊற்று
கனவதனின் இனிமை
உண்மையும் பொய்யும்
உறவாடும் மேடை
உயர்நிலாச் சிரிப்பு

பெண்ணை என்ன
பெயர் சொல்லி அழைப்பேன்?

# 3. அவள்!

காமன் பொட்டிடச் சாந்தும்
கங்குல் தங்க இடமும்
களி கொண்டையும் வட்ட விழியினள.

தாமரை மலர்க்குத் தேனும்
தமிழ் தனக்குச் சுவையும்
தகை கொண்டையுந் தென்றல் மொழியினள்.

சிசுவின் மனத்தில் தூய்மை
சிதறிய மீனிற் சோபை
திறங் கொண்டையும் முல்லை நகையினள்.

குருடன் கண்ணிலே யிருள்
குழுறு ழிக்குப் பசுமை
குணங் கொண்டையும் கொண்டற் சிகையினள்.

மயில் தோகையில் வண்ணம்
வானவில்லில் காட்சி
மனங் கொண்டையும் வண்ண உடையினள்.

புயல்பின் அமைதி வர
பூவின் மணமும் வர
புகல் கொண்டையும் கங்கை நடையினள்

கவர்ச்சி தனக்குத் தாகம்
கலசத்திற்கு மகிமை
கவின் கொண்டையும் மொட்டுத் தனத்தினள்

பவச்செய்கையிற் றுறவு
பாட்டதனிற் பொருளாய்
பணி கொண்டையும் சத்வ குணத்தினள்.

## 4. காதல்

காற்றைக் கயிறுகொண்டு கட்டிவிட் டால்
காதலும் கட்டுண்டு போகும் மண்மேல்
போற்றத்தகும் அரும் மானிடா!—நல்
பூவை விட்டு வண்டு நீங்குமோ சொல்?
ஏற்றத் தாழ்வெதும் காதற்கில்லை—அது
என்ன சொல்லினும் சொல்லும் கிள்ளை
தோற்றம் அதற்கேதோ தோணவில்லை—எனில்
சொர்க்கத்திற் கப்பால் அதன் எல்லை.

சாதற்கு அஞ்சி நடுங்கும் பேதை
சற்றும் தெரிந்திடான் காதல் போதை
பூதலந் தன்னையே கையேந்த லாம்
பொங்கிய காதலால் வான்நீந்த லாம்
காதலர் பூஷணம் கண்ணீர் முத்து—மனம்
கனிந்த முத்தமே அவர்கள் சொத்து
காதலர் பேச்சாடல் கண் சிமிழ்த்து—அவர்
கனவுகள் காண்பதோ கண் விழித்து.

## 5. காதல் தத்துவம்

அழிந்துபோகும் உடலின்மீது
காதல் ஏனடா—என்று
ஆர்ப்பரிக்கும் மூடருக்கு
அறிவின் சொல்லிதே:—
அழிந்து போகும் மானிடர்கள்
ஜனன விருத்தியே—இங்கு
அழிந்திடாத உயிரியக்கப்
பதம தல்லவோ!

அழகுத் தீயின் ஜ்வாலையாகும்
காதல் என்பதே—அஃது
ஆண் பெண் எனும் இருகரைக்குப்
பால மாகுமே—
சுழலும் லோகம் சந்திர சூரியர்
சுற்றுதல் எல்லாம்—என்றும்
சுண்டிடாமல் ஜீவஆறு
பொங்கிப் பாயவே—!

## 6. காதல் பாதை

கடல் நீலம் வான் நெஞ்சில்
கமழுகின்ற காலம்
கவின் மலரில் தேன் வந்து
களிப்பெய்தும் வேளை
அடர்கானில் சூழ்ந்திருக்கும்
அமைதி நிகர் சோலை
ஆச்சரியம் கண் மலர்ந்து
அமைத்த சுனைப்பொய்கை
அருகினிலே கருக்கிருளில்
அழகு காதல் பாதை!

சந்திரிகை தானுருக்கித்
தரளப்பொடி தூவி
தகதகத்த செக்கர் நிழல்
தன்னுடனே கூட்டி
சிந்தனைகள் தனை நெய்து
செய்த ஒரு கிளையில்
தென்றலிலே திருவிளக்கின்
சிறகடித்து பாடும்
திறமையதன் அருகினிலே
செழும் காதல் பாதை!

நட்சத்திர வண்டினங்கள்
நனவின் அனல்மொய்க்கும்

நம பயத்தின் புதையலினை
ஞானப் பேய் காக்கும்
உட்கசிந்த தாயுள்ளம்
ஒளி ஊச லாடும்
உன்மத்தம் சிசு மழலை
உட்பொருளைக் கூடும்
உணர்ச்சியதன் அருகினிலே
உயர் காதல் பாதை!

## 8. முதல் முத்தம்

கொண்டலதே மின்னலுக்கு
கொடுக்கும் ஒளி முத்தம்!
வண்டதுவே தண்மலர்க்கு
வழங்குசுவை முத்தம்!
விண்ணதுவே வெண்மதிக்கு
விளக்கும் எழில் முத்தம்!
தண்டமிழ்த்தாய் தன அமுதால்
தந்தமுதல் முத்தம்!

## 9. காதலின் பதில்

விண்மீனை முத்தாரமாய்த் தொடுத்து
வேண்டியே காதற்குப் போடப் போனேன்
கண்ணீர்த் துளி மாலை யன்றி வேறு
கருதிடேன் என்றவள் கழறினளே !

தண் மதி தன்னிலே மது வடித்து
தயவொடு காதற்குப் பானம் தந்தேன்
எண்ணைப் பானமன்றிப் பிறி தொன்றையும்
ஏற்றிடேன் என்றவள் இயம்பினளே !

பூவின் சுகந்தத்தை மஞ்சமாக்கிப்
புண்ணியக் காதலைக் குந்தச் சொன்னேன்
சாவின் மஞ்சமன்றிப் பிறிதொன்றிலே
தங்கிடேன் என்றவள் சாற்றினளே !

## 10. காதலா? சாதலா?

கண்ணிற்கும் காட்சிக்கும் காதல்
கற்பனைக்கும் கவிதைக்கும் காதல்
விண்ணிற்கும் சுடருக்கும் காதல்
விளக்கினிடம் விட்டிற்குக் காதலா?

பூவிற்கும் வண்டிற்கும் காதல்
பூட்டிற்கும் சாவிக்கும் காதல்
நாவிற்கும் சொல்லிற்கும் காதல்
நாகத்திடம் தேரைக்குக் காதலா?

போருக்கும் வீரர்க்கும் காதல்
புலத்திற்கும் விளைவிற்கும் காதல்
நீருக்கும் மீனுக்கும் காதல்
நெருப்பினிடம் விறகிற்குக் காதலா?

அகிலுக்கும் மணத்திற்கும காதல
ஆழிக்கும் நிலவிற்கும் காதல்
முகிலுக்கும் மயிலுக்கும் காதல்
மோழையிடம் ஏழைக்குக் காதலா?

## 11. கடலும் வானமும்

உள்ளம் ஒருமித்த காதலர்கள்—இந்த
உலகினில் எங்குண்டு எங்களைப் போல்?
கள்ளச் சொல் ஈதில்லை காணுவீரே—வானக்
காதலன் தன் மேனி என்றன் மேனி
துள்ளும் உணர்ச்சித் திரைக் குரலால்—நித்தம்
சோர்வின்றிப் பாடிய காதற் பாட்டில்
மெள்ள மெள்ளஎன் வசமானார்—பாடும்
மேன்மைச் செய்கையை விடவசமோ?

இசையில் மயங்கிடும் எவ்வுயிரும்—ஈது
என் வரையில் உண்மை யாச்சுதம்மா
வசைகள் பலவெனைச் சார்ந்திடினும்—திரை
வாய் மூடிப்பாடா திருப்பேனோ?
பசிய முகில்களால் தூதுபேசி—தவம்
பற்றி யடைந்த நற் பாக்கியத்தை
நிசிவந்தும் நித்திரை கொள்ளாது—காதல்
நினைவினுற் பித்தேறிப் பாடுகின்றேன்

தலைவராம் வானம் எனைத்தழுவி—இதழ்
தந்த முத்தம் மாறி முத்ததாக
மலைத்து மனது திகைத்து நின்றேன்—கடை
விழிகொண்டு கூர்ந்தெனைப் பார்த்துச் சொன்னார்:
''மலைத்திடும் உள்ளமே மாய உள்ளம்—அதை
மருவுதல் மிகவும் மடமை''யென்று
தொலைவழி யோடியே நின்றுவிட்டார்—உயிர்த்
துணைவரைக் கூடாமல் தூங்குவேனோ?

## 12. ஒத்தடம்

வானெழுகும் நட்சத்திரம் போலவே அண்ணே !
தேனெழுகும் வார்த்தைகளைத் தெளித்துவிட்டாளே !

உருவமற்ற தென்றலிலே ஊறுங் குளுமை போல்
கருவிழிக்கு மறைந்திருந்தும் கண்ணடித்தாளே !

சந்தடியின் தலைதுணிக்கும் பிறையறிவாள் போல்
சிந்தனையைக் கொய்துநுதல் திலகமிட்டாளே !

புளித்திடுங்காய் இன்கனியாய்ப் பொங்கிடல் போல
சுளித்தவிதழ் ஒத்தடத்தால் சுகங்கொடுத்தாளே !

## 13. என்ன ?

ஒளி சுருக்கி விழி மறைத்து
உதயச் சுடரிலே—என்றன்
உருபுதைக்க உள்ள மதிலே ஊறுவதென்ன?

பலமிழந்து பொலிவுமங்கி
பதும மலரிலே—என்றன்
பாசந்தங்க உள்ள மதிலே பாடுவதென்ன?

**தாமரை :**

மணந் தெளித்து இதழ் கொடுத்து
வண்டிடத்திலே—என்றன்
மானம்விற்க உள்ள மதிலே மலருவதென்ன?

**வண்டு :**

மதுகொடுத்து உடல் களைத்து
மரத்தி டத்திலே—என்றன்
மாண்பைத்தோற்க உள்ளமதிலே விம்முவதென்ன?

**மரம் :**

மழை பொறுத்து வேர் புதைத்து
மண்ணிடத்திலே—என்றன்
மௌனஞ்சிந்த உள்ளமதிலே மொழிவதுமென்ன?

**மண் :**

மலை சுமக்க கனல் சகிக்க
மக்கட் கூட்டமே—என்றன்
மதிவெறுக்க அவர் மனத்தே கொதிப்பதுமென்ன?

**மக்கள் :**

உணவளிக்கப் பொருள் கொடுக்க
உயிர் தனக்குமே—என்றன்
உறவில்வெட்கி ஓடஅதனுள் ஒளிருவதென்ன?

## 14. முறையீடு !

முல்லை மொட்டெனவே நானிருந்தேன்—அவர்
மொய்த்திடும் தென்றல தாகிவந்து
சொல்லாம லென்னவோ சொன்னாரடி—என்றன்
தூக்கம் கலைந்திட மெய்சிலிர்த்தேன்!

2

மேகச் சிதறலாய் நானிருந்தேன்—அவர்
மின்னுகிப் புன்னகை தூவிவிட்டார்
மோக இடிகள்நெஞ் சுட்குமுற—என்றன்
தேகங் கரைந்து மழையானேன்!

3

துள்ளும் அருவியாய் நானிருந்தேன்—அவர்
சூழலை யாகிஎன் மேனி தொட்டார்
உள்ளம் குளுமையி லூறிடவே—தினம்
ஓடுகிறே னெங்குந் தேடுகிறேன்!

## 15. விம்மாதோ ?

காா்முகிலிற் கண்பறிக்கும் மின்னல் சிரிக்குதே
கட்செவியின் நச்சில் ரத்னமணி தான்மலருதே
வார்த்தையினில் எண்ணமதன் வாசம் கமழுதே
வஞ்சனெந்தன் நெஞ்சிலுன்றன் மோகம் விம்மாதோ?

2

உருவமற்ற தென்றலிலே குளுமை யூறுதே
ஒரு துளிமோர் பாலதனின் உயிரைச் சுவைக்குதே
கருங்குயில்தான் தங்கக்கம்பி குரலிற் பாடுதே
கயவனெந்தன் நெஞ்சிலுன்றன் காதல் விம்மாதோ?

3

குடிக்க வொண்ணு வாரிநீரில் முத்துக் கொழிக்குதே
கொடு மிருட்டில் கோட்டானதன் கண்கள் ஒளிருதே
படிஅறியாச் சிறுமகவும் பண்ணில் லயிக்குதே
பதிதனெந்தன் நெஞ்சிலுன்றன் பாசம் விம்மாதோ?

4

திணரச்செய்யும் புகையிடையே தீயும் ஜொலிக்குதே
தீதுதரும் முட்செடியில் ரோஜாத் திரளுதே
தணிந்து கேட்கும் பிச்சை யொலியில் லஜ்ஜை ததும்புதே
தருக்க னெந்தன் நெஞ்சி லுன்றன் தாபம் விம்மாதோ?

## 16. குழலும் ராதையும்

ராதை :—

''மதுர இசை பொழிகுழலே!—பெரும்
மாயனின் மலர்க்கைக் குழலே!!
புதுமை யாதுநீ கண்டாய்—வெகு
பூரித்து ஜெகமே மறந்தாய்?
பதியாம் கண்ணன் மலர்க்கண்—துயில்
படிந்தே மலர்ந்திடு முன்னம்
மெதுவாய்ச் செவியிற் சொல்க—நீ
மெய்ம் மறந்தவக் காரணத்தை.''

2

குழல் :—

''கண்டை நீகர்மொழி மாதே—மதி
காணவெட்கும் முகராதே!
அண்டை அயலாரிடத்து—நான்
அறைவதைப் புகல வொண்ணுது
பண்டு யான்ஒரு பெண்ணே—இப்
பாரினை யெள்ளி நகைத்து
ஓண்டினேன்வேய் ஒன்றதனில்—ரவி
ஒளிஎன்மேல் பட்ட தொருநாள்.''

3

"பட்டிப் பசுக்களை மேய்த்து—அங்கு
பாடி வந்த ஒரு சிறுவன்
சுட்டி என்றனைக் காட்டி—ஏதோ
சொல்லப் புகுமுன் மற்ருேன்
"வெட்ட டாகுழ லேசெய்ய"—என
விரைந்தே கொடுவாள் கொணர்ந்து
அட்டி செயாதெனை வீழ்த்தி—அவன்
அளித்தான் கண்ணன் வசமே.

4

"நூதனக் கோலம் கொண்டேன்—எனில்
நூறு கோடி எண்ணம் மனத்தில்
சாதனை உன்னிடம் எதற்கு?—நிஜம்
தனையே சொல்லிட அஞ்சேன்
காதலே வெகு எளிதென்று—நான்
கருதினேன் கல்லா ததினுல்
வேதனை மிகவும் கொண்டேன்—அதை
விளம்பில் நீயே திகைப்பாய்.

5

"நெஞ்செலாம் துளைக்கப்பட்டு—என்
நிலையே மாறிப் போச்சு
வஞ்சியே பொய்யது சொல்லேன்—நீ
வைத்துப் பாரு கை என்மேல்
சங்கீத மொன்றே எனது—நல்
ஜன்ம மென்று மாறிற்று
வஞ்சமில் காதலர் மூச்சே—என்
வாழ்வை நடத்தும் சக்தி!"

## 6

**ராதை :—**

*"குழலே! உன்றன் சரிதை—வெகு*
*குதூகலம் வியப்பு மீந்து*
*அழலாம் காதலி னிடத்து—என்*
*ஆசை தீயாமற் காத்த*
*பழம்போல் வாயுடைக் கண்ணன்—உனைப்*
*பற்றியே முத்தந் தருங்கால*
*செழுங்கண் ராதை தனக்கே—பெரும்*
*சினமே பொங்குவ தென்ன?"*

## 17. கிழவியின் ஏக்கம்!

வனமுழுதும் புதுமலரின்
வாசம் கமழ்கின்றது;
வானமதில் மீனினங்கள்
கண்சிமிட்டிப் பேசுது;

கனவு கண்ட சிசுப்போல
கருங்குயிலே கத்துது;
கல கல யென் றோடைநீரும்
கவலையற்று ஓடுது;

அனம் கடலில் நீந்துதல்போல்
அம்புலிவான் தாவுது;
அருவமான தென்றலது
ஆலாபனஞ் செய்யுது;

எனக்கிதனால் என்னபயன்
எங்கோ மனம் சுழலுது;
இளமை காதல் இழந்துவிட்டு
ஏச்சுக்கிழ மாகினேன்!

## 18. பத்தினிச் சிலை

கடல்முன் ஒருநாள் மனக்கனவைக்—கவியாய்
கரையில் எழுதிக் களிக்கையிலே
பிடரியே சிலிர்த்த சிங்கமென—எழுந்த
பேய்மணற் சூறை அழித்ததையா!

பொங்கிய ஆழ்கடல் துயறுற்றது;—திங்களின்
பொன்முகம் நோக்கியே முறை யிட்டது!
செங்கதிர் ஓர்தினம்: கடற்கவிதை—கண்ணகி
சிலையாய்ப் பூம்புகார் உள தென்றது

கேட்டதும் நீள்கடல் மனம்மகிழ்ந்து—சிலம்பைக்
கிளர்அலைக் கையெடுத் தார்த்திட்டது
மூட்டிய தீபட்ட மதுரைதனை—அந்தியே
முன்தரும் செக்கரில் பார்த்திட்டது!

பத்தினி சிலையான தன்பாடல்—மாதவி
பாடிய கானல் வரி எனவே
வித்தகச் சிரிப்பொடு பாடிவரும்—காவிரி
வியப்புற முத்தம் அளித்ததையா!

# 19. கதிரோன் கவலை

கதிரோன் என்றன் நெஞ்சில்—காதல்
கனலே காலை மாலை
உததி மூழ்கியும் தணித்தல்—இன்றி
உலகம் சுற்றிடு கின்றேன்
விதியைக் கும்பிடத் தானே—இங்கு
விளைந்தோம் இருகர மாக
எதிரில் வந்தும் ஏனோ—நீயே
என்னைப் பிரிந்தாய் இருளே!

என்றன் துன்பத் துடிப்பு—உனக்கு
இனிய பாடல் என்று
நின்றே கேட்கின் றாயோ—ஏடி
நிலவுச் சிரிப்பு இருளே
உன்றன் மார்பில் ஜொலிக்கும்—வைர
ஒளிக ளான தாரை
கண்ணீர்த்துளிகள் அன்றோ—உண்மை
காதல் பரிசு தானோ!

உன்னைக் கூடி நின்ற—கதிரென்
உள்ளக் கனவு எல்லாம்
உன்றன் கரிய குழலில்—நிதமும்
ஒளிரும் முல்லை யாச்சோ!
உன்னை யீன்ற வானே—என்னுடன்
ஓடி ஒளிவாய் என்று
கண்கள் பலவாம் விண்மீன்—கொண்டு
காவல் செய்கின் றாளோ?

## 20. கேள்வி

"கடவுளைப் பாடி டாமல்,
கள்தரும் கன்னி என்றன்
அடிமலர் வீழ்ந்த தேனே?
அறிவிலாக் கவிஞன் நீயோ?"

என்றொரு கேள்வி கேட்ட
இளங்குயி லாளே! கேளாய்!
உண்மையைச் சொல்வேன்! கள்ளை
ஊற்றடீ! குடித்துச் சொல்வேன்!

கடலிலே பிறந்த முத்து
கடலணி யாவ துண்டோ?
மடமயில் நீஅ ணிந்தால்
மாட்சியும் காட்சி யுண்டு!

கதிரவன் ஒளியி னாலே
கலைநிலா ஒளிபெற் றாலும்
கதிர்வரு பகல்சே ராமல்
கங்குலைச் சேர்தல் பாராய்!

வீணையின் நாதம் தன்னை
வீணையே கேட்ப துண்டோ?
வீணையே நாத இன்பம்
விளைப்பது. உன்செ விக்கே!

## 21. விடை

பூத்த இரவு வெளிறு முன்னே,—நீயே
போகிறேன் என்பதும் ஏனோ? கண்ணே!
பொன்னான முத்தக் கனவ தெல்லாம்—இன்னும்
போகாமல் சுற்றுது உன்றன் பின்னே!

காத்துக் கிடக்குது கங்குல் பின்னும்—அஃது
கைகூப்பி விடைதர வில்லை இன்னும்
கண்ணீர்த் துளியோடு விண்மீனொளி—ஒன்றாய்
கட்டித் தழுவிக் கலங்கி மின்னும்!

வெண்ணிலா குளிருக்கு வெள்ளைமேகம்—துகில்
வீசியே போர்த்தது! என்றன் ஆகம்
வெண்பனிச் சல்லாவை மூடிவிட்டே—உன்றன்
வீடெனும் சிறிய சொர்க்க லோகம்!

போகிறேன் என்பதும் ஏனோ? கண்ணே—கதிர்
பூத்து இரவு வெளிறு முன்னே!

## 22. காதலியின் ஏக்கம்

கண்ணால் பேசிப் பேசி—இன்பக்
காதல் தந்த கண்ணன்
இன்னமும் வந்திடக் காணேன்—யான்
என்ன செய்வேன் பாங்கி?

வேற்றுமுகம் காணு திருந்தேன்—அவன்
வேணுகானம் கேட்டு மறந்தேன்
காற்றது போலவே மறைந்தான்—அந்தக்
கள்வன் எப்போ வருவானோ?

இரவு நேரமும் ஆச்சு—ஊர்
இறைச்ச லடங்கிப் போச்சு
விரல்தொடா வீணை போலே—நான்
விழிக்கின் றேனே பாங்கி!

வண்டுதொடாப் புதுமலர்யான்—தனி
வதங்கி வாட லாமோ?
தண்மதி வெண் தணலாக—எனை
தகிக்கின்றதே பாங்கி!

சுருட்டி வையடி பாயை—அணை
சுடர்செயும் தீப மதனை
இருட்டி லாகிலும் அவனின்—நிறம்
ஏழை நெஞ்சிலு லாவட்டும்!

## 23. குழந்தை!

ஓட்டும் இரண்டுளத்தின்
உவகைக் கனவினிலே
சொட்டும் தேன் சுவையிற்
தோய்ந்த சிறுமலரே!

துள்ளும் இரண்டலையின்
சோதிச் சுருதியிலே
வெள்ளி முளைப்பாக
விளைந்த இளம்பொழுதே!

கண்ணில் விண் வளைவு
கலந்த கவர்ச்சியிலே
அண்டம் அளக்கவந்த
அமுத இளம் பிறையே!

எச்சில் இலாதமொழி
இதயம் தழுவையிலே
அச்ச மிலாது வந்த
அழகின் சிறுகவியே!

## 24. காட்டுக் காதல்!

மாலை வெயில் சூரியன் போல்
மஞ்சள் பூசிக் குங்க மிட்டு
காலையிலே கஞ்சிக்கொணர்ந்த செல்லாயி!
ஒரு—கதைநான் சொல்லப்போறேன் நில்லாயி!

கறுக் கரிவாள் போலி ருக்கும்
கார்த்திகை மூன் றும் பிறைதான்
அறுக்குது நெஞ்சந் தன்னைச் செல்லாயி!
நீ—அதன் காரணந் தெரிந் தால் சொல்லாயி!

சடையிட்ட நெற்கதிர்கள்
தாழம்பூப் போலானால்
மடைத் தண்ணீர் சலசலப்பு செல்லாயி
நீ—மகிழ்வாய்ச் சிரிப்ப தாமோ விள்ளாயி!

## 25. இன்பக் கடல்

வெட்கம் விட்டுப் பக்கம் வந்து நில்லு—கண்ணின்
வேலால் எனைக் குத்தியதேன் சொல்லு
பட்டம்விட நூல்தந்தாயே அன்று—துன்பம்
பறந்திட ஓர்முத்தமேதா இன்று

வந்து வந்து நாட்கள் போகுதோடி—சமயம்
வாய்த்தது சமைந்தாய் வந்தேன் தேடி
குந்திப்பேசக் கண்டால் நிலா ஒளிக்கும்—அது
குளிர்பனியைப் பன்னீராகத் தெளிக்கும்

நரைத்த சந்யாசி அந்த நாணல்—செல்லும்
நதியும் மரக் கிளை போலே கோணல்
அறைக்குள் சென்று அந்தரங்கப்பேச்சு—பேச
அகத்துடிப்பு விண்மீன் துடிப்பாச்சு

கண்ணும் கண்ணும் கொஞ்சுகிற வேளை—நெஞ்சம்
காணும்கனு வானவில்லின் சோலை
வண்ணப் பூவே வண்டு வந்துவிட்டேன்—தேனை
வார்த்துத்தர வளைக்கரத்தைத் தொட்டேன்!

கூத்துப் பார்க்கத் தாயும் தந்தை போனார்—நம்மின்
கூத்துப் பார்ப்பார் உருவிலியு மானார்
சாத்திரக் கல்யாணத்தாலி பின்னே—என்னை
சட்டெனத்தள் இன்பக்கடல் முன்னே!

## 26. காதலன்—காதலி

உன்னைப் பற்றி எழுதுதற்கு
உள்ள தென்னேடி!—காதலி
உள்ள தென்னேடி!

கண்ணைச் சற்றுப் பார்த்தெழுது
கதிர், நிலா என்றே—காதலா
கதிர், நிலா என்றே...!

2

கண்ணி னுள்ளே என்ன உண்டு
கழறு வாயடி—காதலி
கழறு வாயடி!

கண்ணி னுள்ளே உன்னுடைய
கட்டழகைப் பார்!—காதலா
கட்டழகைப் பார்!

3

பார்த்துப் பார்த்து ஏங்கிவாடும்
பனிமலர் நானே?—காதலி
பனிமலர் நானே?

கோத்தமலர் கொண்டை தன்னில்
கொடுக்கும் முத்தம் பார்!—காதலா
கொடுக்கும் முத்தம் பார்!

## 4

முத்தம் பெற்ற மலர், மணமாம்
மூச்சை விட்டதே—காதலி
மூச்சை விட்டதே...!

முத்தமிழ்ப் பெண் விட்டமூச்சே
மோகத் தென்றலாம்—காதலா
மோகத் தென்றலாம்!

உருவ மற்ற தென்றலாய் நான்
உலவ வேண்டுமா?—காதலி
உலவ வேண்டுமா?

அருவ மாகி உயிரைத் தூண்டல்
அநங்கனே யன்றோ!—காதலா
அநங்கனே யன்றோ!

## 27. அழகு ரகசியம்!

மங்கையே உன்னிடமே—ஒரு
மர்மம் உரைத்திடுவேன்
எங்கினும் சொல்லாதே—நீ
எனைவிட்டுச் செல்லாதே.

2

விண்ணின் பிறைதனிலே—ஊசல்
விரைவொடு, ஆடிவந்தாய்
மண்ணின் மதுக்குடித்தால்—முழு
மதியமதாகிடுவாய்

3

இடர்தரும் இரவினிலே—தாரை
எனக்கண்ணீர்விடுத்தாய்
கடல் தரும் முத்தணிந்தால்—பொங்கிக்
கடலலையாய்ச் சிரிப்பாய்.

4

கொண்டற் குழலினிலே—அச்சம்
கொண்டுமின் போல் துடித்தாய்
பொன்னின் இழை அணிந்தால்—காலை
பூத்த மலராவாய்.

குறைவாம் அழகுடனே—விதி
கொண்டுதந்த துணையே
நிறை எழில் பெறுவதற்கே—இந்த
நிலமது உள்ளதடீ!

6

அங்கையில் ரேகையுண்டு—உனக்கு
அழகினில் ஆசையுண்டு
திங்களாய் ஆவதற்கு—காதல்
செம்மது குடித்திடடீ!

## 28. சதிபதி சரசம்

கன்னல்தனைத் தமிழாகப் பிழிந்து பேசும்
காதலியே! கருநாவற் கண்ணி ஞளே
தென்னைப் புதுப்பாளையென சிரித்த முல்லை
செம்மாலை வருஉடுபோல் கொண்டு வந்தேன்
பின்னற்சடை கரும்பாம்பாய் வாரிப் பின்னிப்
பீடுடைய மணிபோன்று வைக்கா விட்டால்
உன்றன்அன்னை இதைச் சோளப் பொரிய தென்று
ஒளிந்திருளில் பொக்கைவாய்ப்போட்டுக் கொள்வாள்.

தங்கநிறம் தனைக்காட்டி கிளிகொத்தாமல்
சமைந்திருந்த மாம்பழம் உன் தனத்தைப் போலப்
பங்கிடவே உன்னிடமே கொண்டு வந்தேன்
பைங்கிளியே நீ இதனை மறுத்து விட்டால்
அங்கிருந்து செவியிருந்தும் கேட்கா உன்றன்
அன்னையவள் பருப்புருண்டைச் சாதமென்று
மங்கிருளில் பொக்கைவாய் போட்டுக் கொண்டு
மாரடைக்கத் தண்ணீரும் குடிக்க கேட்பாள்.

3

கைநெசவில் கைதேர்ந்த காஞ்சி மக்கள்
கலைவளத்தை காட்டுகிற பட்டுச் சேலை
நெய்மிகர்த்த உன்மேனி கட்டிச் செந்தீ
நெகிழ்சுவாலை வீசிடவே கொண்டுவந்தேன்

நொய்யரிசிச் கொதியல்போல் கோபம் கொண்டு
நூலிடையாள் நீ வெறுத்துக்கூறி விட்டால்
பெய்ப்பனிக்கு போர்வைஎன உனது அன்னை
பிரித்திதையே போர்த்திமுகம் மூடிக் கொள்வாள்.

4

இவ்வளவும் வாங்கிவந்த எனக்கு நீயே
இச்சென்று அச்சார முத்த மீந்து
கொவ்வை எனச்சிவந்த உன் இதழைக் கூட்டிக்
கொடுக்கின்ற தேன்மதுவைத் தருவதற்கு
செவ்வியதாம் அகல்விளக்கை அணையேனென்றால்
திருட்டுத்தனப் பூனைஎனப்பார்ப்ப தாலே
எவ்விதத்தும் இருவருமே கூடல் தன்னில்
இளைப்பில்லை எனக்காட்டில் இரவுபோகும்!

## 29. கடைசி முறை

என்னை நீயே காதலித்தாய்
என்றே உரைக்கக் கேட்டவுடன்
இன்ப சொர்க்கம் இக்கணத்தே
இறப்பேன் இன்றேல் நரகடைவேன்!

2

வந்த தென்றல் அந்தியிலே
வாச மூட்டும் மல்லிகைக்கே
விந்தைத் தென்றல் புயலாமுன்
வீழ்தல் அமர பதமன்றே!

3

பொன்னின் மின்னல் கண்டவுடன்
கண்கள் குருடாய் விடுமானல்
மண்ணில் பள்ளம் மேடுகளை
மறுபடி காண வகையுண்டோ!

4

வள்ளம் வழிய மதுவதனை
வார்த்துத் தாராய் கடைசிமுறை
உள்ளம் துடிக்கப் பருகிடுவேன்
உன்கனவோடு உறங்கிடுவேன்.

## 30. காதலன்

தென்றலது முல்லைதனை முத்த மிடுதே
தேன்நிலவு வானமதை முத்த மிடுதே
குன்றினையே கொண்டலது முத்த மிடுதே
குயிலதுவே என்னெஞ்சாய்க் கூவு தன்பே

எனைநீயே முத்தமிட இசையா விட்டால்
எதிர்காணும் காட்சியெலாம் வீணேயன்றோ

நதியதுவே கடலதனை நாடிச் சேருதே
நாளதுதான் மாதந்தனை நாடிச் சேருதே
உதிர் பனியே அல்லிமலர் நாடிச் சேருதே
உயிர்மூச்சுத் துடிப்புன்னைக்கூவு தன்பே

எனைநீயே நாடிவர விதிதடை யென்றால்
இவ்வுலகக் காட்சியெலாம் வீணே யன்றோ!

## 31 கதவைத் திற!

கதவைத் திறந்திடடீ—ஆசைக
கட்டிளமைக் கன்னி
உதய மானதடி—மது
ஊற்று உயிர்க்கன்னி!

வான நிலா மதுவும்—இருள்
வள்ளம் இல்லையடி
காணும் கைபேலா—இங்கு
காலி யானதடி'

தூக்க மினுமோடி—புள்ளே
சூழ்ந்திசை பாடுதடீ
ஏக்கக் கனவெல்லாம்—பாட
எண்ணி துடிக்குதடீ

பொய்கைத் தாமரையை—வண்டு
பொருந்தி விட்டதடீ
பையக் கண்விழிப்பாய்—உன்றன்
பாதம் கும்பிடுறேன்!

ஆற்றின் அக்கரைக்கே—நண்பர்
அலையாய் முந்துகிறார்
காற்றிற் புகையாக—நானே
கணத்தில் பறந்திடவே!

## 32. பிரிவும் நிறைவும்

ஆழ்கடலும் அலையும்போல் பிணங்கிப் பின்னர்
ஆதவனின் ஒளிக்கேங்கும் மதிபோ லாகி,
வீழ்புனலே வீணையாகி வான வில்லின்
வியன்கனவைத் தென்றலில்பண் இசைக்கும் வேளை,
தாழ்வடையா விண்விரிவும் விண்ணில் தங்கும்
தன்மயமாம் அமைதி எனத் தழுவி நின்றோம்.
ஊழ்வினையால் இருகரையாய்ப் பிரிந்தோம் என்னில்,
ஓடுதடி! நம்மிடையே நதியாய்க் காதல்.

2

குருதியோடு கூடிவந்த செழும் நிறம்போல்
குழந்தைமுதல் நம் உயிரில் இணைந்த நேயம்;
முருக்விழும் மலர்முகைமேல் வண்டு நின்று
முத்தமிடக் கண்டுமுத்த மிட்ட தன்மை
இருக்குதுளம் மகிழம்பூ வாசம் போலே
இதை எண்ணில் மனம் மயக்கில் கிறுகிறுக்கும்
நெருப்பெனவும் விளக்கெனவும் பிரிந்தோம் என்னில்
நிறைந்துளது இரண்டிலும் நம் வெப்பக் காதல்.

## 33. பேராசைக்காரி

பொங்கும் கடலென யா னிருந்தால்—அவள்
பொன்மணற் கரை எனப் புணரவராள்
கங்குல தாகவே யா னிருந்தால்—அவள்
கள்நில வாகிக் கலக்க வராள்

துயிலும் விழி என யானிருந்தால்—அவள்
சொப்பன மாகிச் சுகிக்கவராள்
பயிர்வளர் வயலென யா னிருந்தால்—அவள்
பரிவோடு வரப்பெனப் பக்கம் வராள்

தெண்ணீர்த் தடாகமாய் யானிருந்தால்—அவள்
செம்மல ராகியே சேர வராள்
விண்ணின் விரிவென யானிருந்தால்—அவள்
விந்தை அமைதியாய்க் கொஞ்ச வராள்

காட்டாளி வில்லென யா னிருந்தால்—அவள்
கணைஎனக் கட்டி அணைய வராள்
பாட்டாளி மகனென யா னிருந்தால்—அவள்
பட்டினி வயிறென ஒட்ட வராள்!

## 34. காதல் தீபம்

சேர்ந்து சுகிக்கும் முன்னே—ஒரு
தீபம் வேண்டும் பெண்ணே!
ஓர்ந்துறுதிகொள் நன்றே—நாம்
ஒருயி ராகுமு னின்றே.

காதலின் பாதையின் மீது—செல்லும்
காலடிச் சுவட்டைக் காண!
ஆதவன் தனையே நோக்கி—ஒளி
அருள்வாய் எனவே கேட்பேன்.

ஆதவன் கடலில் மூழ்கி—இருள்
அளிக்க அகமே கொண்டால்
சீத வெண்மதி தோன்றும்—காதல்
சிந்தைக் கனவைக் காட்டும்!

வெண்மதி முகிலில் சென்று—பூத்த
வெளிச்சம் மறைக்கு மாகில்,
விண் நிறை தாரகைக் கூட்டம்—காதல்
விந்தை மனத் துடிப் பாகும்.

விண் நிறை தாரகைக் கூட்டம்—காலை
வெண்பனி முத்தென வீழ்ந்தால்,
மின்னிடும் பொன்னின் வண்டு—காதல்
மேன்மைப் புகழைப் பாடும்!

பொன்னின் வண்டுகள் போனால்—நேசம்
பொங்கு கருவைர மான,
உன்றன் கண்கள் காட்டும்—காதல்,
ஒளியில், முத்த மீவேன்!

சேர்ந்து சுகிக்கும் முன்னே—ஒரு
தீபம் வேண்டும் பெண்ணே!

## 35. பூவோ மலர்ந்தது ?

கனிகொண்ட தழைமரம் நுழைந்தது குளிர்தென்றல்
கவின் ஓசை கேட்டதென் காது—தண்டைக்
காலோசை கேட்பதும் யாது?

காரிருள் தனைக்கீறி உமிழ்ந்தது கதிர் விண்மீன்
காட்சியை யான்கண்ட வேளை—அங்கு
காண்பதென் ஜிகினாச் சேலை?

முத்து வெடித்தாற்போல் முல்லை விழித்தது
மொய்த்தது என் விழிக்கோணம்—பொங்கி
மூள்வதென்ன நகை வாணம்?

நெருப்புக் குரல் குயில் உருக்கிவார்த்தது யிசை
நினைவினிற் புகுந்ததென் மூச்சு—செவி
நின்றொலிப்ப தென்ன பேச்சு?

மலர்களுதிர எங்கும் மதுரசம் சொட்டிற்று
மண் ஊறி வீசிற்று வாசம்—என்றன்
மனம் நனைத்த தெந்தப் பாசம்?

நிலவில் தோய்ந்த இருள் பகலின் கை கோர்த்தது
நித்திரை கண்ணி லுலர்ந்தது—வான்
நிழல் நீரிற் பூவோ மலர்ந்தது?

## 36. பொதுமகள் !

முதுநகர் மதுரை மன்னு!
முத்தொடு தமிழுங் கொண்டோய்!
பொதுமகள் போல உன்றன்
பொற்றொடி வைகைப் பெண்ணாள்
மதுமலர்த் தனத்தால் என்றன்
மார்பினில் காமம் தைக்கப்
புதுப்புனல் நுரையின் சேலை
புரளவே புணர்ந்திட் டாளே...!

கயல்விழி சிவக்க நோக்கிக்
கண்ணிணைச் சிவக்க வைத்தாள்
அயல்இதைச் சொன்னால் உன்றன்
ஆட்சியை மதிப்பா ருண்டோ?
உயர்வென நீதி யுண்டோ?
ஒருவனே தனித்து வந்தால்
மயலெனும் சுழியில் தள்ளி
மனத்தினை பறித்திட் டாளே...!

## 37. தாஜ்மஹால்

வட்டநிலா புவி வீழ்ந்ததுவோ?—ஷாஜஹான்
வடித்த கண்ணீரின் முதல் துளியோ?
திட்டமிட்டுப் பூத்த சொப்பனமோ?—மும்தாஜ்
ஜீவ தீபந்தான் சிரிக்கின் றதோ?

காதலெனும் ஆழ் கடல்தனிலே—நினைவதுவே
கண்டெடுத் திட்ட பெரிய முத்தோ?
சீதவான் மீன்கண் பலகோடியால்—விழித்துக்காண்
சேற்றில் முளைக்காத வெண்ணல்லியோ?

நீல யமுனை நதிக்கரையில்—கவிதைப் பெண்
நீராட வைத்த வெள்ளிக் குடமோ?
காலம்தன் மர்ம உயில்தனையே—வைத்துள்ள
கவின்மிகு தந்தத்தின் பேழையதோ?

மேவிய காதல் புகழையெல்லாம்—எண்ணயாழ்
மீட்டிடும் மௌனமாம் பாடகனோ?
சாவதன் நெஞ்சமும் நெக்குருக—சலவைக்கல்
தனித்தமும் அதிசயம் தாஜு மஹால்!

என்று பலவிதம் யானெண்ணியே—மதுக்கிண்ணம்
    எடுத்துப் பருகும்போ தோர் குரலே:—
இன்றென் இரத்தம் குடிப்பவன் நீ!—அன்றெந்தன்
    இரத்தம் குடித்தவன் ஷாஜஹானே!

தொட்டது என்காதல் வானமென்று—சொல்லும்படி
    தூபிகள் நாட்டியே நல்லவண்ணம்
கட்டுக சிற்பியே! என்றான் மன்னன்—பசியதற்குக்
    கைதியான யான் என்ன சொல்வேன்?

கொட்டிற்று குளவிபோற் கற்பனைகள்—உலகில்லாக்
    கோலத்துடன் 'அதை' நிர்மாணிப்பேன்!
தட்டிப்பேசாத் துணைவேலையாட்கள்—தினந்தினம்
    தருவீரா லட்சம்பேர் பத்தாண்டிற்கு!

என்று கேட்டேன் மன்னன் ஒப்பினனே;—கைதன்னில்
    எடுத்தேன் கல்லுளி! அமைத்தேன் தாஜ்!
நின்று கண்டமன்னன் மிகமெச்சினான்—என்கையை
    நீட்டென்றான் நீட்டினேன் வெட்டிவிட்டான்!

துடித்தனன் துவண்டனன் குருதியிலே—புழுவென்ன
    துன்பக் கனலிடைக் கொந்தளித்தேன்!
வெடிச் சிரிப்போடு அவ் வேந்தர் வேந்தன்—சிற்பி நீ
    வெகுளாதே! வேண நாள் ஆசை யிதே!

ஒன்றுபோல் மற்றொன் றமைந்துவிடில்—இப் பாரில்,
    உயர் விதிக்கே ஒரு பெருமை யுண்டோ?
என்றன் கருத்தும் அஃதறிவாய்!—சிற்பி நீ
    இனி இதைப் போல் அமைக்கா தொழிக!

போதும் வரிக்கு வரி வாங்கி—இச் சின்னம்
பொற் கோயிலாகவே செய்து விட்டேன்!
காதலின் மறுபெயர் சாதலடா!—வீழ்ந்தாய் நீ
கடவுள் ஆணை வாழ்வேன் யானே! போ!

போ!போ! பொருள் பெற்றுப் போபோ! என-ஷாஜஹானும்
போனான்; சுடலை என்னுடல் போனது!
போ! போ! என யானே சொல்லிடினும்—என்னாவி
போகுமோ 'தாஜின்' நிழல் நீங்கி?

## 38. விரகதாபம்

விண்ணமுதைச் செவி வார்த்தானேடி
வெள்ளி நிலாவிலே பிள்ளைத் தமிழ் பாடி

கண்ணுக்குத் தெரியாத தென்றலதுபோலே
கம்பன் கவிபாடும் காவிரிக் கரைமேலே

உண்ண உணவும் வேண்டா மடி
உயிரை உருக்குது நினைவின் கனல்பாட்டு

வண்ண மலரும் வேண்டா மடி
வாழவேண்டில் என்னுடன் கூட்டு அவனை.

## 39. அழைப்பு

தென்னையில் தென்றல் சீழ்க்கை அடித்துப்
பின்னும் அழைக்குது பின்னும் அழைக்குது
என்றனின் வேலை தன்னை விடுத்தே
இனி வருவேன் மனதும் மகிழ்வேன்
உன்னத அழைப்பு உனதன்றோ அன்பே!

2

ஆழியில் ஆடும் அலைகைகள் காட்டி
அழைக்குது மேலும் அழைக்குது மேலும்
நாழிகை வீணே நாளினிப் போக்கேன்
நானிலம் விட்டு நயந்து வருவேன்
உன்னத அழைப்பு உனதன்றோ அன்பே!

3

இனிய மலரில் மதுவுண்ட வண்டு
இசையால் அழைக்குது இசையால் அழைக்குது
தனிமை உலகின் தன்னல உலகின்
தடைகளைத் தாண்டித் தழுவிட வருவேன்
உன்னத அழைப்பு உனதன்றோ அன்பே!

4

சுடர்வான் மீது உயிரின் குரலின்
சுதந்திரம் அழைக்குது சுதந்திரம் அழைக்குது
உடலாம் மண்ணை மண்ணிலே விட்டு
உண்மையைக் காண ஓடோடி வருவேன்
உன்னத அழைப்பு உனதன்றோ அன்பே!

## 40. பிணைப்பு

அந்நாள் அடவிவழி தனிலே நீயே
அலர்ந்த ஒரு மலராக இருந்தாய் போலும்
அந்நாள் அவ்வழியாய் சென்ற கொண்டல்
அழுதஒரு நீர்த்துளியாய் உனில்வீழ்ந் தேனோ?

2

அந்நாள் அளப்பரிய தாரை சூழ்ந்த
அணிநீல இருளாய்நீ இருந்தாய் போலும்
அந்நாள் யான் தனித்த கூண்டிற் புள்ளாய்
அழகதனை விழிக்கனவின் இடைநுகர்ந் தேனோ?

3

இந்நாள் எதிர்ப்பட்டோம் வையம் மீது
இதயத்தின் நினைவாலே புருடன் பெண்டாய்
இந்நாள் சென்றுவரும் பிறவி தன்னில்
எவ்வடிவாய் நாமிருப்போம் இயம்பப் போமோ

4

தொன்றுதொட்டு வந்திட்ட நேசத் தாலே
தோணி என்றும் துடுப்பென்றும் ஆகிவிட்டால்
குன்றுதிங்(கு) ஓடுகிற ஜீவ ஆற்றில்
குளிப்பதலால் செலுத்திடுவோன் குறிப்பறிவோமோ?

## 1. தொழிலாளி

*சூரியனும் ஓர் தொழிலாளி.........தினம்*
*சுற்றும் உலகும் தொழிலாளி*

*வாரி அலையும் தொழிலாளி.........எதிர்*
*வந்திடும் காற்றும் தொழிலாளி*

*மாரி நதியும் தொழிலாளி.........இருள்*
*மலரும் உடுவும் தொழிலாளி*

*பாரை நடத்தும் தொழிலாளி.........இனிப்*
*பரமனடா கலைப் பிரமனடா!*

## 2. செம்படவன்

மூடுபனிக் காலையிலே மீன் பிடிக்க
முதலைநிகர் கட்டுமரம் தன்னிலேறி;
ஆடுகின்ற அரவைநிகர் கடலலைமேல்
அச்சமின்றிச் சென்றிட்டான் முத்துமாரி!

பாடும் அலையோசையிலா ஆழம் பார்த்துப்
பனங்குருத்து விரிவதுபோல் வலைவிரித்தான்;
ஓடி விளையாடி வந்த மீனினங்கள்
ஒளிபட்ட வைரமெனத் துடிக்கலாச்சு!

எல்லையிலா வானிடையே வெளவால் போலே
இருண்ட மழை மேகங்கள் சூழலாச்சு!
ஜில்லெனவே கடல்வாடை சிலிர்க்கலாச்சு;
சீறிஅலை பேய்ச்சிரிப்புச் சிரிக்கலாச்சு!

கல்மலையைப் பிளந்தூன்றும் அரசின் வேர்போல்
கண்கூச இடிமின்னல் தோன்றலாச்சு;
உள்ளமதில் பயமுற்றுன் முத்துமாரி!
ஊஞ்சலெனக் கட்டுமரம் ஆடலாச்சு!

ஓவெனவே புயல்காற்று நரியைப் போல
ஊளையிட லாயிற்று; அலைக் குமிழ்கள்
ஆவெனவே ஆந்தையதன் கண்களாச்சு;
அலகுகள் போல் மழைத்தாரை பாயலாச்சு!

தாவிகரை சேர்வதற்கு முத்துமாரி
தவிதவித்தான்; அவன்உயிரோ சாற்றலாச்சு;
''பூவினிலே மக்கள்பசி போக்குதற்கு''
போந்த தொழிலாளி நிலை கண்டேனென்றே.

## 3. கொல்லன்!

பரமசிவன் செஞ்சடையை விரித்தாற் போலப்,
பாய்கின்ற விழுதால மரத்தின் பக்கம் —
அரவதனின் சீறலென மூச்சு விட்டு,
அகடுவிரி துருத்தியதால் உலையை மூட்டிச்
சரமழை நாள் தோன்றும் மின் பூச்சிபோலத்,
தனியுருகும் காதலரின் கண்ணீர் போலச்,
சுரந்துமறை பொறிபறக்கக் கனலிரும்பைத்
தோள் விம்மச் சம்மட்டி அடிக்கும் கொல்லன்!

பருத்ததலை; அழுக்கு சிகை; சிறுத்த நெற்றி
படர்புருவம் வளைந்திட்ட கருப்புப் பூரான்;
உருக்கு விழி; உள்ளடங்கி எழுந்த மூக்கு;
உலர் உதடு; மறியாட்டுக் கொம்பு மீசை;
இருக்குதெனும் ஒட்டுவயிறேற்ற மார்பு;
இடையினிலே கந்தல் உடை; துடையோ தூண்கள்!
கருக்கிருளில் பனிசிந்தும் காட்சி தன்னைக்
கருமேனி வேர்வையிலே காட்டும் கொல்லன்!

பண்ணை நிலம் உழும் கலப்பைக் கார்தான் செய்து
பாய்ந்திட்ட பசிவயிற்றில் சுருக்கங் கொண்டான்
வண்டியிலே பூட்டெருது, குதிரை லாடம்
வழங்கிடினும் தன் காலில் செருப்பும் அற்றான்;
சண்டை செயும் வீரருக்குக் கைவாள் தந்தும்
தன் துணையாய் தடியெடுக்க உரிமை யற்றான்;
கண்டு புகழ் விஞ்ஞான காலம் வந்தும்
கதியின்றி உழைக்கின்ற கிராமக் கொல்லன்!

பெற்றெடுத்த பிள்ளைமுகம் காண எண்ணிப்
பிணமெழுந்து நடப்பது போல் மனையிற் சென்றான்
குற்றுயிராய் மனையாட்டி காச நோயால்
குக்கல் போற் குலைக்கின்ற ஓசை கேட்டான்
வற்றலென இளைத்திருந்த பிள்ளை, பாலே
வாயருந்தத் துடிதுடித்து நெஞ்சம் விக்க
உற்று செவி, செவிடானான் உன்மத்தன் போல்
ஓயாமற் சம்மட்டி அடிக்கும் கொல்லன்!

## 4. பரவர் பாட்டு

*விடிவெள்ளி நம் விளக்கு ஐலேஸா!*
*விரிகடலே பள்ளிக்கூடம் ஐலேஸா!*
*துடிக்கும் அலை நம் தோழர் ஐலேஸா!*
*சூழ்முகிலின் நிழல்குடை ஐலேஸா!* **1**

*பாயும் புயல் நம் ஊஞ்சல் ஐலேஸா!*
*பனிமூட்டம் உடல் போர்வை ஐலேஸா!*
*காயும் ரவிச் சுடர் கூரை ஐலேஸா!*
*கட்டுமரம் வாழும் வீடு ஐலேஸா!* **2**

*பின்னல் வலை நம் சுவடி ஐலேஸா!*
*பிடிபடும் மீன் கல்விப்பொருள் ஐலேஸா!*
*மின்னல் இடி காணும் கூத்து ஐலேஸா!*
*வெண்மணலே பஞ்சு மெத்தை ஐலேஸா!* **3**

*முழுநிலவு நம் கண்ணாடி ஐலேஸா!*
*மூச்சடக்கி நீந்தல் யோகம் ஐலேஸா!*
*தொழும் தலைவன் பெரும்வானம் ஐலேஸா!*
*தொன்மைத் தொழி லாளர் நாமே ஐலேஸா!* **4**

## 5. தொழில்

கீழ்த்திசையின் இருட்கீறி கிளர் உஷை நுதலில்
கிளிமூக்கு நிறப்பொட்டு தீட்டும் கிரணன்,
ஆழ்கடலின் அலைகளிடம் ஆடல் கற்றே
அனற்சுவாலை யிடத்தோடி அருளும் காற்று,
வீழ்புனலில் ஏழ்வர்ணம் விளைத்து புலத்தை
விளைவேற்றி வினையின் திறம் விளம்பும் நதிகள்
சூழ்மதுவை விருந்தீந்து சுரும்பு பாட
சுகந்தத்தைத் தூவுகுளிர் சோலை மலர்கள்.

2

அந்தரத்தே இருட்சாணம் மெழுகி உடுவாம்
அரும்புள்ளிக் கோலமிடும் அந்தி வானம்
விந்தையதாம் வேழமென விண்ணில் பறந்து
வெண் முத்து நேர் திவலை சிந்தும் மேகம்,
செந்துளிராம் புல் நுனியில் வைரச் சிரிப்பைத்
தெளித்து ரவி அணைப்பினிலே சேர் பனித் துளிகள்
சுந்தரமாய் காதலர்கள் தூக்கம் நீங்கி
சொல்லாடத் தூண்டவரும் சோதி மதியம்.

3

மண்ணுழுது பொன் நெல் தரும்தாய்நேர் உழவர்,
மானமொடு வாழக்கலை நெய்கை கோளர்,

விண்ணதிர முரசார்த்துப் பகைமை வீழ்த்தி,
வெற்றியின்சங் கூதுகின்ற யுத்த வீரர்,
கண்துயிலை நேர்மரணம், கண்ணின் விழிப்பு
காட்சி நிகர் ஜனனம், மொழி காக்கும் கவிஞர்,
உண்மை என உள்ளதெனும் தெய்வம் இந்த
உலகதனைப் படைக்க முதல் உற்றது தொழிலே.

4

தொழில் இன்றேல் அழிவாகும், அழிவதும்தொழிலே
தொழிலில்லா இடமில்லை, சுதந்திரம் தொழிலே,
அழகில்லா ஒன்றினை அழகாக்கும் தொழிலே,
அச்சமில்லா உச்சிதத்தின் ஆக்கம் தொழிலே,
கழிவில்லாப் பெருமையதன் கருத்துத் தொழிலே,
காலத்தால் களங்கமுறு கற்புத் தொழிலே,
தொழிலாளர் ஓங்கிடுக, அவர் பசி துடைக்கத்
தொண்டாற்றல் நமது தொழில் கவிதைத்
தொழிலே.

## 6. வளையல் போராட்டம்

**ப**ணி செய்யத் தேயிலையின்
தோட்டம் வரும் முன்பே
பாலூட்டி எம் தாயே
போட்டிட்ட வளையல்!

கனிவுற்றுக் கணவர் என்
கை பிடிக்கும் முன்பே
காதலொடு என் கையைப்
பற்றியதே வளையல்!

தனிச் செல்வ மைந்தனையான்
தாலாட்டும் முன்பே
சல சலத்துப் பறவையெனப்
பாடியதே வளையல்!

இனி யென்றன் கையிருந்தால்
யான் வளர்த்த தோட்டம்
ஏற்காது என்றெனையே
விரட்டுவதும் முறையா?

## 7. புதுக் குரல்

புழுதியென எமைமிதித்துப் போகின்றீர்கள்!
பொறுத்திருந்தோம், பொறுத்திருந்தோம்
இத்தனை நாள்!
அழுதழுது முறையிட்டு அலுத்துப் போனோம்;
அனுதாபம் காட்டிடுவோர் யாருமில்லை!
பொழுது புலர் வேளைதனில் வீசும் காற்றில்
புழுதியிலும் புது ஜோதி பூத்திடாதோ?
விழிமலரச் செய்தபுது விழிப்பினாலே
விண்ணிடிபோல் போர்முரசு கொட்டுகின்றோம்!

2

புகை கொளுத்தும் தீக்குச்சு என்று எம்மைப்
புன் நெருப்பாய் எண்ணமிட்டுப் போகின்றீர்கள்!
தகை மிகு அச் சிறுநெருப்பில் சகத்தை எல்லாம்
சாம்பல் என மாற்றும் தனிச் சக்தி யுண்டு!
நகையுறுத்தி நாண் மலரை விழிக்கச் செய்யும்
நல்லருணன் போன்றவொரு விழிப்பினாலே
தொகை தொகையாய் எழுங்கடலின் திரைகள் போலத்
தூமதிநேர் போர்ச் சங்கம் ஊத வந்தோம்!

3

பயமுடனே இத்தனைநாள் கைகள் கட்டிப்
பட்டிட்ட துயரங்கள் போதும்! போதும்!
வயலுழுதோம்; வீதியிட்டோம்; வீடமைத்தோம்!
வாழ்விற்குத் தேவை எலாம் வழங்கி, நாங்கள்

புயமலுத்தோம்! பசித்தீயில் பெண்டு பிள்ளை
புழுப்போலத் துடி துடித்து வேகு தையோ!
அயர்விலாப் புது விழிப்புக் கொண்டுவிட்டோம்!
அச்சமில்லை, பழிக்குப் பழி வாங்க வந்தோம்!

4

எமது கையால் செய்தளித்த ஆயு தத்தால்
எமையே நீர் கொல்லுதற்கு இச்சைகொண்டீர்;
உமக்குணவு அளித்த எம் கைகளாலே
உம் குலத்தை வேர றுக்க நேரம் ஆமோ?
அமைதியுடன் இருந்திட்ட ஆகாயத்தில்
அதிர் இடியும் மழைப் புயலும் தோன்றி விட்டால்
சுமை சுமையாய் விறகிட்டுக் கொளுத்தினாலும்
சுட்டிடுமோ? ஒற்றுமையால் சூழ்ந்து வந்தோம்!

5

உலர்ந்திருந்த-புல்லினிலே உரங்கொள் வாள் தான்
உண்டாகி விட்டதென உரைத்து விட்டோம்
கலகமிலாப் புதுக் குரலில் முழங்குகின்றோம்!
கண்ணுள்ளோர் தங்களுக்கே காட்சிவேண்டும்!
நலமுறவே உழைப்பவர்க்கே உணவு வேண்டும்;
நியாயமிது; நியாயமிது; நியாயமிதே!
'அல'வெனவே மறுப்பவர்கள் கடவு ளேனும்
அடுத்தகணம் அவர் தலை எம் காலில் வீழும்!

## 8. நவராத்திரி கொலு

உழவுத் தொழிலாளி—நுதலினில்
உதிர்ந்த வேர்வைத் துளி
கொழுத்த முதலாளி—அணியினில்
கொலுவாச்சு வைரமாய்!

2

ஆலைத் தொழிலாளி—உடலினில்
அள்ளி எடுத்த ரத்தம்
காலன் முதலாளி—பேலாவில்
கள்ளாய் கொலு வாச்சு!

3

அச்சுத் தொழிலாளி—கண்ணிலே
ஆடும் ஒளி அணைய
கொச்சை முதலாளி—வீட்டில்
கொலுவாச்சு விளக்காய்!

4

உண்மைக் கொலுவிதனை—உங்களின்
உள்ளமே பார்க்கையிலே
மண்பாவைக் கொலுவைக்—கண்டிட
மயங்கிச் செல்லுவதேன்?

## 9. ரிக்ஷாக்காரன்

கந்தை உடைதான் இடையிலுண்டு—கையில்
கைதியைப் போலவே வில்லை யுண்டு;
சந்து முனையிலே நாய்களைப்போல்—என்றன்
சகாக்கள் கூட்டமும் நிற்ப துண்டு.

கையினில் வாடகை ரிக்ஷாவுண்டு—கால்கள்
கடலலை போலோடக் கற்றதுண்டு;
மெய்மேல் ரவியொளி வீழ்வதுண்டு—நகர்
வீதியில் பலரென்னைப் பார்த்ததுண்டு.

மோட்டார் வண்டியே கெட்டுவிட்டால்—பண
முதலாளி ஒவ்வொரு வேளையிலே
ஆட்டப் பரியென என்னை நினைத்து—'ஓடு
அவசரம்' என்று, அணா தருவார்.

வயிறும் அடுப்பில் பசித்தீயுண்டு—விழி
வழங்கும் நீர்த்துளி சமைப்பதற்கு
உயிர்தளும்பும் உடல் பானையுண்டு—தங்கி
உண்டிடச் சாவாம் விடுதியுண்டு!

மனிதனை மாடாய் ஆக்கிவிட்டு—என்னை
மரணத்தின் வழியில் ஓடவிட்டு
புனிதமாய் அஹிம்சை பேசுகின்றார்! அன்னோர்
புலைச்செயல் போக்கிடும் நாள்வருமோ?

# 10. படகோட்டி

தேன் தூக்கி முல்லைமலர் சிரிக்கத் தென்றல்
சிலிர்க்கவரும் வசந்தத்தின் மாலைப் போதில்,
வான்நோக்கி நிற்கின்ற வரையின்மீது
வாரியென நீர்தேக்கும் ஏரி தன்னில்

அன்னம்நிகர் படகோட்டிப் பிழைப்போம்; வேர்வை
அரும்பிடவே புயமலுக்கத் துடுப்புத் தள்ள,
மின்னலிடைப் பெண்ணுடனே செல்வன் ஒருவன்
மிதந்துசெலும் அப்படகுள் மெள்ளத் துயின்றான்.

இருள்பாய்ந்த மலைக்காட்டில் குயிலே காதல்
இசையெழுப்பத் திசையெல்லாம் நிலவின் வெள்ள
அருள்தோய்ந்த அச்சமயம் படகு தள்வோன்
அயர்ந்திருக்கும் காதலரைப் பார்த்தங் கெண்வான்:

" பூத்திருக்கும் வேப்பமரத் தோப்பில் நேற்றுப்
புனைந்தகுடி சையிலில்லாள் பசியால் வாடிக்
காத்திருப்பாள் வழிபார்த்து, இவர்கள் எப்போ
கண்விழித்துக் காசீவார்? எழுப்பலாமா?...

சொல்லரிய உள்ளுணர்ச்சி விழி சுழற்றத்
துளிரிதழின் முத்தத்தின் சுவையில் தோய்ந்து
எல்லையிலா இன்பத்துள் மூழ்கி யுள்ளார்!...
இவர்காணும் இன்பமெனக் கேனோ இல்லை?

பாரினிலிக் காதலர்கள் செல்வர்; நல்ல
பட்டுடையும் பொன்மணியும் கொண்டோர்; இந்தப்
பாரிடையே வேண்டுகின்ற இன்பமெல்லாம்
படைத்திடுதல் பணமதனின் சக்தி யன்றோ?

நாவடக்கிச் சேவகஞ்செய் யானே நாளை
நல்லதொரு காலம்வந்து செல்வனானால்,
பூவனையும் வண்டெனவே என்றனில்லாள்
புயமணைந்து படகினிலே பூரித்துய்வேன்.

அந்தநாள் என்படகை இந்நாளிங்கே
அமர்ந்திருப்போர் தள்ளவரின் அப்போ தின்னார்
சிந்தைதான் மகிழ்வுறுமோ? இன்றென்னைப்போல்
செப்பரிய ஏக்கத்தால் துயரில்வேமோ?

என்னைப்போல் இன்னவரும் எல்லாம் வல்ல
ஈசனருட் படைப்பன்றோ? இந்தப் பாரில்
இன்பந்தான் பிறரடைய ஒருவர் துன்பம்
ஏற்பதுவோ? இதிலுள்ள நீதி என்ன?...

சிந்திக்கச் சிந்திக்கச் சேரும் துன்பம்
சிந்தனையே நீங்கிவிடில் தேக்கும் இன்பம்
மந்திரிகர் மனமதனின் மாயை யாட்டம்
மௌனமதே அழியாத சுகப்பூந் தோட்டம்.

விண்ணான ஏரிதனில் மேகத் தோணி
விரைவாகச் செலுத்தியே மேவு மௌனி
கண்ணோடு ஒளிகூட்டிக் காட்டுங் காட்சிக்
கருத்தினையும் மறந்ததே காலச் சூட்சி.

சிந்திக்கச் சிந்திக்கச் சேரும் துன்பம்
"சிந்தனையே நீங்கிலின்பம்" என்றே தேர்ந்தான்
சுந்தரமாய்க் காதலர்கள் துயிலும் போது
சொல்லுகின்ற தாலாட்டு லேஸா...ஐலேஸா.

## 11. நடிகன்

அரங்கமென்னும் அழகின் மலர்—சுவை
யாகியமைந்திடும் அற்புதத் தேன்
பரதமென்னும் பரிதிச் சுடர்—புவி
பாய உதவிடும் தூய்மையின் வான்!

பச்சோந்தி போல நொடி யொன்றிலே—பல
பாவனை காட்டும் ஜாலக்காரன்
இச்செகமாந்தர் புலன்களையே—நன்று
ஈர்த்திடும் இன்பப் பெரும் சோரன்!

கண்ணுக்கு நேர் செக ஆட்டமதை—நன்று
காட்டும் கலைரசக் கண்ணாடியே!
எண்ணத் துடிப்புகள் தன்னைக்காண—உயிர்
இரகசியத்தின் உள் நாடியே!

கவர்ச்சியே என றனைப் பெற்ற அன்னை—உயர்
கருத்ததே என்றனைக் காத்த தந்தை
தவறான வார்த்தை சாற்றுவனோ—என்றன்
தனியரசாட்சி உலக சிந்தை!

## 12. தப்பிப் பிழைப்பவன்

உதிர்ந்த மலர் போல—மக்கள்
உறக்கத் தாழ்ந்திருக்க
எதிர் வீட்டுச் சேவல்—எழுவாய்!
என்றே குரல் தந்தது! 1

கழுதையின் முன் முகம்போல்—கங்குல்
காட்டும் உஷை ஒளியில்
அழுக்குத் துணி எடுத்து—வண்ணான்
ஆற்றங் கரையடைந்தான்! 2

கறுத்த மழை மேகம்—இடியைக்
கலந்துமின் காட்டுதல் போல்
முறுக்குத்துணி களைதை—கல்லில்
முத்திட வெண்மை செய்தான்! 3

பவளக் கதிர் மறைய—வானில்
பளிச்சிடும் தாரகை போல்
துவைத்த துணிகளெல்லாம்—தண்ணீர்
சொட்டப் பிழிந்தெடுத்தான்! 4

வெண்முகில் கூட்டம் போல்—வேட்டியை
வெய்யிலில் காயவைத்து
தண்ணிழல் தந்து நிற்கும்—வேம்பின்
தருவின் நிழல் அமர்ந்தான்!

"ஊரார் அழுக்குடையை—வெளுக்க
உழமண் கண்டவனே!
மாறுத உன் வினையை—வெளுக்கும்
மருந்ததைக் கண்டதுண்டோ?" 6

என்று சிறு குரலில்—தென்றல்
இயம்பி மறைந்திடவும்
பின்னும் முன்னும் பார்த்து—வண்ணான்
பேய்போல் விழிக்கையிலே 7

நொச்சிப் புதர் தாண்டி—பிறைநேர்
நுதலில் சிவப்பொளிர
"மச்சான்!" எனக் கூவி—வண்ணான்
மனைவி சூழ் கொணர்ந்தாள்! 8

## 13 நெல் அறுப்போன்

நெல் என்ற பொன் பல்லை நிலமேல் காட்டி
நிலவூற நகை காட்டும் பயிரைப் பார் மேல்
கொல்கின்ற தொழில் கொண்டேன், அல்லில் பூக்கும்
கோலமிகும் உடு அறுகும் காலை ரவிபோல்.

நீள்நெற்றி துளிர்த்திட்ட வேர்வைத் துளிகள்
நெல்லுள்ளே அரிசி என நிற்குதையா!
தோள் விம்மக் கதிரறுக்கத் துணிவு கொண்டேன்
சூடும் கண்ணீர் அறுத்தெறியும் கால வாள்போல்!

கொலைகாரனாகிவிட்டேன்; உண்மை! பெற்ற
குழந்தைகளைக் கொல்லுகிறேன், உண்மை! உண்மை!
தலத் தோரே, தூக்கிலெனை யிடுவீர்! ஆனால்,
சாகடிக்கும் பசிதன்னைச் சமைத்தோன் முன்னே!!

## 14. நெல்குத்தும் பெண்

மூச்சு விசிறப்பொன் நெல்லுக்குத்தி—அதில்
முத்துப்போல் அரிசி யாமெடுப்போம்
ஆச்சுது குங்கும அந்திப்போது—கொஞ்சம்
அழுத்தியே போடடி உலக்கைதன்னை!

கண்ணிலே மொய்ப்பதது கொசுவல்லடி—அது
காலைக்கு ஏற்ற தவிடாமடி!
விண்ணிலே கேட்கும் இடிச் சத்தமே—கண்டு
வெட்கவே போடடி உலக்கையினை!

நாட்டுக் கெல்லாம் உணவளிக்கும்—தமிழ்
நாட்டுப்புறப் பெண் நம்முடைய
வீட்டின் இதயத் துடிப்பெனவே—மூலை
விம்மவே போடடி உலக்கை யினை!

# 15. மாடு மேய்க்கும் பையன்

மாடு மேய்க்கும் பையன்!—பண்ணையார்
மாடு மேய்க்கும் பையன்!!
காடுகளில் திரிவான்—அவனிரு
காலில் செருப்பில்லை!
சாடும் மழை புயலும்—உடல்தன்னை
சரு காக்கும் வெய்யில்
வாடும் வயிறு பசியால்—எனினும்
வளைந்த மிலார் கொண்டு
மாடு மேய்க்கும் பையன்!...........

கட்டுக் கடங்காமல்—கொழுத்தொரு
காளை துள்ளியோடும்
சிட்டெனவே பறப்பான்—அதட்டி
தே! தே! என மறிப்பான்
முட்டிவிடும் காளை—அவனின்
மூச்சுத் திணறி விடும்
வெட்டவெளி இருட்டும்—கண்ணீர்
வெளிப்படும் உடுக்களைப் போல்
மாடு மேய்க்கும் பையன்!............

தாயும் தந்தையில்லை;—அவனையே
சார்ந்த உறவில்லை;
பாயும் படுக்கையில்லை;—பட்டியில்
படுப்பான் கொசுக்கடியில்;
வாயுரை பேசமாட்டான்;—மாட்டின்
வாழ்க்கையோ டொன்றி விட்டான்
ஆயனும் கண்ணபிரான்—கனவில்
ஆடுவானோ இவன்பால்?

மாடு மேய்க்கும் பையன்!............

# 16. வளையற்காரன்

வளையலோ! வளையல்!
வளையலோ வளையல்! !—பலாச்
சுளையின் நிறத்து வளையல்—பச்சைக்
கிளியின் நிறத்து வளையல்
வளையலோ வளையல்!

வளையலோ வளையல்!—எழில்
புதிய கன்னிப் பெண்ணே—தன்
புருஷன் கருத்தை அறிய
உதிக்கும் ஆசைபோலே
ஒலிக்கும் கையில் சிரிக்கும்
வளையலோ வளையல்!

வளையலோ வளையல்!—வயல்
நாத்து நட்டிடும் மாது—சொலும்
நாட்டுப் பாட்டுக் கேற்ப
மாத்துத் தாளம் போட்டு
மகிழ்ச்சி பெருகச் செய்யும்
வளையலோ வளையல்!

வளையலோ வளையல்!—வயிறு
சூலுற்ற இளம் நங்கை—குலம்
துலங்கக் குழந்தை பெறவே

கோல முடனே அணியும்
கொடி மஞ்சள் நிற மான
வளையலோ வளையல்!!

வளையலோ வளையல்!—புவி
வாழ்வில் மங்களகரமே—கள்வர்
வயப்படாத தனமே
ஏழ்நிற வான் வில்போல்
இனிமை இனிமை யான
வளையலோ வளையல்!

வளையலோ வளையல்! !—செங்
கரும்பின் நிறத்து வளையல்—மலர்
அரும்பின் நிறத்து வளையல்
ஆடும் ராட்டை வளையல்
வளையலோ வளையல்!
வளையலோ வளையல்!!

## 17. கூடை முடைபவள்

வாடிய பிரம்பும் ஏனோ?—இரத்தம்
வற்றிய நரம்புடலில் முற்றியுளதே!
கூடையும் முடைய வேணுமோ?—வயிற்றில்
கொடிய பசி குடலை முடைந்திடுதே!
தாடைகளில் குழி யுளதே!—பழங்கள்
தாங்கிடும் கூடையில் குழி வேணுமோ?
ஆடையிலே பொத்த லுளதே!—கூடை
யதனிலே பொத்தலுள ததிசயமோ?

## 18. ஓட்டன்

சாலை மரங்கள் நிழலினிலே—நாங்கள்
தங்கிவெள வாலெலன வாழுகின்றோம்!
காலை யருந்தப் பருக்கை யின்றி—ஏங்கிக்
கங்குலில் விண்மீனைக் காணுகின்றோம்!
பாலை நிலமெனத் தேகம் சுண்ட—பெரும்
பாடு பட்டுப் பாதை போடுகின்றோம்!
கூலிபெறாத மழையது போல்—நாங்கள்
கொட்டுரோம் ரத்தக் கண்ணீர் புவியில்!!

## 19. உழவன் பிள்ளை*

ஏழை உழவனின் சேயென்றன்
எண்ணம் ஈடேற வகையுளதோ?
தோழரிடத்திலே சொல்ல எனில்
துக்கமே நெஞ்சைப் புடைக்குதையா

சுந்தரச் செக்கரை முன்னொரு நாள்
சிந்தூர மென்று திலக மிட்டேன்!
அந்தோ! அஃதென்றன் மூதாதையர்
சிந்திய குருதிக் கண்ணீரையா!

பின்னர் ஓர் தினம் இன்புறவே
பெரிய விண்மீன் தனை மோந்தேன்!
என்னே! அஃதென்றன் தந்தை நுதல்
இருந்த வேர்வைத் துளி கண்டீர்!

வந்திடும் தென்றலில் மற்றொருநாள்
வண்ணத் தமிழிசை கேட்டிட்டேன்!
அந்தோ! அஃதென்றன் தாய் பசியால்
வெந்திடும் வேளையில் விட்ட உயிர்!

---

* அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழிசை போட்டியில் பரிசு பெற்றது.

## 20. கவிதை கண்டேன்

கலை வீசும் நிலவினிலே காண வில்லை!
கமழ் வீசும் மலரினிலே காண வில்லை!
அலை வீசும் கடலினிலே காண வில்லை!
அணி வீசும் வானவில்லில் காணவில்லை!
மலை வீசும் தென்றலிலே காணவில்லை!
மணி வீசும் ஜொலிப்பினிலே காணவில்லை!
குலைவீசும் பசியினிலே ஏரை ஓட்டும்
குடியான மக்களிடம் கவிதை கண்டேன்!

## 21. கவிஞன்

வண்ணமுற நின்று வாசம் தந்து—இந்த
வையம் மயக்கும் மலர்களெல்லாம்
மண்ணோடு மண்ணாய் மறைந்த பின்னர்—ஒரு
மகிமை யடைந்திட மாண்புளதோ?

நித்தம் வறுமையில் நெஞ்சழிந்து—தன்னை
நேசனெனச் சொல்ல யாருமின்றி
பித்தன் இவனெனக் காட்சி தந்து—உயிர்
பிரிந்தபின் புகழைப் பெறுபவன் யார்?

புல்லின் பசுமையில் வான்பொலிவைக்—கொடும்
புலியி னிடத்திலே பிரமத்தையும்
கல்லினிடத்தில் தவந்தனையும்—நுட்பக்
கண்ணினால் கண்டிடும் புண்ணியன் யார்?

காற்றினும் சிறந்த தூய நெஞ்சும்—அலை
கடலைப் பழித்திடும் ஆழ்கருத்தும்
ஊற்றைப் பழித்திடும் புத்துணர்வும்—இந்த
உலகினில் வாய்த்திட்ட உத்தமன் யார்?

தூற்றெலனக் கீழ்விழும் மனத்தை—மேல்
தூக்கி நிறுத்தி பறக்கச் செய்து
காற்றும் நுழைந்திடா வானமென—ஒரு
கட்டற்று நிற்போன் கவிஞனன்றோ?

## 22. பிச்சைக்காரன்

மழை இளைப்பாரிடக் குட்டையுண்டு—கொடும்
மனதினைப் பாரிட எண்ணமுண்டு
அழல் இளைப்பாரிட நீருமுண்டு—எங்கள்
ஆசையிளைப்பார உண்டோ இடம்?

பாம்பினைப் பாரிடப் புற்றுமுண்டு—பட்சி
பறந்திளைப் பாரிடக் கூடுமுண்டு
வேம்பினைப் பாரிடக் காகமுண்டு—எங்கள்
வேட்கை யிளைப்பார உண்டோ இடம்?

நதியினைப் பாரிட ஆழியுண்டு—கொடும்
நஞ்சினைப் பாரிட மருந்துமுண்டு
கதிரினைப் பார இரவுமுண்டு—எங்கள்
கவலை யிளைப்பார உண்டோ இடம்?

கண்ணினைப் பாரிடத் தூக்கமுண்டு—அற்ப
கழுதை யிளைப்பாரிடத் துறையுமுண்டு
பண்ணினைப் பாரிடத் தாளமுண்டு—எங்கள்
பசியிளைப்பாரிட உண்டோ இடம்?

## 23. பாணன்!

பாடிப் பிழைத்திடும் ஓர்பாணன்—தன்
பத்தினியும் மூன்று பிள்ளையுடன்—உற்ற
நாடு அடிமையாய் ஆனதினால்—ஏரி
நன்செய் புன்செய்நிலம் காய்ந்ததினால்—பெரும்
காடு மலைகள் நதிதாண்டி—வளம்
காணும் ஊர்கண்டு பிழைக்க எண்ணி—உடல்
ஆடிக் களைப்புடன் வருகையிலே—விழு
தாலடிக் கீழ் மறவனைக் கண்டான்.

2

ஆடிப் பழஞ்சோறு போதுமையா—இரு
ஆதண்டங்காய் வற்றல் தாருமையா—இதோ
வாடிப் பசியால் துடிக்கும்பிள்ளை—அரை
வயிறு நிறைந்தாலும் போதுமையா—ஒரு
கோடிக் கவிதைகள் உங்கள்மீது—தமிழ்
கொண்டாடிக் குலதெய்வம் காப்பாற்ற—நான்
பாடித் துதிசெய்வேன் என்றனனே—பஞ்சை
பாணன் துயர் கேட்டமறவனுந்தான்

## 3

உண்ண உணவது இல்லை என்று—ஏழை
உயிரும் துடித்து இறப்பதற்கோ—புவி
பண்ணிய குயப்பய லானதெய்வம்—இன்றே
பட்டொழிய வழிகண்டிடுவேன்—துளிக்
கண்ணீரும் நீவிட வேண்டாம்பாணா—என்று
காற்றாய் நடந்து கன்னானிடம் போய்—படர்
விண்ணைத் துளைக்கும்படி கூர்வேல்—ஒன்று
விரைவாகச் செய்க என்றான் மறவன்.

## 4

காலையே கட்டி அழும்மகவைப்—பாணன்
கையால் தூக்கி இடிபோல் சிரித்தான்—கூர்
வேலை வடித்திட லானான் கன்னான்—பாணன்
விழிகளால் கோடை மழைவடித்தான்—கொடும்
காலனை நேர்த்த மறவனுமே—இரு
கண்ணில் ஊழிக்கனல் சீறநின்று—கை
வேலையே விண்மீது விட்டெறிந்தான்—சுடர்
வீசிய சூர்யன்வீழ்ந் தான்மலைவாய்!

## 24. குலாலன்

நாரணன்போல் சக்கரமே சுற்று கின்றான்
நான்முகன்போல் நவபாண்டம் சிருஷ்டிக் கின்றான்
தாரணியில் இவன்பெயர்தான் குயவ னம்மா
தகைமிக்கோன் பொங்கலுக்குப் பானை தந்தான்.

2

மண்பானை சமையலதன் மகத்து வத்தை
மானிலமேல் காட்டுகிற பானை சட்டி
பண்பாகச் செய்கின்ற பாட்டாளி வாழ்க்கை
பார்க்கபரி தாபமதாய் இருக்கு தம்மா.

3

கல்யாண காலமதில் கரகம் சாலும்
களிப்புடனே தந்தஇவன் முகத்தைக் கண்டால்
உல்லாசம் இல்லாமல் இருப்ப தற்கு
உற்றஒரு காரணந்தான் என்ன அம்மா?

4

அறிவற்ற சிலமூடர் பேசும் போது
அடகுசவா! எனஇகழ்ந்து கூற லாலோ?
நெறியற்ற தேகமிது மண்ணுபாண்டம்
நிலையற்று உடைந்தேமண் ஆகுமென்றோ?

## 25. கையேந்திகள்!

*உழைக்க உடலில் வலிமையுண்டு—இரந்து*
*உண்ணல் ஈனமெனும் நெஞ்சமுண்டு*
*பிழைக்கத் தொழில்தந்து கூலிதந்தால்—நாங்கள்*
*பின்னரும் கையேந்தும் தொல்லையுண்டோ?*

2

*ஆலைப்புகை மேகமாவதுண்டு—நாளும்*
*அழுக்குக் குப்பை எருவாவதுண்டு*
*சாலை ஓதிரிழல் தருவதுண்டு—எங்கள்*
*தாழ்மை தவிர்த்திடும் வாழ்வில்லையோ?*

3

*மழை கால மேவும் ஈக்களைப்போல்—ஈன*
*மலம்நெளி நோயின் புழுக்களைப்போல்*
*தழைத்திடச் செய்வது சமூகமதா—எங்கள்*
*தலைவிதி எழுதிய தெய்வமதா?*

4

*சொரிதவளை தங்கக் கேணியுண்டு—சாவைச்*
*சொல்லிடும் கூகைக்குப் பொந்துமுண்டு*
*வறியவர் எங்கட்கு என்ன உண்டு?—உங்கள்*
*வாயேச்சும் வயிற்றுப் பசியுமுண்டு!*

## 5

*தெருச்சுற்றும் நாய்களைச் சுட்டுத்தள்ளி—தோலைச்*
*சீராக்கி விற்றிடக் கற்றவரே!*
*அருளின்றேல் எங்களைச் சுட்டுத்தள்ளி—உற்ற*
*ஆவியைக் காற்ருய் அனுபவிப்பீர்!*

*ஆடொடு ஆடு மேய்கின்றதே—பாயும்*
*ஆருெடு ஆறு சேர்கின்றதே*
*நாடிய மனிதன் மனிதனையே—வெறுத்து*
*நன்மை செய்யாதது ஞாயம்தானு?*

## 26. மோட்டார்த் தொழிலாளி

காட்டாறு கல்முள்ளில் செல்லல் போலக்
கதிர்மதி போல் சக்கரங்கள் சுழன்று சுற்ற
மோட்டாரை நடத்துகிறார் விரைவாய்த் தோழர்
முகமுற்ற கண்ணிரண்டும் இமைத்த வில்லை
வீட்டோடு நடைபழகும் சிறியபிள்ளை
வீதியிலே நடைபழக வருமவ் வேளை
நாட்டத்துள் கருணையொடு மோட்டா ரோட்டி
நடையுமே காலழுத்தி நிறுத்தி விட்டார். **1**

கைதினை வில்லைதனைக் கொண்டுவிட்டார்
கவினற்ற காக்கியுடை பூண்டு விட்டார்
வைதீகப் பார்ப்பனனும், தீண்டா தோரும்
வளமான ஓர்நிலைக்குச் செல்வ தற்குத்
தெய்வீக சேவையதே செய்கின் றாரே
தினந்தினமும் பசிப்பிணியின் கனலில் வெந்து
ஐயையோ அவர்கண்ணீர் சிந்து கின்றார்
அதைக் கண்டேன் அலையெல்லாம் செந்நீர்வெள்ளம்!

## 27. புதுமையடா!

சோதி பெருக்கியே மோதிருள் துடைக்கும்
சூரியனே எழிலா ?
வீதி பெருக்கிடும் தோட்டியின் கையினில்
விற்றிருப்ப தெழிலா ? 1

நானிலத் தழுக்கை வாரியில் வெளுக்கும்
நதியதுவே எழிலா ?
மானிடர் கறையுடை மதிபோல் சலவைசெய்
வண்ணானின்கை எழிலா ? 2

சுற்றும் இரவினில் தூக்க விழிகாட்டும்
சொப்பனமே எழிலா ?
குற்றமின்றி மண்ணைக் கோதிக் கலயம்செய்
குயவனின்கை எழிலா ? 3

பொறிகள் கலங்கிடப் புதுமின் இடிகாட்டிப்
பொழியும் மழை எழிலா ?
தறியினில் நூலிட்டுச் சகத்தின் மானம் காக்கும்
சாலியன் கை எழிலா ? 4

பிறருக் குதவிடும் பெற்றியுள்ள நெஞ்சம்
பேசரும் பேரெழிலாம் !
இறவாத அவ்வெழில் புரக்கும் தொழிலாளர்கை
இருப்பது புதுமையடா ! 5

## 28. மாற்றம்

எல்லையிலாத் தெய்வமே நீ போவாய்! போவாய்!
இன்றிடிலோ இவ்வுலகில் சாவாய்! சாவாய்!!
வல்லமையாய் நீ படைத்த கொடிய காட்டை
வளநாடாய்த் தொழிலாளர் மாற்றி விட்டார்!
கொல்லவென நீபடைத்த விலங்கை யெல்லாம்
குழந்தைகளாய்த் தொழிலாளர் மாற்றி விட்டார்!
பல்லுடைய பாம்பில்நீ படைத்தாய் நஞ்சைப்
பசுமருந்தாய்த் தொழிலாளர் மாற்றி விட்டார். 1

எல்லையிலாத் தெய்வமே நீ போவாய்! போவாய்!!
இன்றிடிலோ இவ்வுலகில் சாவாய்! சாவாய்!
கல்லினிலே நீகரியைச் சேர்த்து வைத்தாய்
கதிர்மணியாய்த் தொழிலாளர் மாற்றி விட்டார்!
துள்ளருவி தனிலே நீ தண்மை வைத்தாய்
சுடரொளியாய்த் தொழிலாளர் மாற்றி விட்டார்!
விள்ளரிய சிறையாக வானை வைத்தாய்
வெறும்வெளியாய்த் தொழிலாளர் மாற்றி விட்டார்! 2

எல்லையிலாத் தெய்வமேநீ போவாய்! போவாய்!!
இன்றிடிலோ இவ்வுலகில் சாவாய்! சாவாய்!!

கள்வனென மறைந்தோடக் காற்றை வைத்தாய்
கானமிடத் தொழிலாளர் மாற்றி விட்டார்!

தள்ளரிய ஜாதிநிற பேதம் வைத்தாய்
சமமென்றே தொழிலாளர் மாற்றி விட்டார்!

தெள்ளரிய பகுத்தறிவால் மாற்றம் கண்டு
ஜெயபேரி தொழிலாளர் முழக்கு கின்றார்!

எல்லையிலாத் தெய்வமேநீ போவாய்! போவாய்!!
இன்றிடிலோ இவ்வுலகில் சாவாய்! சாவாய்!!

## 29. எச்சரிக்கை

என்பிலா நாவில் சுவை எழுங்கால்
இருளாக இருளாக ஒளி எழுங்கால்
தன்னல மில்லாத் தொழிலாளர்
சக்தியில் சகம்ஆள் தகையெழாதோ? 1

தண்ணீ ரதனில் தணலெழுங்கால்
சாவின் நிழலில் பிறப்பெழுங்கால்
மண்ணைப் பொன்செய் தொழிலாளர்
மதியில் புவிஆள் விதி எழாதோ? 2

நத்தை யிடத்திலே முத்தெழுங்கால்
நாற்றச் சகதியில் பூ எழுங்கால்
உத்தம ராகிய தொழிலாளர்
உளத்தில் உலகாள் உரமெழாதோ? 3

தூக்கம் தனிலே கனவெழுங்கால்
சுண்டிய இஞ்சியில் உறைப் பெழுங்கால்
காக்கும் தெய்வமாம் தொழிலாளர்
கருத்தில் கலிஆள் கனலெழாதோ? 4

## 30. மே தினம்!

பரிதியதன் சுடர்ஜொலிக்கும் விண்ணதிலே
பனிமலரின் எழில்சிரிக்கும் மண்ணதிலே
ஆனால்?......ஆனால்?......

கரிச்சுரங்கம், பொற்சுரங்கம், பஞ்சினாலை
கண்ணிருளத் தொழிலாளர் செய்தார் வேலை
ஆனால்?......ஆனால்?......

வெறிபிடித்த பணப்பேய்கள் நஞ்சினாட்சி
விடுதலையை அடிமையெனச் செய்த சூட்சி
ஆனால்?......ஆனால்?......

பொறி பறக்கத் தொழிலாளர் தீமனமே
புரட்சி செய்ய உரிமை தந்த மே தினமே!

## 31. செங்கொடி

காலைச் செழுஞ்சுடரில்—மாலையில்
கவியும் செக்கரினில்
சீலத் தொழிலாளர்—ஏந்திடும்
செங்கொடி ஓங்குதுபார்!

அத்தி மீது பாயும்—வீரஞ்சேர்
அரியின் பிடரியிலே
சித்தங் கலங்காத—தொழிலாளர்
செங்கொடி ஓங்குதுபார்!

கத்தி கட்டிப்பாயும்—சேவலின்
கவின்மிகு கொண்டையிலே
செத்தவர்க் குயிரளிக்கும்—தொழிலாளர்
செங்கொடி ஓங்குதுபார்!

குருதிச் சகதியிலே—இடிநிகர்
குண்டுகள் மத்தியிலே
திருபிறை நிகர் அரிவாள்—சுத்திசூழ்
செங்கொடி ஓங்குதுபார்!

## 32. சோஷலிஸக் கொடி

ஜெய ஜனதா ஜண்டா!
ஜெய ஜனதா ஜண்டா!
ஜெயஹோ! ஜெயஹோ!
ஜெய ஜனதா ஜண்டா!

வயலுழுதே உயிர்க் குணவே
அருள்புரியும் ஏரும்,
வளம் பெருகும் பலந்தருயந்-
திரமதனின் சீரும்,
புயமணைந்தே அயர்விலதே
உழைப்பவரெல் லோரும்,
புகழுறவே ரவியெனவே
சுடர்தரமே லேறும்! (ஜெய)

ஏழையெனும் மோழையெனும்
தாழ்மையறச் செய்யும்?
ஈடுறவே சோஷலிஸ
நாடுபெறச் செய்யும்
வாழையடி வாழையென
வாழ்வகை செய்யும்
வானகமே மானிலமெல்
கானலம் செய்யும் (ஜெய)

அடுகணையும் கொடுபுயலும்
தடைசெயினும் காப்போம்!
அடிபடினும் சிறைபடினும்
உயிர்படினும் காப்போம்!
உடுவனைத்தும் படைகுலமாய்
இடர்செயினும் காப்போம்!
துடித்துலகம் வெடித்திடினும்
சுதந்திரமாய்க் காப்போம்! (ஜெய)

# 33. கலைத்தேவி

அலைமோதும் நீலமணிப் பொய்கை யதனின்
ஆவிஎனும் வெண்மலரின் அருக மர்ந்து
கலைத்தேவி திருவடியைக் காண வேண்டிக்
கற்பனையைத் தூதுவிட்டுக் காத்திருந்தேன். 1

விண்ணென்ற வாவியிலே விழித்த மதிமேல்;
வெண்முகிலாம் துகிலணிந்து; தென்றல் வீணை
பண்சொல்ல; உஷை யொளியில் வந்தாள், தூய
படிகநிறப் பால்வதனம் பளப ளக்க! 2

முத்தை நிகர் பனித்துளியில் முறுவல் செய்து,
முளரிநிகர் அங்கையால் அபயங் காட்டி,
"கத்துகுயில் நிகர்கவிஞா, என்றன் உண்மைக்
கவின்வடிவம் காட்டுகின்றேன் காண்க!" என்றே! 3

விம்முமலைத் தோள்குலுங்கப் பழனந் தன்னில்
வேளாளர் நுதற்சிந்தும் வேர்வை காட்டி
என்வடிவம் இதுவேயாம்! உழைப்போர் செய்கை
எதினிலுமே யான் ஒளிர்வேன்." என மறைந்தாள்! 4

பட்டினியைக் கவலைகளை பருவத் தீந்தாள்;
பாரதுதான் பரிகசிக்க வைத்தாளேனும்,
கட்டிசுவைத் தமிழ் மொழியால் துதிப்பேன் என்ன
காரணமோ? அவள் எனக்குக் கவிதை தந்தாள்! 5

தொட்டுணர்த்த முடியாத அறிவின் ஜோதி
தோயவைத்தாள்; அவள் செய்த நன்றி சொன்னால்.
கட்டுடைய மாந்தருக்கு கதையாய்க் கட்டு
கனவாகத் தோன்றுவதும் உண்மை கண்டீர்! 6

## 34. எங்கள் ஊர்

சேற்று நீர் தேக்கிய ஏரி—அதைச்
சேர்ந்துள இலுப்பைத் தோப்பு
தூற்றலொடு வெயில் காற்று—உள்
சுகித்திடத் தகுந்த குடிசை
தோற்ற மளித்தன பத்து—கல்
சூழ்ந்த பள்ளமாம் தரையில்
கூற்றுவன் நாடுசெல் மக்கள்—ஒன்றிக்
குடியிருக் கின்றா ரதிலே. 1

சுரையோ டவரைக் கொடிகள்—கூரை
சுற்றிலும் படர்ந்தே யிருக்கும்
வரைபோல் தலையே நிமிர்த்துச்—செலும்
வண்ணச் சேவலின் கூட்டம்
நரை கண்டோர் சிலர் அங்கு—தலை
நடுங்க இருமிடும் ஓசை
பறைபோல் செவியில் தாக்கும்—முகம்
பார்த்தே நாய் பல் இளிக்கும் 2

பன்றி வசிக்கும் நிலைபோல்—மிகு
பஞ்சை மக்கள் குடும்பம்
இன்றும் வதிகின்ற தெனிலோ—மனம்
ஏக்கத் தீயால் எரியும்

கொன்றே தின்னுது மிடிநோய்—எனில்
கூக்குர லிடவும் வசமோ?
புன்னகை ரவி காட் டிடுமுன்—இவர்
புட்கள் போலவே எழுவார் 3

கலப்பை மாடு கைக்கொண்டு—நன்செய்
கழனி தன்னை யடுத்து
அலுப்பை அயர்வை விடுத்து—ரவி
அமரும் வரையுட் உழைத்து
நலம்போல் பெற்றிடும் கூலி—சொல்ல
நாவும் கூசிடு தந்தோ!
உளுத்த சோளக் கூழு—அவர்
ஓட்டைக் கையால் இரண்டாம்! 4

குளிர்பனி மூடும் இராவில்—அவர்
கோட்டா னெனவே விழித்து
ஒளித்திட முயல்வார் கையால்—சீறி
உருமும் ஊதையில் நைந்து
மலம்நெளி புழுவகை போலே—கந்தை
மானங்காத்திட இன்றி
வளிஉடை தன்னையே போர்த்து—உயிர்
வாழ்கி றுரந்தோ விலங்காய்! 5

எண்ணெய் சிகையிற் பூசார்—சுகம்
என்றொன் றிருப்பதே அறியார்
உண்ணும் இருகைக் கூழ்க்காய்—அவர்
உடல்பொருள் ஆவிய தெல்லாம்
பண்ணைச் செல்வருக் கீந்து—ஆலை
பட்ட கரும்பென வாகி
கண்ணீர் உகுக்கையில் கண்டேன்—ஐயோ
கலந்திருந்தது ரத்தம்!—அதில்
கடவுள் துடித்திடக் கண்டேன்! 6

## 1. தமிழ் அமுதம்

தமிழென்றால் அமுதத்தின் ஊற்று;—தமிழ்
தன்னைப் பழித்திடில் தமிழ் புயற் காற்று.
தமிழென்றால் இனிய கற்கண்டு—தமிழ்
தன்னைப் பழித்திடில் தமிழ்வெடி குண்டு.
தமிழென்றால் மாசற்ற தங்கம்—தமிழ்
தன்னைப் பழித்திடில் தமிழ் வெறிச்சிங்கம்.
தமிழென்றால் குழந்தையின் உள்ளம்—தமிழ்
தன்னைப் பழித்திடில் தமிழ் கொடும்வெள்ளம்
தமிழென்றால் அமுதத்தின் ஊற்று............

## 2. தமிழ்

தென்றல் சுகமும் தமிழின் சுகமோ
தேனின் இனிப்பும் தமிழின் இனிப்போ
கன்னற் சுவையும் தமிழின் சுவையோ
கவிதை யுளமும் தமிழின் உளமோ
பொன்னின் ஒளியும் தமிழின் ஒளியோ
பூவின் மணமும் தமிழின் மணமோ
அன்பின் பயனும் தமிழின் பயனோ
ஆருயிர் எமது தமிழோ அன்றோ?

கோலக் கலபச் சாயல் தமிழோ
குளிர்சந் திரனின் ஒளியும் தமிழோ
நீலக் கடலின் முத்தும் தமிழோ
நெஞ்சை யள்ளும் யாழும் தமிழோ
காலம் நடத்தும் கதிரும் தமிழோ
கார்முகில் கொட்டும் கருணை தமிழோ
ஞாலம் படைத்த திறனும் தமிழோ
ஞானச் சிகரம் தமிழோ அன்றோ?

## 3. தமிழர் நாடு

தமிழர் நாடு! எமது நாடு!
தனித்த நாடடா!
குமரி முதல் மாலின் குன்றம்
எல்லைக் கோடடா!

அமுத மாகும் வாழ்வு தேவர்
குறளைப் பாடடா!
இமயம் எதிர்த்த போதும் தூளாம்
துள்ளி ஆடடா!

உண்மை நாடு! அன்னை நாடு!
உயிரின் நாடடா!
பண்ணும் கவிதை பரதக் கலைகள்!
படைத்த வீடடா!

பெண்மை கற்பு பேசும் சிலம்பின்
பெருமை பாடடா!
மண்ணில் எவர்க்கும் அடிமை யல்லோம்
மகிழ்ந்து ஆடடா!

எட்டுத் திசையும் கப்பல் ஓட்டி
இனித்த நாடடா!
மட்டிலாத நிதிகள்; நதிகள்
மலைகொள் நாடடா!

பட்டிப் பசுவும்; உழவும் நெசவும்
படைத்த நாடடா!
கட்ட பொம்மன் வீரம் கொண்டு
காத்த நாடடா!

## 4. தமிழ் ராஜ்யம்

அற்ற தறியாமை என்னும் இருள்,—தமிழ்
ஆதித்தனின் ஒளி கண்டுவிட்டோம்!
குற்றமில்லாத் தமிழ் ராச்சியத்தை—இங்கு
கோரியே யாவரும் ஒன்றுபட்டோம்! 1

'வல்லரசு! தமிழ் வல்லரசு!!'—என
வானத்திடிபோல் முரசடிப்போம்.
வில், புலி, மீனும் விளங்குகின்ற—தமிழ்
வீரக் கொடியைக் கரம்பிடிப்போம். 2

அடிமை என இனித் தமிழகத்தில்—சிறு
அணுவுமிலா விதம் செய்திடுவோம்
முடிமன்னராகித் தமிழரெல்லாம்—நகை
முழங்கத் சுதந்திர மெய்திடுவோம் 3

கவியிலும் மற்றக் கலைகளிலும்—தமிழ்
கண்போல் ஒளிர உழைத்திடுவோம்
புவியெலாம் தமிழர் ஆட்சியிலே—வந்து
புண்ணியம் கொள்ள அழைத்திடுவோம்! 4

## 5. தமிழிசை

ல உள்ள குளுமையும
தேனிலே யுள்ள இனிமையும்
மின்னலில் உள்ள உணர்ச்சியும்
மேன்மைத் தமிழிசை பெற்றதே! 1

குழந்தை மழலையின் இன்பமும்
குளிரும் மதியின் மயக்கமும்
அழலின் தூயதாம் தன்மையும்
ஆய்ந்த தமிழிசை பெற்றதே! 2

காயைக் கனிசெயும் காலமும்
கவிதைக் கடலதன் ஆழமும்
மாயை தவிர்க்கும் ஞானமும்
மதுரத் தமிழிசை பெற்றதே! 3

ஓம் என்னும் ஒலியில் மலர்ந்திடும்
உண்மைப் பொருளை உலகமேல்
காம்பெனத் தாங்கிடும் சக்தியும்
கன்னித் தமிழிசை பெற்றதே! 4

## 6. முத்தமிழ்

வள்ளுவர் தந்த திருக்குறளை—முப்பால்
வழங்கி வளர்க்கும் இயலதனை
உள்ளுவம் வாழ்வு சிறப்புறவே—இதற்கு
உவமை இல்லை இந்த வையம் வானம்! 1

தெள்ளு தமிழ்க் கம்பன் இராமகதை—கவி
தேனைப் பொழியும் உயிரிசையை
அள்ளிப் பருகிடும் அன்பு நெஞ்சம்—இங்கு
அமர இன்பம் காணும் வான்சுடர் போல்! 2

அள்ளுசுவை இளங்கோ சிலம்பு—என்ற
அற்புதக் கற்பொளிர் நாடகமே
விள்ளரும் காலக் கடல் தனிலே—மூன்று
வேந்தர் பறைகொட்டும் முத்தமிழாம்! 3

## 7. அடிமையின் விலை...?

"அடிமை...எனை வாங்க—இங்கே
யாருண்" டெனக் கேட்டே,
நடந்தேன்...உலகினிலே—காணும்
நான்கு...திசைத் தெருவில்...
முடிமன்னன்...பார்த்தான்;—தங்க
மொஹரா...பலதந்தே,
"அடிபணிந்தே...வாராய்"—என்று
அழைத்தான்.. மறுத்தேன் யான்!

2

"அடிமை...எனை வாங்க—இங்கே
யாருண்..." டெனக்...கேட்டே
நடந்தேன்...உலகினிலே—காணும்
நான்கு...திசைத் தெருவில்...
தடியூன்றும்...கிழவன்—வந்து
"சதுர்வேதம்...தருவேன்;
அடிமைப் படுவாயா"—என்றான்.
"ஆகா" தென அகன்றேன்...

3

"அடிமை...எனை வாங்க—இங்கே
யாருண்..." டெனக் கேட்டே
நடந்தேன்...உலகினிலே—காணும்
நான்கு...திசைத் தெருவில்...

கொடியிடைப்...பெண்ணொருத்தி—"முத்தம்
கோடி...உனக்களிப்பேன்...
அடிமையாய்...வா!" என்ருள்—நான்,
அவளையே...விட்டோடினேன்...

4

"அடிமை...எனை வாங்க—இங்கே
யாருண்..." டெனக் கேட்டே
நடந்தேன்...உலகினிலே—காணும்
நான்கு...திசைத் தெருவில்
கடலின் கரையோரம்—தெய்வக்
கட்டழகுக் குழந்தை:
"அடிமை எனக்காணுல்—தமிழ்
அளிப்பேன்..." எனச் சொன்ஞன்.

5

துடித்தது... என் உயிரே—உவகை
துள்ளிய... வெள்ளலை போல்
வெடித்தது... என்சொற்கள்—அகன்ற
விண்ணில்... தாரகையாய்...!
வடித்தது... அமுதை நிலாப்—புதுமை
வாழ்வின்... மலர்ச்சியிலே...!
அடிமை... யாகிவிட்டேன்—தமிழின்
அன்பில்... எனை மறந்தேன்...!!

## 8. எழுத்தாளர் மகாநாடு

உழுதின்ப அமுதூட்டும் உளத்தும் வான
ஒண்மதிபோல் கலைமலர்ச்சி ஓங்கச் செய்யும்
எழுத்தாளர் மாநாடு ஏர்தமிழ் நாட்டின்
இருளிடையே தாரகைகள் எங்களின் எழுத்தே! 1

கலாபத்தின் பீலிகண்நேர் கற்பனைக் கண்ணைக்
காவியத்தில் தீட்டிவைத்த கம்பனின் ஆற்றல்
உலாச்செய்யும் தமிழ்நாட்டில் உற்ற எழுத் தாளர்
ஓதக்கடல் முத்தெல்லாம் எங்களின் எழுத்தே! 2

ஆடரங்கில் ஆருயிரின் அழகை ஆர்க்கும்
அற்புதனும் இளங்கோவின் சிலப்பதி காரம்
பாடல்செய்யும் தமிழ்நாட்டு எழுத்தாளர் யாமே
பசுஞ்சோலை தேன்மலர்கள் எங்களின் எழுத்தே! 3

கொண்டலதன் மின்னலெனச் சிறுகதைகள் கோப்போம்
கோகிலம்போல் தீங்கவிதை பாடிக் கொழிப்போம்
வண்ணமலர் வண்டெனவே நாடகம் வளர்ப்போம்
வணங்காத முடிமன்னர் வையத்தில் யாமே! 4

அச்சமில்லை அல்லலெலாம் பொங்கி வந்தாலும்
அறிவுயர்ந்த எழுத்தாளர் ஒன்றுகி விட்டோம்
பச்சைரத்தம் பறிமாறிப் பண்புள்ள தமிழ்தான்
பாரெங்கும் புகழ்மேவப் பணிசெய்து வாழ்வோம்! 5

## 9. கவிதை

அதிகம் குடித்தவர் நாவினிலே
அளவின்றி வந்திடும் வார்த்தையைப் போல்
முதிர்ந்த அறிவின் கடலினிலே
முத்தென முளைத்தல் கவிதையடா! 1

கதிர் தனை வீசிடும் தீபந்தனைக்
கவ்விடும் சிட்டம் தனைத்தட்டி
புதிய ஒளி எழச் செய்தவனைப்
போன்றது புதுமைக் கவிதையடா! 2

குழந்தையே சிந்திய பருக்கைகளைக்
கொத்திப் பசியாறும் கோழியைப்போல்
இழந்த கருத்து தனைக் கூட்டி
இன்பம் அடைவது கவிதையடா! 3

ரசமது கொண்ட கண்ணாடிபோல்
ரகசியம் தன்னை அழகதனால்
வசியமாய் மூடி அவரவரின்
வண்ணம் வகுத்தல் கவிதையடா! 4

## 10. உண்மைக்

கண்ணன் இருந்தாலும்—திரௌபதி
கட்டத் துகில் தந்தானும்
உண்மையாய் அவனிருந்தால்—எனக்கே
ஓர் கந்தை தாரானோ?

அட்சய பாத்திரமாம—அமுது
அள்ள அள்ள வருமாம்
நிச்சயம் அது இருந்தால்—எனையே
நேசித்தமு திடாதோ? 2

அறமுயர் சித்தார்த்தனும்—சாகா
ஔஷதம் கண்டவனும்
இறவா தவனிருந்தால்—எனது
இறப்பைத் தவிரானோ? 3

இந்திய நாட்டினிலே—இந்நாள்
இருக்கும் உண்மைக் கவி
என்றன் வடிவமன்றிப்—பிறர்
என்ன இருக்குதையா? 4

## 11. கலாவல்லி

விண்ணென்ற வெண்மலர்மேல்
வெண்மதியாய் வீற்றிருப்பாள்;
மண்ணெல்லாம் மகிழ்ந்திடவே
மழையென்ற யாழிசைப்பாள்! 1

கற்பனையாம் கடல்மூழ்கிக்
கவிதையெனும் முத்தெடுப்போர்
அற்புதமாம் நெஞ்சிடையே
அழற்சுவாலை எனநடிப்பாள்! 2

உழைப்பென்னும் சோலையிலே
உவகைமுல்லை யாய்ச் சிரிப்பாள்;
அழைப்பின்றி வாராள்; வரினோ
ஆவிபோ யினும்போகாள்! 3

உள்ளத்தின் உண்மைதனை
உணவாகக் கொண்டுண்பாள்;
கள்வர்தம் பயமறியாள்;
காலத்தை வென்றிடுவாள்! 4

ஒயில்தேக்கும் இயற்கையெனும்
ஓவியத்தைத் தான் வரைந்தாள்;
வைரத்தை நேர்தமிழர்
வாழ்வாம் கலா வல்லியே! 5

## 12. கவி பாரதி

பாரதி! பாரதி! என்று பகர்—தேச
பக்தி பிறக்கும்—வீர
சக்தி சிறக்கும்—புவி
தன்னில் நிகரில்லாக் கன்னித் தமிழ்தந்த
பாரதி! பாரதி! என்று பகர்—கவிப்

பாங்கு துலங்கும்—உண்மை
ஓங்கி விளங்கும்—ஈசன்
ஒருவர்க் கடிமையன்றி முடிமன்னனாகிய
பாரதி! பாரதி! என்று பகர்—மனப்

பயமது ஓடும்—என்றும்
ஜெயமது கூடும்—மக்கள்
பற்றும் சுயராஜ்ய வெற்றிச்சுதந்திரம்.
பாரதி! பாரதி! என்று பகர்—அவன்

பாட்டுக் கீடு—இன்று
காட்டுமோ நாடு—பசிக்
கனலிடை மூழ்கியும் காலனை வென்றவன்
பாரதி! பாரதி!............

## 13. பாரதிதாசன்

*காரத்தை யுண்ட கவிபோலத்—தமிழ்ச்*
*சாரத்தை யுண்ட முகமுடையார் !*
*சூரத்தனங் காட்டுந் துண்டுமீசை—அதில்*
*துடிதுடிக்குமே வீர ரசம் !*
*நேரமெல்லாம் தமிழ்நாட்டை எண்ணச் சுடர்*
*நெருப்பாய் கொதித்திடும் நெஞ்சுடையார்*
*பாரதிதாசனும் அன்னவர் பேர்—அவர்*
*பாடும் கவிகளோ பச்சை ரத்தம் !* 1

*தொட்ட இடமெலாம் தமிழ்மணக்கும்—அதில்*
*சுதந்திரக் காதற் குரல் கேட்கும்*
*சட்டமொடு ஜாதி பேதத்தையும்—பொய்ச்*
*சாமி தலையையும் தாரணிமேல்*
*வெட்டிப் பிளந்திட்ட வாள் மொழிகள்—அதில்*
*விடுதலை ஜோதி பளபளக்கும்!*
*கட்டுமரம் போல அவர் கவிதை—பெரும்*
*காலவெள் ளத்தையும் நீந்திடுமே !* 2

*எளிய நடையில் கவிதை காண்பார்—அதில்*
*இசைகூடும் குரல்போலக் கற்பனை தான்*
*வெளியையும் வானையும் அளந்துவிடும்—அவர்*
*வற்றாக் கவிக்காதற் கடலு மாவார் !*

புளியிட்டுச் செம்பைத் துலக்கல் போலத்—தமிழ்ப்.
புலமையால் மக்கள்மானந் துடைப்பார்!
குளிரினுல் அணையாத முழுமதிபோல்—தமிழ்
கொடியை வான்மீதில் உயர்த்துக் காண்பார்! 3

நெஞ்சு நிமிர்ந்த நடையுடையார்—சுடர்
நீட்டும் நட்சத்திரம்போல் விழியார்!
அஞ்சனமேனி அமைந்தவர்காண்—எனில்
அசைக்க முடியாத தோள் வலியார்!
கொஞ்சும் கிளிபோலத் தத்திப்பேசிச்—சிறு
குழந்தைகள்போலக் குறும்பு செய்வார்
நஞ்சு தரினும் தமிழுக்கென்று—அதை
நல்லமுதாக உண்ணும் திறத்தார்! 4

## 14. கு. ப. ரா!

பாட்டினுக்கோர் புலவனென்ற பாரதிதான்
பதமாக்கி வைத்திருந்த கலைநிலத்தில்
நாட்டினர்கள் சிந்தையெலாம் மணக்கப் பூத்த
நவமான மறுமலர்ச்சி நம், கு. ப. ரா! 1

அன்பு சொட்டும் பொன்மொழியும்; அறிவின் ஆழம்
அமைதியுடன் கூத்தாடும் அருளின் நோக்கும்;
தன்னலந்தான் சற்றுமிலாத் தியாகப் பாங்கும்
தமிழரிடை கொண்டு வந்தோன் நம், கு. ப ரா! 2

ஔவையெனச் சின்னஞ்சிறு சொற்கள் கூட்டி
அமிர்தத்துளி நிகர்த்தசிறு கதைகள் மூலம்
யௌவனமாம் மனக்கிளர்ச்சி விரிவைஎல்லாம்
எழுதிவைத்த மொழி வல்லோன் நம், கு. ப. ரா! 3

மேல்நாட்டுக் கவிஞர்களின் பார்வைதன்னை
மெள்ளமெள்ளத் தமிழ்க்கவியில் மெருகுதீட்டி
ஆல்போன்று ரசிகருக்கு நிழலளித்தோன்
அருளமரன் அவன்பெயர்தான் நம், கு. ப. ரா! 4

## 15. தமிழருவி

*திங்கச் சிரிப்புக் கதிர்என் தந்தை*
*தரளச் சிரிப்புக் கடல்என் அன்னை*
*மங்கை மேகம் விண்ணின் வீட்டில்*
*மகிழ்வாய் மின்னகை காட்டி வளர்ந்தேன்.* 1

*வானவில் வீதி வாடைப் புலிமேல்*
*வையகம் நோக்கி உலவியே வந்தேன்*
*கானவர் தமிழ் தமிழ் எனத்தேன் கூடு*
*கைதொடும் பொதிய மலைதனைக் கண்டேன்.* 2

*உள்ளம் தனில்புது உவகை மலர்ந்தது*
*உருவம் நிலவொளி யாகக் கரைந்தது*
*கொள்ளை கொண்ட இன்பக் கனவொடு*
*குத்தால அருவியாய்க் குதித்தாடு கின்றேன்.* 3

*வெம்மை தீர்க்க வேடிக்கை பார்க்க*
*விந்தை மாந்தர் வருவார் போவார்*
*இம்மா நிலமேல் அமர வாழ்வு*
*ஏற்றேன், என்றும் பாடிச் செல்வேன்.* 4

## 16. மனிதன்

வையத் தலைவன் மனிதனடா-அவனை
வாழ்த்தி வணங்கிப் புகழ்ந்திடுவோம்.
தெய்வம் பார்க்கும் கண்ணாடி—அரிய
சிந்தனை யந்திர உள்நாடி. 1

மனத்தில் காதல் அச்சம் பயம்—தன்னை
மலரச் செய்தோன் மனிதனடா.
தனிமை வென்ற சமுதாயம்—தன்னை
சமைத்த அறிவே மனிதனடா. 2

புதிய சந்திரன் வானேற்றி—புவி
புகழைப் பெறுவோன் மனிதனடா.
விதியை வெல்ல அணுகுண்டை—
விளைப்பா னந்த மனிதனடா. 3

சாவும் பிறப்பும் தன் இறக்கை—கொண்ட
சமாதானப் புறாவே மனிதனடா.
மேவும் மேன்மை விதி வென்று—இங்கு
மேவும் அன்பே மனிதனடா. 4

குரங்கின் குணத்தால் நடை நடந்து-இங்கு
குலவிய இலட்சியம் மனிதனடா.
பரவும் தீயின் கல்கண்டு—இங்குப்
பாடே பட்டோன் மனிதனடா. 5

தழைகள் தம்மை உடல் போர்த்து—மானம்
தனையே காத்தான் குகை மனிதன்
இழைகள் கண்டான் நெய் தொழில்-அவனின்
இலட்சியம் புதுமை.மானமடா. 6

வண்டின் முரலில் இசை கேட்டோன்-அன்று
வழங்கிய பண்ணின் சுருதி பாடல்
தங்கும் உயிரைத் தனைக்காக்க—எண்ணிச்
சாவை வெல்வோன் மனிதனடா. 7

மனிதன் என்ற பெயர்தானே—உற்ற
மனத்தின் சிந்தனை கொள்வானே.
மனிதன் ஞாபகம் உள்ளோனே—இதை
மறுத்திடும் தெய்வம் வெல்வோனே. 8

## 17. சுதந்திரம்

சுதந்திரமே! என்னருமை உயிரே! நாட்டின்
சூழ்ந்த இருள் துடைத்திட்ட வான ஜோதி!
நிதம் நிதமும் நீவருவாய் வருவாய் என்று
நெஞ்சுருகித் தவங்கிடந்தோம் திருவே! வந்தாய்!
இதம் பெருவோம்; இனி நாங்கள் உன்றன் வாழ்வை!
இமயம்போல் உயர்த்திடுவோம் என்றும் காப்போம்
அதர்மத்தை அழித்திடுவோம் ஆண்மை குன்றோம்!
ஆட்சி செய்யும் மணிக்கொடியே இதற்குச் சாட்சி! 1

மணிக்கொடியே! தொண்டர்குலக் கொடியேவாழ்க!
மாசற்ற மூவண்ணக் கொடியே வாழ்க!
கணக்கிலார் நினையேந்திச் செய்த தியாகக்
காட்சிக்குச் சுதந்திரநற் காட்சி ஈந்தாய்!
தணிந்திடுமோ இனிஉன்றன் காதல் சக்தி!
சந்ததமும் சத்தியம்போல் காப்போம் உன்னைப்
பணிந்திடுமே திசையெட்டும் வீர வாழ்வைப்
பாலித்தே பறந்திடுவாய் பாடுங் காற்றில்! 2

ஒளியிழந்த கண்கள் ஒளி பெற்றாற்போல
ஒடுங்கியுள இந்தியர்கள் உயர்வு பெற்றோம்
வெளியினிலே கூண்டின்கிளி பறத்தல் போல
விடுதலையைப் பெற்றிட்டோம் கொடுமை தீர்ந்து
களிமிகவே மறைந்திருந்த புதையல் கண்டோம்
`காந்தி மகான் அருளதனால் அகிம்சை கொண்டோம்.
தளபதியாய் குடியரசின் தலைமை ஏற்றுத்
தாய் தனக்குச் சேயர்செயும் கடமை செய்வோம் 3

## 18. நம் கடன்!

அன்பொன்றே உயிராக,
அருளொன்றே உடலாக,
அமைந்ததெம் இந்திய நாடு; தனக்
கவனியிலில்லை எங்கும் ஈடு! மலை
யாவும் வெட்கிட, வானம் முட்டி, எவ
கரண்போலுமே உரம் வாய்ந்தது,
அற்புதம் இமயகிரிக் கூடு! முப்பால்
அலை வீசுங் கடல் சூழ்ந்த மேடு!

தென் கட லோரந்தனில்
திரைக் கைகள் வீசிச் சதா
சேர்க்கும் குமரியெல்லை முத்து; வாழை,
தெங்கொடு, கரும்பு, செந்நெல் வித்து; மிகு
செழிப்புக்கொண்டிட இசைகள் பாடியே
சிரிப்பு நுரையோ டமுதம் போல் வரும்
சிந்து, கங்கை, காவிரிநீர்ச் சத்து! நாவால்
செப்பவாகா பல்வள மிகுத்து!

எண்ணங்கள் கடந்த, அந்த
ஏகவெளியைக் கூட,
ஏற்றதாகிய ஞானப் பாதை; நலம்
எல்லாஞ் சொரிந்திடும் கீதை; தந்து

இந்த உலகதன், மந்தமதி தனை.
இரவி முன் படு, பனியைப்போலவே,
இல்லாது செய்தனன் பந்த வாதை—கண்ணன்
இவன் போலே ஏதெங்கும் மேதை ?

திங்கள், கதிர் மாறினும்.
செப்பேன் பொய்யொன் றென்ற,
தியாகி அரிச்சந்திர ராசன்; என்றும்
சிரஞ்சீவி கவி காளிதாசன்; இந்த
ஜெகத்து ஜீவனை அன்பின் தோணியால்
தீமை வாரிவிட் டுவந்தே ஆண்ட நல்
திருவருள் பொங்கும் மனவாசன்—மறை
தேடுமாதிகண்ட புத்தஈசன்!

கற்பே, உருவாய் வந்து;
கனிவே, செயலாய்க் கொண்டு;
கதிகண்ட திரௌபதையுடனே! வெற்றி,
காண்டீவ விசயபுருடனே, போர்க்
களத்துங் குண்டலம் கொடுத்துத் தருமம்
கலைந்திடாமலே காத்த கர்ணனும்
கண்ட, பாரத நாட்டைத் திடனே—கொண்டு
கைதொழு தேத்தல் நம் கடனே!

## 19. புதிய முரசு !

புத்தாண்டு மலர்ந்த தெனக் கொட்டுமுரசு
போர்விலக இடி எனவே கொட்டு முரசு
சத்தான தமிழ்மகனே! கொட்டு முரசு
தலை நிமிர்ந்து அலைகடல்போல் கொட்டு முரசு
சுத்தான்ம நிலைபெறுக கொட்டு முரசு
'சுதந்திரமே பிறப்புரிமை' கொட்டு முரசு
எத்திக்கும் எதிரொலிக்கக் கொட்டு முரசு
இன்பமெலாம் பொங்கிடவே கொட்டு முரசு 1

ஏழை இலை மோழை இலை கொட்டு முரசு
எல்லோரும் சமமெனவே கொட்டு முரசு
வாழும் வகை அன்பெனவே கொட்டு முரசு
'வையமது பொதுவுடைமை' கொட்டு முரசு
தாழுவது இல்லை எனக் கொட்டு முரசு
சத்தியத்தின் பெயராலே கொட்டு முரசு
சூழும் துயர் நீங்கிடவே கொட்டு முரசு
தொத்தடிமைத் தளை ஓடியக் கொட்டு முரசு! 2

## 20. பாராய் தம்பி !

*கல்லூரி தனைநாடிப் படிக்கவந்து—இடம்*
*காணுமல் மனைநாடும் மாண வர்போல்*
*பல்லூழி கணக்கிட்ட கடலலைகள்—கரை*
*பாத்துப்பின் திரும்புவதைப் பாராய் தம்பி!* 1

*காகந்தன் குஞ்சுடனே குயிலின் குஞ்சும்—ஒரு*
*காவலிலே இருந்தேபின் பிரிதல் போல்*
*ஏகமதாய் இருந்திட்ட பார தத்தில்—இன்று*
*இந்துஸ்தான் பாகிஸ்தான் பாராய் தம்பி!* 2

*மூட்டையது வீட்டினிலே படுத்துறங்கும்—இருள்*
*மூதேவி தனைக்கடிந்து துறத்தல் போல*
*நாட்டினிலே குறட்டைவிட்ட வெள்ளைக்காரன்—தன்*
*நாடோட நாம் விழித்தோம் பாராய் தம்பி !* 3

*சிற்றெறும்பு ஒன்றன்பின் ஒன்ற தாக—மலை*
*தினைக்காட்டில் வெய்யலிலே செல்லல் போல*
*அற்றவரும் உற்றவரும் அணிவகுத்து—நொய்*
*அரிசிக்கு நிற்குநிலை பாராய் தம்பி!* 4

## 21. சமத்துவம்

*தீண்டாத குப்பையைத் தீண்டியே—தேச*
*சேவைசெய் தோட்டி குடிசையில்;*
*வேண்டிய பால், பழம் தான் வைத்து—நலம்*
*வேண்டிடும் ஆண்டவன் கோயிலில்;*
*மாண்டவன் தன்தலை மாட்டிலே—விஷ*
*மதவெறி கொண்டவன் வீட்டிலே*
*தூண்டி இருந்து ஓடவே—அருள்*
*தூவிடும் தீபம் சமத்துவம்!* 1

*செழிக்க வயல் உழும் பள்ளர்கள்—நுதல்*
*சிந்தும் வியர்வை தணியவும்;*
*விழிகள் திறந்து நல்லந்தணர்—வான்*
*விழியாம் ரவிதொழ மூழ்கவும்;*
*வழியில் களைத்திடும் ஆண்டியும்—நெஞ்ச*
*வறட்சியே நீங்கித் தெளியவும்;*
*சுழித்து மலர்நகை காட்டியே—நுரை*
*தூவியே செல்நதி சமத்துவம்!* 2

*கடல், புவி, வெண்ணிலா, வானவில்—எழில்*
*காணாப் பிறவியின் அந்தகன்;*
*மடமயில் மான்விழி மங்கையர்—பிறர்*
*மனைகெடுத்த குணக் கேடர்கள்;*

உடல் வலிமை கொண்ட மல்லர்கள்—கலை
ஓதும் அறிஞர்கள்; ஊமையர்;
இடம்பெறப் பேதம தின்றியே—இட
மீயும் மயானம் சமத்துவம்! 3

கங்கை: யமுனை, காவிரியும்—பல
கணக்கில் நதிசேர் கடலினிலும்;
திங்கள் ஒளிசேர் வசந்தத்தில்—மணம்
தேக்கிடும் காலப் பொலிவினிலும்!
அங்கையை உடலினிற்போர்த்தியே—உடை
யற்ற அநாதைகள் மீதினிலும்;
பங்குற்ற நெற்பதர் நீங்கவும்—பொதுப்
பணிசெய்யும் காற்று சமத்துவம்! 4

பறையர், துலுக்கர், கிறிஸ்துவர்-இந்து
பார்ஸிகள், புத்தர், சமணரும்
பொறையொடு வழிசெல அமைதியாய்-இதம்
புரிந்திடும் பூமி சமத்துவம்
வறியர், தனவந்தர், வீரரும்-விழி
வாய்ந்த மடந்தையர் பாலரும்.
நெறியுடன் வாசிக்கும் புத்தகம்-பேதம்
நினையாத நேர்மை சமத்துவம்! 5

மண் பாண்டம் செய்யும் குயவனும்-புது
மனைகட்டித் தந்திடும் கொத்தனும்;
எண்ணெய் விளைத்திடும் வாணியன்;-சிகை
எழிலுறச் செய்திடும் நாவிதன்;

புண்ணைத் துடைக்கும் மருத்துவன்-கல்வி
போதிக்கும் பள்ளியின் ஆசானும்;
கண்ணுக்குத் தோற்றம் வேறாயினும்-அவர்
காணும் பசியே சமத்துவம்! 6

தொழிலால் மனிதர் வேறாயினும்-உடல்
துள்ளும் உயிரது ஒன்றன்றோ?
விழுதுகள் ஆயிர மாகிலும்-அவை
விளைந்தது வித்தொன் றினா லல்லவோ?
மொழிமதச் சண்டையை நீக்குவோம்-புவி
முற்றும்ஓர் வானதின் கீழ்க்கண்டோம்
அழியாத இன்பநல் வாழ்க்கையே-நிலை
யாக்கிடும் சாந்தி சமத்துவம்! 7

## 22. இன்று பிறவாயோ?

அன்று பிறந்தனையே—அன்பு
அமுதம் கொணர்ந்தனையே!
இன்று பிறவாயோ—புண்ணிய
இந்திய நாட்டினிலே?

2

ஆட்டின் துயர் கண்டு—பலிக்கு
ஆளாக நின்றனையே!
கூட்டின் கிளி போல—அடிமை
கொண்டு துடிக்கின்றோம்!

3

மலரின் வாட்டம் கண்டு—அரச
வாழ்வைத் துறந்தனையே!
உலகம் உடையுதையே—கண்ணீர்
உததி பொங்குதையே!

4

பஞ்சமும் நோயுமென—மரணம்
பாரை அழிக்குதையே!
அஞ்சே லென வருவாய்—புத்தா!
அருண ஒளியெனவே!

## 23. அச்சமில்லை

அவர்கள் பலபேர்
நாமோ சிலபேர்—அதனால்
ஆம்! ஆம்! அச்சமில்லை. 1

கடலலை பலவே
கலமே சிலவே—அதனால்
ஆம்! ஆம்! அச்சமில்லை. 2

விட்டில் பலவே
விளக்கு சிலவே—அதனால்
ஆம்! ஆம்! அச்சமில்லை. 3

வெங்கரி பலவே
சிங்கம் சிலவே—அதனால்
ஆம்! ஆம்! அச்சமில்லை. 4

மக்கள் வாழ்வார்
மடிவோம் நாமே—அதனால்
ஆம்! ஆம்! அச்சமில்லை. 5

## 24. எதிர்காலம்

எதிர்கால மனிதன் யார்?
அவன் நிலை என்ன?
முதிர்கின்ற விஞ்ஞானி!
முடிவெலாம் மண்ணில்! 1

புதிர் போன்ற தெய்வம் எங்கு
போயொளிந்திடும்?
அதிர்கின்ற அணுகுண்டில்
ஆண்மை கொண்டிடும்! 2

உதிர்கின்ற மலரெல்லாம்
பழமாகுமா?
பதியமிலாப் பழமிருந்து
மலர்சிந்துமே! 3

சதிராடும் விதிவிழியாம்
ரவிமதி போமோ?
கதிகாணும் வரைகதியைக்
கலக்கொண்ணாதே! 4

## 25. புரட்சிப்பாதை

வெண்மேகத் தீ வெனவே—சோம்பி
    விதியென் றிருப்பவரே...
மின்மேக மாகிடுவீர்—இடிபோல்
    மிளிர்வீர் செய்கையிலே...
தன்னலப் பாம் பழியும்—இங்கு
    சாதிக் குயில் பறக்கும்...
பொன்னித் தமிழகத்தில்—புரட்சிப்
    புதுமழை வெள்ளம் வரும்... 1

எட்டி நடக்காமல்—கல்போல்
    ஏனோ கிடக்கின்றீர்...
சிட்டும் சுதந்திரமாய்—காற்றில்
    'ஜிவ்'வென் றெழும்பிடுதே...
வட்ட நிலா தேய்ந்தும்—இருளில்
    வளரும் வகை கண்டோம்...
அட்டி இல்லை ஜெயமே—புரட்சி
    அனலிற் குளித்தெழுவோம் 2

நாளுக்கு நூறுமுறை—அஞ்சி
    நாய்போல் வாழ்வதிலும்...
தோளுயர்த்திச் சாவின்—முத்தம்
    சூடுவோம் ஓர்முறையே...
தாளெடுத்தே நடப்பீர்—வீரத்
    தன்மானச் சிங்கங்களே...
வாளில் பகை வீழ்த்தி—புரட்சி
    வாழ்க என்றே வாழ்வோம்... 3

சொத்தை மிலா றொன்றை—கையே
தொட்டு ஒடித்திடலாம்...
கத்தை விறகுக்கட்டு—அதைக்
கைகொண் டொடித்தாரில்லை...
ஒற்றுமையே பலமாம்—நம்
உயிர்தமிழ், முரசறைவீர்...
கர்த்தன் எதிர்த்தாலும்—புரட்சிக்
காற்றிலே பஞ்சாவான்... 4

## 26. பஞ்சசீலம்

பஞ்ச சீலச் செய்தி கொண்டே
பறக்கும் வெண்புறா—அது
சஞ்ச லத்தை நீக்கும் சமா
தான வெண்புறா...
அஞ்சா நெஞ்சன் நேரு தந்த
அறிவின் வெண்புறா—புவி
கொஞ்சி மகிழ வெண் நிலவாய்க்
கூடும் வெண்புறா 1

விஞ்சும் கலை ஞான வாழ்வை
விளக்கும் வெண் புறா—அது
மஞ்சள் நெற் கதிரை அலகில்
கொண்ட வெண் புறா...
நஞ்சாம் யுத்தம் வெல்லும் சங்க
நாத வெண்புறா—உயிர்
அஞ்சல் என்று அன்பு கூறும்
ஆசிய வெண்புறா...! 2

## 27. நாச சக்தி

விஞ்ஞானம் செய்யும் விபரீதம்—கண்டு
விழிக்கின்ற லோகம் அனுகுண்டால்
அஞ்ஞானம் தீரக் காந்திவழி—தந்த
அகிம்சையே நல்ல பல மாகும். 1

மாந்தர்கள் பெற்றோர் மதிஎன்றால்—அஃது
மதி தன்னை வீழ்த்தும் மடமைக்கல்ல
சாந்தமாய் எல்லா நாட்டினரும்—ஒரு
தாய்பெற்ற மக்கள்என்று வாழ. 2

ஒன்றையொன்று மோதிப் பகைகொண்டு—இங்கு
உற்ற உயிர் ஜாதி அழிவதெனில்
கன்று தன்னைக் காக்கும் கறவையைநேர்—அந்தக்
கடவுளும் இங்கு அழிவா னன்றோ? 3

விண், நீர், கனல், காற்று, மண் என்று—ஐந்து
வீறுகொண்ட சக்தி தானிலதேல்
முன்னேற்றமே காணும் வகையாது—பதில்
மூண்டநாச சக்திதான் சொல்லிடுமோ? 4

## 28. நீங்கள் சிலபேர்

நீங்கள் சிலபேர் நிலம்படைத்தோர்
நாங்கள் பல பேர் ஏர் உழுவோர்
நீங்கள் சில பேர் விருந்துண்போர்
நாங்கள் பல பேர் பசித்திருப்போர். 1

நீங்கள் சில பேர்
நாங்கள் பல பேர் குடும்பிகளே
நீங்கள் சில பேர் சிவிகையிலே
நாங்கள் பல பேர் சுமப்பவர்கள். 2

நீங்கள் சில பேர் மாளிகையில்
நாங்கள் பல பேர் மண்குடிலில்
நீங்கள் சில பேர் கடவுளென்பீர்
நாங்கள் பல பேர் கடவுளில்லை! 3

நீங்கள் சில பேர் ரோஜாமலர்
நாங்கள் பல பேர் கூர் முட்கள்
நீங்கள் சில பேர் தோன்றுபிறை
நாங்கள் பல பேர் நட்சத்திரம். 4

## 29. இந்து முஸ்லீம்?

ஒருமுகத்தில் தோன்றுமிரு கண்கள் போல
உயர்வானில் சுழல்இரண்டு சுடர்கள் போல
இருதரத்தார் அன்பென்னும் மதபீ டத்தில்
இருக்குங்கால் எதற்காக மரண பூஜை? 1

மகமதியன் என்றால் தலை மழுக்க லாக்கி
மாட்டுமொரு குல்லாவும் சின்னமானால்
அகத்தினிலே அவர்மனைவி என்றுள்ள பெண்கள்
அருங்கூந்தல் வளர்ப்பதிலே அர்த்த முண்டோ? 2

புனிதமிகு இந்துவெனப் பூணூல் சாற்றி
போதெல்லாம் கீதைசொல்லல் சின்ன மானால்
கனிவுடனே அவர்மனைவி என்ற பெண்கள்
கவின்தோளைப் பூணூலே தழுவி டாதோ? 3

வழுவுடைய அரசியலை முன்னே வைத்து
வாதுக்கு ஜாதிமத சண்டை யிட்டால்
கொழுப்படைவார் அந்நியரே இருபூனைக்குக்
குணநீதி கூறவந்த குரங்கைப் போல. 4

## 30. போர் வெறி

வீழ்ந்த பனித் துளியில்—மலர்மொட்டு
வெடிக்கும் காட்சியினில்
சூழ்ந்த குண்டு பாய்ந்த—வீரனின்
துளைத்த தோள் கண்டேன்!

கனலுங் கதிர் வானில்—செக்கரைக்
காட்டி மறைகையிலே
அனலே பிடித்த கப்பல்—கடலில்
அமிழும் காட்சி கண்டேன்!

3

சித்தம் மகிழச் செய்யும்—பலவிதச்
சிங்காரக் காட்சியெலாம்
யுத்த வடிவு பெற்றே—எனது
உள்ளம் உலுக்குதையோ!

## 4

*மண்கொளும் ஆசையினால்—உலகே*
*மயான மாச்சுதையோ!*
*கண் இருந் தால் காலன்—இதனைக்*
*கண்டு சகிப்பானோ?*

## 1. தேவை!

ஆற்றோரம் ஐந்துகாணி, மோட்டார் வண்டி,
அறுபதடி அழகுமனை, பசுக்கள் நான்கு,
காற்றாட மலர்த் தோட்டம், வாழை தெங்கு
கண் போலக் காக்கின்ற உண்மைத் தோழன்
மாற்றங் கொள் உலகறிய வானொலி, மக்கள்
மனம் படிந்த செய்தி நூல், கவிதை நன்னூல்,
ஊற்றான கவிசிறக்க, ஒயிலாய் இல்லாள்
உயர்வடைய ஆண்,பெண் இரு சேயர்தாமே!

## 2. பெண்ணுரிமை

பெண்ணுக்கு உரிமையே இல்லையென—வாது
பேசிடும் நாவைத் துணித்திடுவோம்!
கண்ணுக் கொளியது இல்லை யெனில்—இங்குக்
காட்சி யுண்டோ ஒரு மீட்சியுண்டோ?

2

நல்ல யாழது ஆண்களெனில்—சுவை
நாதம் தரும்விரல் பெண்களென் போம்.
தில்லையில் ஆடிய செஞ்சடையான்—பெண்ணைச்
சேர்த்துடல் கொண்டதைச் சிந்தித்தீரோ?

3

இரவு பகலது இல்லை எனில்—இங்கு
எப்படி இயங்கிடும் நாளொன்று தான்?
தரணி தழைத்திடும் சுகமனைத்தும்—கற்புத்
தருணியர் ஆடவர் சங்கமமாம்!

4

உச்சிக் கிளை தனில் நின்றபடி—பாதம்
ஊன்றியே வந்த அடிமரத்தை
அச்ச மிலாமலே வெட்டுலகே!—நாளை
அடையும் கதிநீ அறிகுவையோ?

## 3. தூக்கம்

அங்கத் தளர்வதனால்—விழியை
அணையும் தூக்கமது
தங்கக் கிண்ணத்திலே—பருகும்
தண்மது வின் மயக்கோ?

மண்ணில் புதையும் வித்து—மண்ணிலே
மலர்ச்சி காண்பது போல்
கண்ணில் புதையும் துயில்—கண்ணிலே
காந்தி விளைப்பது வோ?

அரசன் ஆண்டியையும்—சமமாய்
ஆளும் அரசிது வோ?
மரண மேடையின்முன்—விளங்கும்
மௌனத் திரை யிதுவோ?

கனவுகாண் சாளரமோ?—விதியின்
கன்னத் திடும் முத்தமோ?
அன்னையின் மடியினிலே—குழந்தை
அழா திருக் கின்றதோ?

## 4. பங்குனியும் சித்திரையும்

கருமுகில் கரைந்தது; சருகு உதிர்ந்தது;
கடலின் அலைகரை மோதி மறைந்தது;
இருளிடை உடுக்களில் ஒன்று விழுந்தது;
எழுந்த பறையொலி மோனத் தாழ்ந்தது. 1

விழிதிறந் தேவெண் முல்லை சிரிக்கவே
விந்தைக் கனவொடு தென்றல் விளையவே
பொழிலிடைக் கோகிலம் தீம்பண் பிழியவே
புதுமணப் பெண்ணெனச் சித்திரை வந்தனள். 2

சுதைநிலா தேய்ந்தே புகையாய்ப் பறந்தது;
சுடரினில் கட்டிய சிட்டம் அகன்றது;
புதைகுழி தன்னுட் சவமே புகுந்தது;
பூட்டிய யாழின் தந்தி அறுந்தது. 3

தென்மொழி எட்டுத் திக்கும் ஒலிக்கவே
சிறுமை தீர்ந்து பெருமை செழிக்கவே
பொன்னொளி பனியின் போர்வை விலக்கவே
புதுமணப் பெண்ணெனச் சித்திரை வந்தனள்! 4

## 5. கடவுளின் வேலை

**பக்தன் :**

*"கந்தமலர் கட்டும் பண்டாரமே!*
*கடவுளையே தாங்கள் கண்டதுண்டோ?*
*சந்ததம் அவர் செய்யும் வேலை என்ன?*
*சாற்றிட வேண்டும் தமியனுக்கே"*

**பண்டாரம் :**

*"ஆவி எனும் தூய மலரதனை*
*அங்கமெனும் நாரில் தினந்தொடுத்து*
*மேவிவரும் காலக் கடைத்தெருவில்*
*விற்பதுவே அவன் வேலையப்பா!"*

**பக்தன் :**

*"கனவிரும்பைத் தட்டும் கொல்லனாரே!*
*கடவுளையே தாங்கள் கண்டதுண்டா?*
*தினமும் அவர் செய்யும் வேலை என்ன?*
*தெரிந்திடவே சொல்வீர் சேயனுக்கே"*

**கொல்லன் :**

*"கனவிரும்பு அனைய ஜீவனையே*
*காதலாம் சம்மட்டி யாலடித்து*
*மனிதரெனும் வண்டிச் சக்கரத்தில்*
*மாட்டுவதே அவன் வேலையப்பா!"*

பக்தன் :

"கவனமதாய்ப் பகடை ஆடுவோரே!
கடவுளையே நீங்கள் கண்டதுண்டோ?
தவராதவர் செய்யும் வேலை என்ன?
தயவுடனே சாற்ற வேண்டு கின்றேன்"

சூதாடி :

"உலகெனும் சொக்கட்டான் தனைவிரித்து
உதித்தல்மரித் தலாம் பகடையுருட்டிக்
கலகமேசெய் வினையாம் காய்களிட்டுக்
களிப்போடு சூதாடல் அவன் வேலையே."

பக்தன் :

"கண்காட்டியே அழைக்கும் கணிகை யாளே!
கடவுளை நீயேனும் கண்டதுண்டோ?
உண்மையாய் அவர்செய்யும் வேலை என்ன?
உவந்துரையே செய்யவுனைக் கோருகின்றேன்"

கணிகை :

"உயிரான கண்ணதனைக் காட்டிக்காட்டி
உலகிலுள்ள ஒவ்வொரு அணுக்களோடும்
அயராது தினந்தினமும் என்னைப்போல
அவிசாரி போவதுவே அவனின் வேலை!"

## 6. போகின்றார்கள்

ஒருவர்பின் ஒருவராகப் போகின்றார்கள்
உழும்ஏரின் எருதுகள்போல் போகின்றார்கள்
முருகுற்ற கடலதனின் அலைகள் போலே
மோகமுடன் நடமாடிப் போகின்றார்கள்
மருளூட்டும் இருளதனில் தருநிழல்தான்
மறைவதுபோல் மறைவாகப் போகின்றார்கள்
பெருகுற்ற அன்பதனால் தடுப்பாரில்லை
பேய்க்காற்றில் உதிர்சருகாய்ப் போகின்றார்கள்!

2

நடக்கின்ற காலமெனும் நதியின் மீது
நாடுகின்ற குமிழெனவே போகின்றார்கள்
கொடையிட்ட வள்ளல்களும் போகின்றார்கள்
குறைமனத்துக் கருமிகளும் போகின்றார்கள்
அடைகாக்கக் கூடுகட்டாக் குயிலைப் போலே
அறிவிருந்தும் அறிவிழந்து போகின்றார்கள்
தடைசெய்ய ஒருவரில்லை போகின்றார்கள்
சாவென்னும் மதுக்கடைக்கே மனிதரெல்லாம்!

## 7. நிழல்

வானின் நிழலாகும் வையம்;—மனித
வாழ்வின் நிழலாகும் வான்வில்;
ஊனின் நிழலாகும் ஆவி;—முழு
ஒளியின் நிழலாகும் கங்குல்!

2

கோப நிழலாகும் செந்தீ;—சின்னக்
குழந்தை நிழலாகும் தெய்வம்;
தாப நிழலாகும் அடிமை—மனத்
தனிமை நிழலாகும் சாந்தி!

3

கலைஞன் நிழலாகும் மதியம்—கன்னி
கனவின் நிழலாகும் வைரம்
தலைவன் நிழலாகும் வெற்பு—வஞ்சத்
தாசி நிழலாகும் பூனை!

4

சோற்றின் நிழலாகும் உழவன்;—பெரும்
சோக நிழலாகும் காடு;
ஆற்றின் நிழலாகும் இளமை;—தியாக
அன்பின் நிழலாகும் அன்னை!

## 8. நாட்டியக்காரி

ஆடுகின்றாள் அற்புதவல்லி!—காதில்
அம்புலி ஆதவனை குழைகளாட
நீடுநிலக் கடல் மீதிலே—விம்மி
நெளிபல திரைகடல் அடைவுமிட்டு
ஆடுகின்றாள் அற்புதவல்லி!

வையமெனும் செம்மலர்க் கைமேல்—இருட்டு
வட்டமிடும் வானவிழி முத்தமிடவே
தைய தக தக எனவே—மேகம்
தனில் குமு றிடியாம் சதங்கை முரல
ஆடுகின்றாள் அற்புதவல்லி!

3

நட்சத்திரத் தந்திகள் கொண்ட—கால
நாதமெனும் யாழதை நன்கு மீட்டிப்
கட்டுப்படா உயிர்ப் பாட்டைப் பாடிக்
கவிதை எனும் எழில் அரங்கினிலே
ஆடுகின்றாள் அற்புதவல்லி!

## 9. சிறைச்சாலை

**கைதி :**

*விண்ணின் சுடர்விழித் தாரகைகாள்!—ரவி*
*வீழ்ந்து நடுநிசி வேளை வந்தும்*
*எண்ணம் அடங்கித் துயின்றிடாமல்—கைதி*
*என்றன் மனம்போல் துடிப்பதும் ஏன்?*

**தாரகை :**

*கலங்கிக் கரைந்திடும் மானிடனே!—இருட்*
*கண் என யாங்களே மின்னிடினும்*
*பலவும் விளைத்திடும் காலமெனும்—பெரும்*
*பாழ்ச்சிறை வதியும் கைதிகளே!*

**கைதி :**

*காலச் சிறையதன் கைதிகளே!—உம்மைக்*
*கைதிஎன் றடைத்த காவலன் யார்?*

**தாரகை :**

*கோல ஒளிதனைப் பூட்டிவிட்டு—ஒரு*
*குறியற் றிருக்கும் இறைவனடா!*

**கைதி :**

*எந்த நீதியைக் கடைப்பிடித்து—அந்த*
*இறையவன் உம்மைச் சிறைசெய்தான்?*

**தாரகை :**

சொந்த மதியோடு அன்னவனே—வெகு
சூழ்ச்சியாகத் தொகுத்த நீதிகொண்டு
உடலில் உயிரைச் சிறைசெய்து—மின்
ஒளியைப் புயலிற் சிறைசெய்து
கடலில் அலையைச் சிறைசெய்து—அவன்
கண்ட தனைத்தும் சிறைசெய்தான்!

## 10. மனம்

கொடிய மனது என்றென்னைக்
குறைகள் கூறும் மானிடரே!
நெடிய வான வில்லாக
நிலவும் என்னெழில் கண்டீரோ? 2

பீடை மனது என்றென்னைப்
பிழைகள் பேசும் பெரியீரே!
ஆடும் அலைசூழ் கடலினிலே
அமர்ந்த என்னெழில் கண்டீரோ? 3

பாவ மனது என்றென்னைப்
பழித்துக் கூறும் பாரோரே!
பூவை மீட்டும் யாழ்நரம்பில்
பொலியும் என்னெழில் கண்டீரோ? 4

கலக மனது என்றென்னைக்
கடிந்து பேசும் கண்ணியரே!
மலரி னுள்ளே நிறைந்துள்ள
மதுவில் என்னெழில் கண்டீரோ? 5

கருமி மனது என்றென்னைக்
காய்ந்து பேசும் மேலோரே!
இருண்ட இரவின் நிலவாக
இயங்கும் என்னெழில் க்ண்டீரோ? 6

மாறும் மனது என்றென்னை
வசைகள் கூறும் மாதவரே!
பீறும் பச்சை ஓந்திநிறம்
திகழும் என்னெழில் கண்டீரோ? 7

## 11. உவமை உண்டோ?

குழந்தையதன் கன்னத்திலே
கூத்தாடும் சிவப்பதனை
அழகெழுப்பும் செக்கரெனை
அறிவிக்க மாட்டேன்யான்!

2

சிறுகுழந்தை முகத்தினிலே
சிரிக்கின்ற திருவொளியைக்
கறுக்கிருளில் கண்விழிக்கும்
கலைமதியம் என்னேன்யான்!

3

கொஞ்சும் குழந்தைநாவில்
குரலெழுப்பும் மழலைதன்னைப்
பஞ்சவர்ணக் கிள்ளையதன்
பாட்டெனச் சொல்லேன்யான்!

4

உடல்குலுங்கக் குழந்தையது
உந்தி உந்தித் தவழ்வதனைக்
கடலாடும் அலைஎனவே
கட்டுரைக்க மாட்டேன்யான்!

5

பேசாமல் பேசுகின்ற
பிள்ளையதன் கண்களினைப்
பாஷாபி மானத்தினால்
பைந்தமிழே என்னேன்யான்!

6

ஆனந்தம் தரும் குழந்தை
அழகுரைக்கும் உவமையது
வானத்தை நோக்கிஏறி
வாளி என வீழ்ந்ததம்மா!

## 12. நாக்கு

துளிரின்றேல் மரக்கிளையில்
தோன்றிடுமோ காற்று?
குளிர்கடலில் அலையின்றேல்
கோஷமதும் உண்டோ?
வெளிதனிலே மின்னின்றேல்
வீழ்மழையும் வருமோ?
நளினமலர் இதழ் நிகர்த்த
நாவலால் சொல்லேது? 1

* *

நாவின்றேல் ருசியுண்டோ?
நனவும் தெளிவுறுமோ?
பாவின்நயம் வெளிப்படுமோ?
பண்ணும் உயிர்த்திடுமோ?
பூவினிலே வாய்மைதனைப்
புரத்தல் நாவதன்றோ?
தேவர்களும் விரும்பமிர்தம்
தேக்கல் நாவிலன்றோ? 2

* *

எண்ணரிய வடிவங்களில்
இயங்கும் நாவெழிலே;
திண்மலையின் அருவியிலே
திகழுமிது பாரீர்!

விண்விளக்கும் ரவியதனின்
வீறுசுடர் நாவே!
தண்ணிழலை அருளும் ஆலின்
தருவிழுது நாவே! 3

* *

ஞானமது வேண்டுமெனில்
நாவதனைக் காப்பீர்
தீனர்களைக் காப்பவரின்
திருத்துணைவன் நாவே
ஊனநெறி வகையினிலே
ஓட்டாதீர் நாவை
வானிலவில் வந்த தமிழ்
வாழ்த்திடுக நாவே! 4

## 13. ஓர் இரவு!

பட்டப் பகலைப்போல
பால்நிலவு காயயிலே!
குட்டி வந்து காத்திருந்தாள்
கொய்யாத் தோப்பு ஓரத்திலே! 1

*   *   *

கொட்டும் குளிர் பனியில்
கோரைப்புல்லு மெத்தைமேலே
கட்டிக் கலந்திருந்தோம்
கற்கண்டு இனிப்புப் போலே! 2

*   *   *

கிழக்கே மானம் வெளுக்கக்
'கீச்' சென்று பறவை கத்த
வழக்க சாம கோழிகூவல்
வந்தது எம பாசம்போலே! 3

*   *   *

அத்தைக்குப் பயந்துகொண்டு
அத்தானே போய் வாரேனென்று
முத்தம் ஒன்று கொடுத்து
முக்காடு போட்டே நடந்தாள் 4

## 14. மறு பிறப்பு

நரியது ஒன்று இறந்ததாலோ—இந்த
நாட்டில் அமைச்சன் பிறந்து விட்டான்
வெறிகொண்ட நாயே இறந்ததாலோ—இங்கு
வீரப் பேச்சாளன் பிறந்து விட்டான்?

காட்டுக் குரங்கே இறந்ததாலோ—இங்கு
கவிஞன் என்பானும் பிறந்து விட்டான்?
ஆட்டுக்குட்டி யொன்றிறந்த தாலோ—இங்கு
ஆலாத்திப் பாடகன் தோன்றி விட்டான்?

சிட்டு ஒன்று இறந்ததாலோ—இங்கு
தேவடியா ளென்பாள் மேவி விட்டாள்?
குட்டைத் தவளை இறந்ததாலோ—இங்கு
குழந்தைக்கு ஆசான் பிறந்து விட்டான்?

இந்துமதத்தின் ஆணிவேராய்—இங்கு
இருக்கும் ஆராய்ச்சி மறுபிறப்பாம்!
சிந்திப்பீர் நீங்கள் இறந்தபின்னர்—பெறும்
திருவடிவம் என்ன செப்புவீரோ?

## 15. நிழல்

கன்னங்கரிய உருவமம்மா—சிறு
கையுண்டு காலுண்டு கண்களில்லை
பின்னும் முன்னுமாக என்னுடனே—ஏதோ
பித்துப் பிடித்து வருகுதம்மா!
நன்று குலவி விளையாடிட—நானே
நாடிய அந்த மரப்பாவை
தன்னைப் பிடித்துக் கை தாருமம்மா—இதோ
தரையில் கிடக்குது பாருமம்மா!

குழலொடு யாழிசை வெட்கிடவே—மகிழ்
கொட்டும் மழலை மொழிக் குழந்தாய்!
அழலதில் குளுமை காணப்போமோ—இருள்
அம்புயம் விழிக்கச் செய்வதுண்டோ?
பழமொடு செந்தமிழ் பால் தருவேன்—கவி
பாரதி 'பாப்பா' நற் பாட்டுரைப்பேன்?
நிழலதைப் பிடித்துத் தந்துன்னையே—ஒரு
நிழலென ஆக்கிட நெஞ்சிலையே!

## 16. அணையும் சுடரொளி

குருடன் உகுத்தக் கண்ணீர்த்துளிபோல்—இருள்
கொட்டிய குளிர்பனித் திவலையெல்லாம்
பொருளெனப் பொய்யெனப் போயினவே—காலை
பொற்கதிர்ப் பட்டிடப் பூமிவிட்டு. 1

புல்லின் நுனிதனில் வைரக்கல்லாய்—மிகு
பொலிவுறநின்ற பனித்துளியை
வில்விட்ட வெஞ்சரம் போன்ற கதிர்—கொன்று
விழுங்கிய விந்தையின் மர்மமென்ன? 2

காலைக் குடியன் போல் கண் சிவந்து—சுடர்க்
கதிரவன் கனன்றான் அவன் செவியில்
கூலிக்காரி வள்ளிமாரைச் சப்பி—அவள்
குழந்தை இறந்திட்ட கொடுமை கண்டோ. 3

## 17. கோடை

கோடை உச்சிப் பகற் பொழுதில்
கொதிக்கும் தாரின் வீதியிலே
கொட்டு முழக்கம் ஏதுமின்றிப்
பாடை சென்றது ஒருசவமே.

2

சாலைப் புளிய மரத்தடியில்
சக்கிலி எருமைத் தோலெடுத்துத்
தண்ணீர் நனைத்துப் பதமாக்கி
அளவு பார்த்தான் செருப்புத்தைக்க.

3

ஊன்றுகோலும் செருப்புமின்றி
உடையுமின்றி நிர்வாணமாக
தாடி நரைத்த சன்யாசி
நிமிர்ந்து சவத்தைப் பார்த்துச் சென்றான்.

4

நீண்ட காலம் தளர்வின்றிச் சுற்ற
நினைத்த தெய்வமாம் யாத்ரீகன்
உலக உயிர்கள் ஒவ்வொன்றையும்
உவந்து செருப்பாய்க் கொண்டுவிட்டான்!

## 18. காலம்/

படுக்கை யறை தனில்வைத்த விளக்கின் ஜ்வாலை
பாய்ந்துவந்த தென்றலிலே அரணை வால் போல்
நடுக்கமொடு சிவப்பேறித் துடிக்க லாச்சு
நழுவிற்று கையிருந்த புத்தகந் தான்
அடுத்திருந்த சாளரத்தின் கதவு தன்னை
அவசரமாய் மூடுதற்கு எழுந்து சென்றேன்
கடு விஷம் போல் இருள் காட்டி நின்றவானில்
கணக் கடங்கா உடுக்கணங்கள் துடிக்க லாச்சு!

என் மனதும் துடித்ததுவே வலையின் மீன் போல்
இரு செவியில் நுழைந்த தொரு குழலின் ஓசை
மின்னுணர்வு பொங்கிற்று; இன்ப வேட்கை
மீறி உயிர் தொட்டிடவே கைதியாகிச்
சென்றனனே இசை இழுத்த பக்க மெல்லாம்
தேனெடுக்கப் பறந்தோடும் வண்டுபோல,
மன்பதையோர் அச்சமுறும் மயானம் தன்னில்
மனிதனைப் போல் தனித்தொருவன் இருக்கக்
கண்டேன்

பாங்குடனே அவனிசைத்தான் குழலை மேலும்;
பட அரவே வந்ததுவே; பயந்து நானும்
"தீங்குதரும் படஅரவு பாரும்! என்றேன்"

செவிடன்போல் நிலை பெயரு தவனே, பின்னும்
ஏங்குகிற தன்மூச்சைக் குழலில் வைத்து
இசை வெள்ளம் தனில் உலகை மிதக்கச் செய்தான்

ஓங்குகிற என் உள்ளத் தச்ச மெல்லாம்
உற்ற இடம் தெரியாமல் கரையலாச்சு!
கரும்பானை தனில் வழியும்நுரையின் பால் போல்
கங்குலின் மேல் உஷை தன்னைக் கதிரோன் காட்ட
விருப்போடு குழலிசைத்தோன் முகத்தைப்
பார்த்தேன்!

விந்தை மிகும் காட்சிதனை என்ன சொல்வேன்!
குருடன் தான் அன்னவனே! உலகம் எல்லாம்
குருடாச்சு என்றனுக்கே அவனோ பின்னும்
இருண்டேதான் மழை பொழியும் கார்முகில் போல்
இன்னிசையைப் பொழிந்தபடி ஏகினனே!

## 19. இருதலைக் கொள்ளி

நாகரீகம்

இருளினிலே மலரதனின் மூச்சுப் போலே
ஏகுகின்ற அக்காளே! சாவே! நிற்பாய்!
அருமை மிகும் பலவிஷயம் உன்பால் பேச
அவாவுற்றேன் உன்தங்கை நாக ரீகம்.

சாவு

நெருப்பதனின் ஜ்வாலை எனக் கைகள் நீட்டி
நினைவற்ற எனை நீயே நெருங்கு கின்றாய்
வருந்திடுவாய் நான் நின்று விழித்துப் பார்த்தால்
வண்ணவுடல் புகை போலே மறைந்து போகும்.

நாகரீகம்

புகை எனவே நான் மறைந்தால் நீல வானின்
புயல் பாட்டிற் கிடி தாள மாகி நிற்பேன்
பகை நமக்குள் வருவதற்கு வகையு முண்டோ
பாரில் நாம் விதிய தனின் மக்களன்றோ?

சாவு

விதி யதனின் மக்களெனல் உண்மை; நானோ
விளைவிக்கும் அழிவதனை வெல்வாரில்லை!
துதி புரிந்து விதியெனையே தடை செய்தாலும்
துறை யில்லா நதியாகும் எனது நீதி.

## நாகரீகம்

நிலையுடைய நீதிதனைக் காணுதற்கு
நேர்மை விதி நேத்திரங்கள் நீயும் நானும்
அலை அலையாய் எழும் ஆசை புதுமை காட்டி
அவனிதனை அலைக்கழித்தல் எனது நீதி.

## சாவு

புகலறிய காலந்தான் கையிலேந்தும்
போர்வாளின் பிடி நானே; கூர்மை நீயே;
இக மதுவே இம்மர்மம் தன்னை ஓர்ந்தால்
இழுக்கு வரும் நம் செயற்கே, ஏகு வேனே!

## 20. பிறை-படகு

காணும் இருள்வான் கடல்தனிலே
கார்முகில் வெண்முகில் அலைகளிலே
மீனும் தாரகை இடையினிலே
மிதந்தே செல்லும் பிறைபடகே!

வீசி மின்னி இடிகுமுற
வீதி சென்ற மழைநீரில்
ஆசைக் கண்ணன் காயிதத்தால்
அமைத்தே விட்ட படகோநீ?

அல்லி மலரின் தேன்கனவை
அள்ளிச் சுமந்தே சென்றிடும்நீ
பிள்ளைக் கண்ணன் முத்துநகை
பெற்றே சுமக்க வல்லாயோ?

புலரும் காலை ஒளிப்புயலில்
பொற்பிறை படகே குலையாமல்
உலகக் கரையில் தங்கிச்செல்ல
உன்னைக் கண்ணன் அழைத்தான்வா!

## 21. செவ்வானம்

செவ்விய செக்கரின் பொன்னின் வெள்ளம்
சிரித்து மென்மையாய் குலுங்கும் போதும்
திசைகள் கவிந்த வானம் யாதும்
செப்பா தமைதியாய் நிற்கக் கண்டேன்.

வவ்விடு அரக்கன் கனவு போல
வையத்துச் செல்வனின் பஞ்சா லையில்
வருந்தி உழைக்கும் ஏழ்மை யாளன்
வார்த்த குருதி பொங்கிற் றம்மா

வானச் செம்மை வையச் செம்மை
காணா ஒன்றாய்க் கலந்ததும் ஏனோ?

எங்கே பிடிசோ றீட்டிட ஏழை
இதய ரத்தம் தருகின் றானோ
எங்கே ஏழைத் தொழிலா ளியே
இருந்தும் இறந்த பிணமா னானோ?

அங்கே அந்தப் பஞ்சாலை மீது
தங்க அந்தி வானின் காட்சி!

அதிசயக் கேள்வி ஒன்று உண்டு
அதனைக் கேட்டால் விடை இது வாமோ
அண்டம் தனையே அழகாய் வியப்பாய்
அமைத்த கடவுளே பஞ்சா லையை-

அமைத்த மனிதனை முதலில் இங்கு
அமைத்த குற்ற வாளி யன்றோ!

## 22. இதய வாழ்த்து

எங்கே இருந்தாலும் நீயே
இன்பமாக வாழ்ந்தால் போதும்
என்எண்ணம் பகல்காறை
விண்மீனாய் எரிந்தால் போதும்.

சிங்காரக் கனவே கண்டு
சிவந்தேதான் சிரித்த ரோஜா
தங்கும் முள்விட்டே போனால்
தடுப்பவரே யாரே ராஜா.

துக்கக் கங்குல் பனித்துளிகள்
சுடரதனைக் காண இச்சை
இக்கரையில் இருப்ப வர்க்கே
அக்கரையில் தோணும் பச்சை.

உயர்ந்த முத்து உள்ளகடல்
உப்பானது அதனின் விதியே
அயர்ந்து உறங்கும் இரவினிலே
அழிந்தும் வளராதோ மதியே!

## 23. "விதியே.... சொல்...!!"

ஞாலம்...மயக்கும்...உன் யாழை—இன்ப
நாதத்...தந்திகள்...தன்னூடே...
பாலன்...என்றன்...உயிர்மூச்சே—நீ
பாடிட...இசையில் . இணைப்பாயோ...?

* * *

கடலலை...கரையில்...நடமாடி—செய்
கானம்...நடனம்...இவை யெல்லாம்
கடலலை...யானேன்...! எனை நீயே—பொய்க்
கண் துயில் சாவில் காண்பாயோ...?

* * *

எண்ணில்...வைர...தீபங்களை—வான்
ஏற்றும்...அன்பின்...மேடையிலே...
என்றன்...உயிரின்...தீபமதைச்—சற்று
ஏற்ற...உனக்கு...மனமிலையோ...?

* * *

காவிய...செவ்வாய்...உன் சிரிப்பில்—ஒரு
கதிரோன்...முத்தாய்...ஒளி தரினும்...
மேவிய...ஏழைக்...கண்ணீர்ப் பனி—உன்
மெய்யினைத்...தீண்ட...உய்விலையோ...?

## 24. திராட்சை மது!

திவ்யமது திராட்சைமது ஊற்றடி பெண்ணே
செக்கரென ரத்தவொளி சேர்த்திடக் கண்ணே
கவ்வுதுயர் காலமது கனவென ஓடக்
கடலாடும் அலையெனவே களிப்புடன் ஆட.

(திவ்யமது)

2

வண்டுணவே சுவைமதுவை வசந்த காலமே
வண்ணமலர்க் கிண்ணியிலே வார்க்கும் கோலமே
கண்டுகொள்வாய் எங்கும் நிறைந் துள்ள தேவனே
கன்னியே நின் முத்தமது என்று மாவனே!

(திவ்யமது)

3

விண்ணுலவும் வெண்மதியை மண்ணிலே பிடிக்க
வேட்கையெலாம் தாரகைபோல் இருளிலே வெடிக்க
பண்ணிசைத்தே தென்றலெனும் தேரினில் பறக்க
பாவ புண்யம் ஒன்றெனவே யாவையும் மறக்க

(திவ்யமது)

## 4

எங்கிருந்தேன் இங்கு வந்தேன் செல்வதும் எங்கே?
எண்ணிப் பார்க்க நேரமதும் ஏதடி இங்கே?
மங்குல் பனித் துளியெனவே வந்ததும் யாரோ?
மலர் .மணமாய் மறைந்தேதான் சென்றிடு வேனோ?
(திவ்யமது)

## 5

பகலிரவின் விழியில் நடம் புரிந்திடக் கண்டேன்
படிக்கும்மறை நூலென நின் இடைதனைக் கொண்டேன்
திகழு மொரு ரகசியத்தைப் பார்த்திட நாளும்
சென்றவர்கள் திரும்பவில்லை செல்வியே மேலும்
(திவ்யமது)

## 6

தென்னையின் பொன் னோலை நிழல் முல்லைக் காடு
தென்றலிசை வெள்ளி நிலா உன்ற னோடு
தன்னைமறந் துள்ளதுவே சொர்க்கம் வீடு
தாமரையின் கைகளினால் அன்பி னோடு.
(திவ்யமது)

## 25. நினைவில் வை

அருத்த மற்ற மகிழ்ச்சிச் சிரிப்பு
போனுப் போகட்டும்—அது
அலைமேல் மின்னும் ரவியின் கதிர்போல்
போனுப் போகட்டும்

உருவாந் தேகத் திளமை ஆடிப்
போனுப் போகட்டும்—அது
ஒருபுல் நுனியின் பனித்துளி யாய்
போனுப் போகட்டும்

கருதும் நெஞ்சக் கனவு இன்னும்
போக வில்லையே...அது
கடலை நீங்கிப் போகா அலைபோல்
போக வில்லையே...

சுருதி கூட்டிச் சொன்ன சொற்கள்
போக வில்லையே—அது
சூழும் வைகறை மறையும் மீன்போல்
போக வில்லையே...!

## 26. விதிப் போக்கு

எங்கெனைக் கூட்டிச் செல்கின்றாய்
இயம்பாய் இயம்பாய் ஏ,விதியே
மங்கையைத் தொடரும் வாலிபனின்
மனம்போல் உன்னைத் தொடர்ந்தேனே

தங்குத லின்றிக் காற்றைப்போல்
தலையின் திருப்பாக் காலம்போல்
எங்கெனைக் கூட்டிச் செல்கின்றாய்
இயம்பாய் இயம்பாய் ஏ,விதியே...

தாயின் கர்ப்பச் சிறுசிறையில்
தவித்தேன் இருளில் அதைநீக்கித்
தோயும் சுடரின் உலகத்திலே
சுதந்திரம்வா! என்று சொல்லினையே.

நோயும் வறுமை கண்ணீரும்
நூறு கோடிப் பிரிவினையே
பாயும் அம்பாய்த் தைத்திடுதே
பதைக்குதே நெஞ்சம் ஏ,விதியே...

நிற்பாய் நிற்பாய் நீசற்றே
நேராய் காட்டுன் முகந்தனையே
உற்றே உன்றன் கண்ணொளியில்
உள்ளக் கருத்தை உணர்வதற்கே...

சுற்றும் பம்பரம் வீழ்வதுபோல்
சோர்ந்தே வீழுதென் அறிவுப்புரு
சற்றே நிற்பாய் சாவதுவே
சந்திக்கும் ஜனனப் பாதையிலே...

எங்கெனைக் கூட்டிச் செல்கின்றாய்...
இயம்பாய் இயம்பாய் ஏ,விதியே...!

## 27. விதியின் விழிப்பு

விதி

காற்றது செலுத்தும் கார்பரியைக்
கண்டே களிக்கும் கவிஞனே கேள்;
"தோற்ற மனைத்திலும் சூழ்ந்திருந்து
சுழலும் உலகாள் விதியடா யான்."

கவி:—

என்னே! என்னே! யாரது நீ
இருளுள் இருளாய் இருப்பதுவார்?
உன்னை நினைத்தே உளம் நடுங்கும்
ஊமை மனிதன் நானல்ல போ!

விதி:—

பொங்கிடும் வங்கம தாயினும் யான்
போடும் கோட்டினைத் தாண்டாது
கங்குலுட் கங்குல தாயிருந்தும்
செங்கதிர்ப் பட்டம் விடுகின்றேன்!

கவி:—

ஒருநாள் முழுதும் பறக்காமல்
ஒளிகுன்றி வீழ்கதிர்ப் பட்டந்தனை
அருவாய் வானில் நின்றுவிடும்
ஆசாமி யார்நீ அஹ்ஹஹ்ஹா!

**தொழிலாளி:—**

ஏங்கி இளைத்த கவித்தோழா!
இடியென நீதான் சிரிப்பதும் ஏன்?
ஓங்கி உன்முன் நிற்பது யார்?
ஓகோ, உணர்ந்தேன் திருட்டுவிதி!

கண்போல் காத்த என்குழந்தைக்
கன்னமே மின்னிய ரத்தத்தை
மண்மேல் புதைத்து செழும் ரோஜா
மலரென மாற்றிய விதியிதுவே!

அன்பைத் திருகிப் பிழிந்தென்றன்
இருவிழி சிந்திய நீர்த்துளியைப்
பண்ணைச் செல்வன் பையில் வெள்ளிப்
பணமென மாற்றிய விதியிதுவே!

மாமரம் தன்னை வசந்தகாலம்
மாறிமா றிவந் தணையவரும்
சேம மளித்திடும் தென்னை தனைத்
தேடி வசந்தம் வந்ததுண் டோ?

ஒருவிழி இல்லை விதிதனக்கு
உண்மை தெரிந்ததா? உயர் தோழா!
குருடனைப் பார்ப்ப தபசகுனம்?
குடல்பசி கொண்டது, போய்வருவேன்!

## 28. புதிர்

*சிலந்தியென என்னிலே யான் கூடு கட்டிச்*
*சிறகடித்துச் சுழல்கின்ற வெறியைத் தின்னக்*
*கலக்கமுறும் எண்ணங்கள் கரிந்து போக*
*கனை தீர மதுவருந்திக் களித்தி ருப்பேன்* 1

*உலகம் எனை நோக்கியெறி வசையின் சொற்கள்*
*உற்ற இருள் வான் மின்னும் உடுக்க ளென்பேன்*
*நிலவெழுந்து கவின் விரியக் குடை நிழற்றி*
*நினைவழியக் கனவின் அலை நிஜத்தைப் பாடும்!* 2

*ஊனமுறும் உடற் கிண்ணி தன்னில் ஆடும்*
*உயிரதுதான் கள்ளன்றோ? ஒயில ணங்கு*
*வானனைய விழி என்ற வள்ளம் தன்னில்*
*வார்த்திடு நல் ஒளியதுவும் மதுவே யன்றோ?* 3

*மானிலமாம் பேலாவில் காலம் மாந்தும்*
*மரணமதும் கள்ளன்றி மற்ற தென்ன?*
*தேனதிலே தீயதனின் மணம் நுகர்தல்*
*தெய்வத்தைத் தீண்டுமொரு செய்கை யன்றோ?* 4

## 29. பழைய ஆர்மோனியம்

குழந்தையாய்ப் பிறந்திடுமுன்—எனது
குழியினிலிருந்த தோர் அருமோனியம்
வழ வழப்பான விரலால்—அதனை
வாசித்திட வெகு ஆசைகொண்டேன். 1

கணக்கில் வெண்ணிறக் கட்டைகள்—இன்னும்
கருப்புவர்ணக் கட்டை யிருக்கக்கண்டேன்
இணைத்த கட்டைகள் யாவும்—ஓசை
எழுப்பியிருந்த தைந்தே சொறுக்கள்! 2

ஒத்தை அருமோனியத்தில்—நன்று
ஒட்டிய கட்டையெல்லா மழுத்த
சத்தம் பல்விதம் வந்தது—என்றன்
சாரீரங் கூடிற்றோர் சத்தத்திலே. 3

ஓசை யொன்றிலே சுழன்று—ராக
உலாபுரிய பெரும் வெறுப்புக்கொண்டு
வாசித்தேன் மற்றொரு கட்டை—அதனில்
வந்திடும் ஓசையிலொன்றிப் பாடிட. 4

மூச்சு முட்டிடக் கத்தினேன்—கட்டை
முரணான ஓசையை மூட்டியது
சீச்சீ! இவ்வருமோனியம்—என்றன்
தேவைக் குதவாதே லுடையாதோ? 5

# 30 இல்லையெனில்....

வக்கீல் இல்லை யெனில்—பொய்யாம்
வழக்கும் இருக்காது!
மக்கள் மடிவாரோ—வைத்தியன்
மனத்தில் அன்பிருந்தால்? 1

காசு இல்லையெனில்—அரசியல்
கட்சி இருக்காது!
பூசை இல்லையெனில்—கோயிலில்
பூசாரியும் உண்டோ? 2

அச்சம் இல்லையெனில்—நாட்டில்
அடிமை இருக்காது!
இச்சை இல்லை யெனில்—வாழ்க்கை
இன்பம் இருப்ப துண்டோ? 3

## 31 வியப்பு !

விண்ணதிலே வெண்பிறையே
வீசுமொளி கண்டேன்
என் மனையாள் சிறுகுழந்தை
ஈன்றிடவே கண்டேன். 1

வாழையடி கீழ் வாழை
வளருவதைக் கண்டேன்
ஏழை மகன் தினம் வளரும்
எழிலதனைக் கண்டேன். 2

முறுக்கலையிற் பெருங்கடலே
முத்து தரக் கண்டேன்
அருமை மகன் பள்ளி சென்று
அறிவு பெறக் கண்டேன் 3

வாவியிலே தாமரை சூழ்
வண்டதனைக் கண்டேன்
காவியங் கண் பெண்ணை, மகன்
காதலிக்கக் கண்டேன். 4

## 32 நாணிக்கண் புதைத்தல்

பூண்ட முகில் சேலை—அவிழ்த்த
பொற்கொடி மின் கண்டு
தூண்டா விளக்கு விழி—மலைமுலைத்
தோகை நீ மலர்க் கரத்தால்
நாணிப் புதைத்திடிவே—கண்டிட்ட
நறைமுல்லை சிரிக்குதடீ!
காணும் நிலவினிலே—ஆடிடும்
கலைமான் கலங்குதடீ! 1

முத்தமிட நாணி—வண்டு விழி
முகத்தை மலர்க்கரத்தால்
முத்த மிடப் புதைத்தாய்—பேதையுன்
மோகச் செயல் கண்டு
முத்தென நட்சத்திரம்—வானிருள்
மொய்த்துச் சிரிக்குதடீ!
சித்திரச் சோலைக்குயில்—துணையை
தேடிக் கலங்குதடீ! 2

## 33 மதுவும்—மங்கையும் !

பெண்ணே நின்கரு விழியே
    பேசும் திராட்சைக் கனியே
பெண்ணே நின்சுருள் குழலே
    பெரிய திராட்டைக் குலையே
பெண்ணே நின் இதழ்ச் சுவையே
    பிரிய திராட்சை மதுவே
பெண்ணே நின் எழில்உடலே
    பின்னும் திராட்சைக் கொடியே! 1

பெண்ணே நீ என்னைப் பெற்றாய்
    பெரிய தியாகம் செய்தாய்
பெண்ணே நீ என்னைச் சேர்ந்தாய்
    பிரியாக் காதல் ஈந்தாய்
பெண்ணே நீ என் கனவைப்
    பிள்ளைக் கனியாய்த் தருவாய்
பெண்ணே நின் மனம்தனிலே
    பெருவான்; இருட்டு நிலவே! 2

## 34 துயில்

சிங்க முகத்துப் பெருமாளைச்
  சிறிய கூண்டின் பசுங்கிள்ளை
"அங்கா! ரங்கா!! என்று, பினர்,
  "யாரடா? திருடன்"! என்றதையா!
வெட்கி வெகுண்ட பெருமாளே
  வேடம் பூனை எனக் கொண்டார்! **1**

"கிக்கீ! கிக்கீ!" எனக் கிள்ளை
  கீச்சிட் டதந்தோ! ஆங்கதையே!
கொலையே செய்த பெருமாளாம்
  கொடிய பூனை தனை நானே
அலையின் ஆழி தனில் போட்டேன்;
  அரவின் அணையில் துயிலானோ? **2**

## 35 என்றும் ஒரே காட்சி!

காலைக் கதிரொளியில்—பட்டர்
கமல மலரெடுத்துச்
சோலை வழி நடந்தார்—யானோ
துயின்றேன் ஆலடிக்கீழ். 1

மாலை உடுவொளியில்—யானோ
மல்லிகைப் பூ எடுத்துச்
சோலை வழி நடந்தேன்—ஆந்தை
துயில்கலைந்து கூவ. 2

கோயிற் கதவடைந்தேன்—பறவை
கூட்டைச் சேர்வதுபோல்
பாயல் பாம்பணைமேல்—அரங்க
பரமன் துயின்றிருந்தான் 3

முன்னே வருபவர்க்கும்—நேரம்
முடிந்து வருபவர்க்கும்
என்றும் ஒரே காட்சி—என்று
இசைத்தது கண்டாமணி! 4

## 36 பதில் சொல்!

ஓசை செய்யாப் பாடல்
கேட்ட துண்டா?—நீ
உதயம் மலர் மூச்சைப்
பார்த்த துண்டா? 1

ஓசை செய்யா அழுகை
கேட்ட துண்டா?—நீ
உமிபோல் வீழ்பனி
பார்த்த துண்டா? 2

ஓசை செய்யா விம்மல்
கேட்ட துண்டா—நீ
உயரும் திண்மலை
பார்த்த துண்டா? 3

ஓசை செய்யா அருவி
கேட்ட துண்டா—நீ
உறங்கையில் கனவைப்
பார்த்த துண்டா? 4

## 37. சூரியனின் முடிவு

சிங்கப் பிடரிச் சிலிர்ப்பைப் போலச்
செங்கதிர் சிலிர்க்க வந்தனன் சூர்யன்!
கங்கு லென்ற மதக ளிற்றின்
கபாலம் பாய்ந்தான்; கடுதில் சாய்த்தான்.
தங்கத் தட்டாம் புதுநாள்; தைநாள்;
தமிழர் திருநாள் தாமரை தந்தாள்
திங்கள் கண்ட வங்கம் போலப்
பொங்குக பாலே! பொங்கலோ! பொங்கல்! 1

சின்னப் புல்லும் பனிமுத் தேந்திச்
சிரித்தது; குளிரிசை பாடின தென்றல்;
தென்னை ஆடின; "வழிபிறந் திட்டது
திருமணம் பெறுவோம்" என்றன, பைங்கிளி.
அன்ன மென்னடை உழத்தி "எனது
ஆசை மஞ்சள் பூசுணைப் பூ" என,
"என்றன் வாழ்வு ஏறும் மாடும்"
என்றான் உழவன் பொங்கலோ! பொங்கல்! 2

பண்ணைச் செல்வர் செந்நெல் விற்றார்;
பத்தே ஆயிரம் பணமும் பெற்றார்;
கண்ணைக் காட்டிக் காதலி யோடு
கடைபோய்ப் புடவை வேட்டி கொண்டார்;

விண்ணைத் தொடும் தம் வீட்டில் பால்போல்
வெண் சுதை பூசி, வெங்கீ ராடித்
திண்ணைக் குந்திய காகம் ஓட்டிச்
சிரித்தே தின்றார் பொங்கலோ! பொங்கல்! 8

## திராவிடக் கட்சி கேள்வி

தொன்மைத் திராவிட நன்னீ ரேரிச்
சுண்டிச் சுரண்டி வடநாட் டார்க்கு
இன்ப மழையாய் ஈந்தாய் சூர்யா!
ஏற்கோம்; உன்னை வணங்கோம்; போ! போ!

## தமிழரசுக் கட்சியார் முறை

மண்ணே பிறந்த நாளில் நீயும்
மலர்ந்த எங்கள் தமிழைக் கற்றாய்!
கண்ணும் தமிழர் ஆட்சி காணக்
கனிவாய்த் தூதுரை சூர்யா வா! வா!

## காங்கிரஸ் கட்சியார் திருப்தி

மந்திரி பதவி வகித்தும் யாங்கள்
மக்கள் நிழல்பெறத் துளசி நட்டோம்!
அந்தோ, அதுவும் கருகிப் பஞ்சம்
ஆவதைத் தடுத்தாய் சூர்யா வாழி!

## கம்யூனிஸ்ட் கட்சி போதம்

நொந்தே பலமணி வேலை செய்தால்
நூறு வயதும் ஆறில் சாகும்.
இந்தா! எமது சொற்கேள் கூலி
ஏறிடப் புரட்சி செய்திடு சூர்யா!

### வைதீக பக்தர் வாழ்த்து

அருளாய்! அழகாய்! அமைப்பாய் போற்றி!
ஆரியர் வேள்விக் கனலே போற்றி!
திருவாம் ஏழ்நிறப் பரியோய் போற்றி!
ஜெகத்தின் முதலே! சூர்யா போற்றி!

### குருடன் குரல்

இருளா? ஒளியா? ஏதும் காணேன்!
எரியும் வயிற்றின் பசியைப் போலக்
கருது கின்றேன் உனையே சூர்யா!
காலம் என்பதும் குருடேயன்றோ!

### சூரியனின் முடிவு

பூவின் மாந்தர் தனைவர வேற்கும்
புதுமை கண்டு விதிர்த்தனன் சூர்யன்.
கோவம் முகத்தில் கொவ்வை காட்ட
கொதித்தனன். அந்த வேளை தன்னில்,
காவில் குறத்தி சந்தனக் கட்டை
கஞ்சி காய்ச்ச அடுப்பிடக் கண்டான்.
சேவையே நல்ல வாழ்வெனத் தேர்ந்தான்.
ஜீவன் இனித்தது பொங்கலோ! பொங்கல்!

## 38. நிழல் பேசிற்று!

பனம்பழம்போல் செவ்வானம் படியும் மாலை
பழனத்து வரப்பினிலே நடந்து சென்றேன்
கனல்கரைந்த புகைமூட்ட இருளி னூடே
கதிரறுக்கும் ஆண்நிழலே முதல்பேசிற்று
"மணியடிக்கப் பள்ளிக்குச் செல்கின்றார்போல்
மணிப்புறவே! நீமரணக் கூடு சென்றாய்!
பிணியிலது அங்கிருந்து மகிழ்வ தன்றிப்
பினும்பிறந்து ஏன்வந்தாய் நிலவுபோல?"

"உழுபவர்க்கே நிலம்சொந்தம் என்று இங்கே
உரைத்த ஒரு செய்தியது காற்றில் வந்து
அழுதிருந்த என்செவியில் அமுதாய்ப் பாய
அன்னைமறு தனத்திற்பால் குடிக்கச் சென்ற
குழந்தைஎனச் சாவணைத்து இருந்த யானே,
குளிர்நிலவாய் மறுபிறவி எடுத்து வந்தேன்!
மழைமுகத்தைக் காணுமயி லானேன்! இந்த
மண்ணிலுழும் ஏரின்இரு மாடன் றோநாம்?"

"முன்னாளில் வடஇமய மலையே தாழ்ந்து
முத்தமிழின் தென்பொதிய மலையொங் கிற்றும்!
இந்நாளில் அதைநினைந்து இந்திப் பேயே
எத்துசெய்து வடநாட்டை உயர்த்த லாலே

தன்மானத் தமிழுழவன் வாழ்வ தெங்கே?
தனியுடைமை உழவனுக்கு வருவ தெந்தாள்?
என்றாலும் உன்கனவு உதய சூர்யன்
எனப்பலிக்கும் பொங்கல்நாள் இதுவே சாட்சி!"

எனப்புகன்று ஆண்கிழலே பெண்கிழ லோடு
இனிதாக வான்பறக்க மேகம் போலே,
பனம்பழம்போல் செவ்வானம் படியும் மாலே,
பழனத்து வரப்பினிலே பாடிச் சென்றேன்!

## 1. பாட்டு முடியுமுன்னே...

பல்லவி

பாட்டு முடியுமுன்னே மீட்டிய வீணையைப்
பக்கம் வைத்தே நடந்தாய்—இனிதாய்ப் (பாட்டு)

கேட்ட நினைவே கண்ணீர்த் துளியில்
கீத மிசைக்குதடி—காதல் (பாட்டு)

சரணம்

தாவிய கடல்அலை கரைதனைத் தொட்டுத்
தணல் மெழுகதுபோல் உருகிச் சென்றாலும்

மேவிய அலையின் வடுவே மணலில்
மின்னி மிளிராதோ—மேலும் (பாட்டு)

## 2. காதல் எனும் கடல் நீந்தி

காதல் எனும் கடல் நீந்தி
கண்ணீர் முத்து ஏந்திப்—போதும்
கலங்குகின்றேன் பாவி—சாந்தி
கண்டிடுமோ ஆவி?

கங்குல் தனிலே வந்த கடும் புயலில்
கட்டுண் டலைபஞ்சே என்றன் நெஞ்சே!

வானவில் வர்ணத்தின் ஜாலம்
வருத்ததே காலம்—யானும்
வாழ்வதும் இனியேனோ—காதல்
வல்விதி இதுதானோ?

கங்குல் தனிலே வந்த கடும் புயலில்
கட்டுண் டலைபஞ்சே என்றன் நெஞ்சே!

கண்ட கனவும் இந்நாளே
கார்தோன்றும் மின்போலே—மறைந்து
கடும் இடி வீழ்ந்ததுவே—உயிரில்
கனல்வந்து சூழ்ந்ததுவே!

கங்குல் தனிலே வந்த கடும் புயலில்
கட்டுண் டலைபஞ்சே என்றன் நெஞ்சே!

## 3. ஆசையெல்லாம் நிராசை!

### பல்லவி

*ஆசையெல்லாம் நிராசை*
*ஆனதே அந்தோ நீர்க்குமிழிபோல்* (ஆசை)

### சரணம்

*வீசும் புயலின் விம்மலிலே*
*வேணுகானம் கேட்கப் போமோ?*
*விண் தாவிச் செல்லும் வெண்மேகம்*
*வெய்யில் நீக்கிடும் நிழலாமோ?* (ஆசை)

*மலர்ந்த செவ்விய ரோஜா*
*மணம்வீசு மென நினைத்தேன்.*
*உலர்ந்து வாடிட லாச்சே*
*உறுத்துதே முட்கள் சாவில் தனித்தேன்!* (ஆசை)

## 4. கண்டுகொண்டேன் நானே

### பல்லவி

கண்டு கொண்டேன் நானே—காதல்
என்ன வென்று தானே (கண்டு)

### சரணம்

விண்ணின் விரிவிலும் பெரிது—ஆல்
வித்தத னிலுமே சிறிது
தண்ணீர திலும் மெலிது—சூழ்
சாவத னிலுமே வலிது (கண்டு)

பூவின் மணமென மேவும்—நெஞ்சில்
பொங்கும் கனலதைத் தூவும்
ஆமைபோல் ஐம்புலன் சுருக்கும்—எண்ணம்
அண்டத் தாரைபோல் பெருக்கும் (கண்டு)

கண்டிடாப் போது கலங்கும்—நேரில்
காண்கையில் கர்வத்தால் குலுங்கும்
பெண்மையை ஆண்மையால் மாற்றும்—ஆண்மைப்
பேச்சற மயக்கினில் ஏற்றும் (கண்டு)

இருட்டில் குலைக்கும் குக்கல்—அது
இடமறியா தோன்றும் விக்கல்
வறுமையிற் செம்மையைச் சேர்க்கும்—அது
வளைத்ததைக் கொலைசெய்யப் பார்க்கும் (கண்டு)

வண்டுபோல் மலர்மலர் தாவும்—புது
வாழ்க்கையின் ருசியெனக் கூவும்
மண்டல விதிதனைத் தாண்டும்—அது
மனம்கெடத் தனிமையைத் தூண்டும் (கண்டு)

## 5. காத்திருக்கின்றேன் காரிருளில்

### பல்லவி

காத்திருக் கின்றேன் காரிருளில்
கலைமுகம் காட்டி நிலவே வா! வா! (காத்)

### சரணம்

ஆர்த்தே மேல் பொங்கும் ஆழி அலை
ஆனந்தம் கோருதென் உள்ள நிலை
யாரும் காணாமல் நீ கனவில்
கூறியவாறே நான் தனியில் (காத்)

பாம்பின் சீறலாய்த் தென்றல் மேவுது
பூம்பொழில் தனில் குயிலும் கூவுது
ஆம்பல் மலர்சூழ் குளத்தோரம்
ஆசையில் ஏங்கி வெகுநேரம் (காத்)

## 6. நெஞ்சமாம் கூண்டு

### பல்லவி

நெஞ்சமாம் கூண்டுற்ற பைங்கிளியே
நீலவானத்திலேபறந் தோடியதே! (நெஞ்ச)

### சரணம்

கொஞ்சியே பேசிய அதன் மொழியில்
கொண்டிட்ட ஆசை நீங்கிடுமோ?
பஞ்சணை யடைந்தும் அதன் நினைவே
படருது கண்கள் தூங்கிடுமோ? (நெஞ்ச)

காரொடு மின்னல் குழைந்திடுதே
கனவுகள் விண்மீன் சூழ்ந்திடுதே!
வேர்விட்ட பாசம் ஆடிடுதே
விளைந்த கோவைக்கனி தாழ்ந்திடுதே! (நெஞ்ச)

வல்லிருள் வானில் கூடுகட்டுதே
வளைக்க ஒண்ணு விதி வலைபின்னுதே
செல்கின்ற கிளியதில் சிறைப்படுமோ?
சிந்தும்கண்ணீரில் காதல் மின்னுதே! (நெஞ்ச)

## 7. திரும்பிப் பாராமல்

**பல்லவி**

*திரும்பிப் பாராமல் தெருவில் போதல் முறையோ—*
*என்*
*சிந்தைதனையே அந்தரங்கமாய்த் திருடிக்கொண்டு*
*(திரும்பி)*

*விரைந்தோடி அங்கே, கை பிடித்து வா இங்கே*
*வேட்கைக்கு நீர்கேட்டு விழி காட்டியே (திரும்பி)*

**சரணம்**

*தேனை இழந்த செம்மலரென ஆனேன்*
*தேகமாய் நின்ற ஜீவனைக் காணேன்*
*வானைவிட்டே வெண்மதி வாழுமோ?*
*வலைவீசிக் கலைமானைச் சிறை செய்தாற்போல்!*
*(திரும்பி)*

## 8. அந்தநாள் நினைவு

### பல்லவி

அந்த நாள் நினைவு வந்து அலைமோதுதே நெஞ்சிலே
ஆசைவடிவு முத்தாய்க் குலுங்குது கண்ணீரிலே (அந்த)

சந்திரன் நகைத்தே தாரை விளக்கேற்றும் வேளையில்
தமிழ் படித்த தென்றல் உலவிடும் சோலையில் (அந்த)

### சரணம்

இந்திரவில் காவியம் எண்ணமே நிறைந்தது
இருவிழி ஒளி அலை இசைதனில் உறைந்தது
வந்திக்கும் மலரென முத்தமே இணைந்தது
வாழ்க்கையின் கீதம்இதழ் அசைவினில் பிணைந்தது!(அந்த)

விட்டுவிட்டுத் தொட்டு நின்ற மேனி குளிர்ச்சி
விம்மிப் பாய்ந்த மூச்சிலே செய்தது கிளர்ச்சி
கட்டுக்கடங்கா வானைக் கண்ணினில் பதித்த
காலம்தரும் காதலெனும் கள்ளினைக் குடித்த (அந்த)

## 9. படுக்கை விரிக்கும்போது

**பல்லவி**

**படுக்கை விரிக்கும் போதெல்லாம்** உன் பார்வை
தோன்றிடுதே
பட்டில் நெய்த வண்ணப்— (படுக்கை)

**சரணம்**

அடுக்கும் தலையணை உன் மார்பாய் வந்து
ஆருயிர் நின்றிடுதே
தொடுத்த விளக்கது விடுக்கும் ஒளிரேகை
தும்பைப் பூவாம் உன்நகை என்றிடுதே (படுக்கை)

இமைக் கதவைமூடிக் கண்ணைச் சாத்தும்போது
எட்டியே பார்க்கின்றாய் நீ—கனவில்
குமைந்திடும் எண்ணக் கோலமாம் வியர்வை
குளித்தே சிரித்தே நீதனியில் (படுக்கை)

பூசணி இலை மெத்தை பொலிந்த காய்போல்
பூரித்துக் கிடந்தாய் படுக்கையில்—அன்னாள்
தேசத்தில் என்னை வறுமை உருக்கிடும்
தெரியா விதியின் துயரால் இந்நாள் (படுக்கை)

## 10. ஏட்டைத் திருப்புகின்றேன்

### பல்லவி

ஏட்டைத் திருப்புகின்றேன் உனது
எண்ணம் திரும்புமென்றே (ஏட்டை)

நாட்களை ஏடாய்க் கொண்ட கால
ஞான இயற்கையாம் புத்தகத்தின் (ஏட்டை)

### சரணம்

உயிர்தொட்டு எழும் ஒவ்வொரு
மூச்சிலும் உனைக் கூடுகின்றேன்
வைரத்தின் நவ வர்ண ஜாலங்களில் உன்றன்
வாயொலிச் சிரிப்பைத் தேடுகின்றேன். (ஏட்டை)

ஓவியக் கலைஞர் தூரிகை நெளிவில்
உள்ளொளி தன்னை நாடுகின்றேன்
காவியக் கவிஞர் கற்பனைக் கடலைக்
கருத்தாம் கலத்தால் மூடுகின்றேன். (ஏட்டை)

## 11. தனித்து நின்ற நிழல்கள்

### பல்லவி

தனித்து நின்ற நிழல்கள் ரவி நீங்கத்
தழுவல் போலக் களித்தோம் (தனித்து)

### அநுபல்லவி

இனித்த எண்ணத் தாலே வெறிஎழ
இதழ்கள் மோதத் திளைத்தோம்! (தனித்து)

### சரணம்

பனியின் வாடை நேரம்
தென்றல் பாட்டு வந்தபோது
கனியை விட்டுப் பிரியும்
கிளிபோல் காலம் தன்னில் நின்றேன்! (தனித்து)

குளித்த நிலவு முகிலை மெள்ளக்
கொஞ்சிப் போகும் போது
கூடல் நீக்கிச் சென்றாய்
என்னை வாடவிட்டுச் சென்றாய்! (தனித்து)

## 12. நினைக்க நினைக்க நெஞ்சம்

### பல்லவி

நினைக்க நினைக்க நெஞ்சம் நெக்குருகுதே—உன்னை
(நினை)

### அநுபல்லவி

அணைமீறும் வெள்ளம்போலக் கண்ணீர் மீறுதே!
(நினை)

### சரணம்

காதலாம் தூண்டிலில் துடித்திடும் மீன்நான்
காலமாம் வலையினில் தவித்திடும் மான்நான் (நினை)

காதலின் தீபம் நீ கையேந்திச் சென்றாய்
காரிருள் தனிலென்னைத் தனிவிட்டுச் சென்றாய்
(நினை)

## 13. சமாதானப் புறுவே

சமாதானப் புறுவே பறக்குது
தண் மதி போலவே வானத்திலே
உண்மை உலக ஒற்றுமை வேண்டி
உயர்ந்த தான ஞானத் திலே (சமா)

அமா வாசை இருள் தன்னைப் போலவே
அணு குண்டு யுத்தப் புகை மூடுது
துணுக்குற்று நெஞ்சம் ஆண்பெண் குழந்தை
தொல்லை தவிர்க்கவே நாடுது (சமா)

இமாசல மொடு கன்யாகுமரி
எல்லை கொள் இந்திய நாட்டினிலே
அல்லல் தவிர்த்த அஹிம்சா மூர்த்தி
அண்ணல் காந்தி பண் பாட்டினிலே (சமா)

விஞ் ஞானபூதம் விஸ்வ ரூபமாய்
விண் இடி கொட்டிக் கூத் தாடுதே
நித்ய தரித்ரபாட் டாளிக் கெல்லாம்
நித்ய இன்பம் தந்திடவே (சமா)

## 14. யாழ் மீட்டித் தமிழ்ப்பாட்டு

*யாழ் மீட்டித் தமிழ்ப் பாட்டு பாடு*
*பெண்ணே—கவலைகள்*
*அலை யென மறைந் தோட*
*ஆசைக் கண்ணே—நீ* *(யாழ்)*

*தாழ்ந்த சமூகத்தின் மூடத்*
*தளை நீங்க—வெற்றித்*
*தார் கொண்ட மற வீரன்*
*தனைப் போலப் புயம் ஓங்க* *(யாழ்)*

*வந்தவர்க் கிடம் தந்து*
*நொந்தவர் விழிக்கவே—அன்னை*
*பைந்தமிழ் நிலமெல்லாம்*
*பண் போடு செழிக்கவே* *(யாழ்)*

## 15. தெய்வீக வெள்ளம்

கால் தண்டை கிலு கிலுக்கக்
கவிச் செல்வம் வந்தது
மேல் நின்ற தூய ரோட
மென் நகையே தந்தது! (கல்)

பால் போன்ற நிலவு முகம்
பச்சைக் கிளி உள்ளம்
சேல் போன்ற விழியாடத்
தெய் வீக வெள்ளம் (கல்)

பூத் திட்ட தாமரையின்
வார்த்த தேன் போலே
சேர்ந்திட்ட அம்மா அப்பா
சொல்லும் அன் பாலே (கல்)

மார் கட்டி ஆகும்
மணி யாரம் அதுவே
பேர் சொல்லி ஆகும்
பெருந் தெய்வம் அதுவே! (கல்)

## 16. வா! வா! வா!

**வா** வா வா வென்றால்
போ போ போ வென்னும்
நோ வாமல் நொந்து
முகம் கூசி மின்னும் (வா வா)

ஆசைச் சிறு குழந்தை
ஆருயிரின் செல்லமே
பாசம் கவர வந்த
பாக்கியத்தின் உள்ளமே (வா வா)

ஓட்டும் இரண் டுள்ளத்தின்
ஓவியமாய் நிற்பது
தட்டும் இவ் வாழ்க்கையிலே
தமிழ் தனையே கற்பது (வா வா)

வீட்டில் விளையாடும்
வெள்ளி மணித் தீபமே
ஆட்சி செலுத்தி நன்று
ஆற்றும் மனக் கோபமே! (வா வா)

## 17. ஆசை எல்லாம்

### பல்லவி

ஆசை யெல்லாம் உன்மீதே, தங்கம்
அந்தரங்க மெல்லாம் உனக்கே சொந்தம் (ஆசை)

### அநுபல்லவி

பேசும் சுவை வீசும் வான்பாடியே
பிரியாத கலைமானே உயிர் ஜோடியே - என் (ஆசை)

### சரணம்

தொட்டுக் கைபிடித்த சொந்தமே போகுமா
சுடர்நிலா மறைந்தாலும் வான் மாறுமா
முத்தச் சுவைகாட்டி முத் தமிழை ஊட்டி
முன்னேறி வந்த எம் மூதாதை தமிழ்ப்பெண்ணே
-என் (ஆசை)

ஒதுங்கி நடக்கையில் உள்ளொளி வீசுது
உவகை நடையில் அன்னமே பேசுது
பதுங்கப் பதுங்க அழகொளி பாயுது
பார்க்காத நேத்ரானந்தம் தோயுது - என் (ஆசை)

வரவேற்க இருக்குது வான நிலாவே
வளர்மாலை சோலை மலரின் உலாவே
நிலையாக நீயேதான் நெஞ்சம் நினைவாய்
உலகோர்க்கு மேலான உள்ளம் கனிவாய் - என்
(ஆசை)

## 18. பொது நலம் பேணுவது

**பல்லவி**

பொது நலம் பேணுவது மனிதத் தன்மை—பிற
புறட்டுகள் செய்வதெல்லாம் ஈனப்புன்மை (பொது)

**அநுபல்லவி**

மதலையர் பலர்வாழ மாதாமன—மென்மை
மார்க்கம் காண்பது போல மானிலத்தே உண்மைப்
(பொது)

**சரணம்**

சூரியனைப் போலே தூய மழை போலே
பாரினி லெல்லோர்க்கும் உதவ வேண்டும்
நேரிய தராசின் நீள் முனை போல
நீதி எவர்க்கும் வழங்குதல் வேண்டும் (பொது)

இப்படிச் செய்தால் இழிவுற்ற சமூகம்
அற்புதமாக அன்பின் படியேறும்
கற்பனைக் கெட்டாத கடவுளின் ஞானம்
கைவச மாகி அருள் கூறும் (பொது)

## 19. குருவே நின் திருவடி

### பல்லவி

குருவே நின் திருவடி சரணம்
அறிவுருவாய் நின்ற அருளே சரணம் (குருவே)

### அநுபல்லவி

பெரும் வாழ்வின் பாதைக்கு வழிகாட்டிப்
பேசும் மெஞ்ஞான மூர்த்தியே சரணம் (குருவே)

### சரணம்

இரு சுடர்க் கண்ணுறு எனைநோக்கும் அன்பே
இருவினை மாற்றிடத் தருணம் உன்முன்பே
நறுமலர் கொண்டே நற்றுள் சாற்றினேன்
நம்பிக்கையாலே சேவித்துப்போற்றினேன் (குருவே)

## 20. மாலை வருமுன்னே!

### பல்லவி

மாலை வருமுன்னே மன்னா வருவீரென்று
மங்கை நான் மனதில் திட்டமிட்டேன்—செம் (மாலை)

### அநுபல்லவி

சோலை மலர்பறித்து துயிலும் மஞ்சம் மீதே
சுகந்தம் வீசத் தூவி விட்டேன்—இன்ப (மாலை)

### சரணம்

பாலும் பழமுண்டு பார்க்கப்பொன் விளக்குண்டு
பாடிக் களிப்பூட்டக் கோடிய யாழுண்டு
லீலை புரிவதற்கென் நெஞ்சினில் அன்புண்டு
மேலை வானிலே செல்லும் அன்றில் தனைக்கண்டு
(மாலை)

## 21. வா நிலவே வா!

வா நில வே வா!
வாழ் வொளியைத் தா
வா நில வே வா
வான் திருவே வா!

கைப் பந்தாய் உனையெண்ணிக்
கண்பாவை எம் குழந்தை
கை தட்டி ஆடவே
ஒப்பான அல்லி மலர்
ஓடிப் பறித்து வந்து
உன் கூந்தல் சூடவே (வா நிலவே)

நட்சத்திர உன்குழந்தை
நர்த்தனமே ஆடவே
உட்கசிந்த உன்அன்பு
உதயம் கண்டோடவே
செய்ததென்ன நிலவே
செப்பாயோ நிலவே (வா நிலவே)

## 22. சூரிய காதலன்

### கண்ணிகள்

சூரிய காதலன் தான் சிறைப்பட்டானோ?
சோகத்தால் உன்னை யே தூது விட்டானோ?
கூரியமுட் டாமை குலுங்கியே சிரிக்கக்
கொண்டவன் இல்லாத கன்னியர்பழிக்க
நிலவே நிலவே ஏன்வந்தாய்
நின்கதை சொல்ல வந்தாயோ? (நிலவே)

காலையில் எங்குநீ போனாய்?—மீண்டும்
மாலையில் ஏன்வரலானாய்?
வேலையில் ஆடும் மென் னலைப்பெண்கள்
வெகு நேரம் உன்னைத் தேடுறார்
வெண் பாலில் குளித்தே ஆடுறார்
தூங்கும் ஏழையை எழுப்பி விடாதே
துன்பக் கனவை உசுப்பி விடாதே (நிலவே)

தேய்ந்த வெள்ளி நாணயம் புவிமேதே
சுற்றி சுற்றிக் கைமாறி வந்ததைபோலே
தேய்ந்து விட்டாயோ நிலவே
தென்றல் பழிக்குது நிலவே
வா வா யெனச் சொன்ன வாய் உண்டு
போ போ என்குது தாமரை மலர் கண்டு (நிலவே)

## 23. கனவில் வந்தார்

### பல்லவி

*கனவினில் வந்தார் அந்தக் கள்வரடி*
*இனம் தெரியவில்லை—இன்பச் செல்வரடி* (கன)

### அநுபல்லவி

*மனம் தொட்டுப் பார்த்தேன்—ஒன்றும்*
*மதிக்கு விளங்க வில்லை*
*அனம் உண்ணைக் கூடுதில்லை—இன்னும்*
*அவர் ஆசை விடவில்லை* (கன)

### சரணம்

*காமனும அலலவடி—சுடாமேவற்*
*கந்தனும் அல்லவடி—வேணு*
*கானம் புரிகின்ற கண்ணனு மல்லவடி*
*மாமன் மகன் தானடி—நான்*
*மற்றென்ன சொல்வேனடி—புது*
*மணமாலைகைக்கொண்ட மந்தகாசச்செல்வரடி* (கன)

## 24. செல்ல ராணி

**பல்லவி**

*செல்ல ராணி வீட்டின் கல்யாணி*
*தீபமாய் விளங்கும் மகாராணி—என் (செல்ல)*

**அநுபல்லவி**

*வெள்ளி நிலா முக அழகி*
*விவேக மிகுந்தவள் குறள் தனைப்பருகி—என் (செல்ல)*

**சரண**

*சுவையாக உணவூட்டும் சூட்டி*
*சுதியோடு தமிழ் பாடும் யாழ்மீட்டி*
*நவமான வாழ்விலே நல்லின்பம் கூட்டி*
*நன்மகப் பேறும் தந்தாள் பெருமாட்டி-என் (செல்ல)*

## 25. பிறக்கும் பிள்ளைக்கு

பல்லவி

பிறக்கும் பிள்ளை என்னபேரு
சிறந்த தமிழாகவே சூட்டுவேன் பாரு—நமக்குப்
(பிறக்கும்)

அநுபல்லவி

மறக்க முடியாத உயிர் ஓவியம் அது
மதலை மொழி பேசும் பெருங்காவியம்—நமக்குப்
(பிறக்கும்)

சரணம்

தவமே கிடந்து பெறுகின்ற பிள்ளை
தமிழின் மானம் காக்க வருகின்ற எல்லை
நவமான கனவெல்லாம் நினைவாக மாறும்
நம்வீட்டில் வளர்கின்ற கலையின்பம் சேரும்—நமக்குப்
(பிறக்கும்)

## 26. அது என்றால் என்ன?

**பல்லவி**

*அது என்றால் என்னப்பா?*
*இது என்றால் என்னப்பா?*
*அறிஞன் நீயே அறிந்தால் சொல்லப்பா* (அது)

**அநுபல்லவி**

*பொதுவில் ஆடுமாம்*
*உயிராய்ப் பாடுமாம்*
*பொருந்தும் அன்பிலே கூடுமாம்* (அது)

**சரணம்**

*சூரிய சந்திரன் சுழன்றிடச் செய்யுமாம்*
*தோத்திரம் செய்யும் தொண்டர்கள் உய்வராம்*
*காரிய காரணம் ஐம்பூத முள்ளதாம்*
*கடவுளாகி விதியையும் வெல்வதாம்* (அது)

## 27. உழைத்துண்போனே

உழைத்துண் போனே
உலகமே போற்றும்
உழையாத வீணனே
உலகமே தூற்றும் (உழைத்)

கவிஞ னென்றாலும்
கடவு ளென்றாலும்
புவியில் சிற்றெறும்பு
போல மென்மேலும் (உழைத்)

உழும்
காளைகள் போலே
நாடும் இருள் துடைக்கும்
ஞாயிறைப் போலே (உழைத்)

திரண் டெழுந்த மலையும்
தேய் நில வாகும்
மரணத்தின் மறுபெயர்
மடச் சோம் பலாகும் (உழைத்)

## 28. ஞாபகம் வேண்டும்!

**பல்லவி**

ஞாபகம் இருக்க வேண்டும்—அந்த
நாளில் சொன்ன வார்த்தை எல்லாம் (ஞாபகம்)

**கண்ணிகள்**

தீபந்தனில் சுடரைப்போலச்
சேர்ந் தொளியே வீசி நின்றாய்
தூபம் போலச் செல்லு கின்றாய்
சொந்தமே மறவாமல் நெஞ்சில் (ஞாபகம்)

கரையை மறவா அலைபோல்
கமலம் மறவாக் கதிர் போல்
இருளை மறவா மதிபோல்
எங்கிருந்தாலும் என்றன் (ஞாபகம்)

இன்ப ரோஜா மலரிதழ் போல்
இங்கு நாட்கள் உதிர்ந்தாலும்
துன்பம் காணும் முட் செடியில்
தோன்றுதோ மலர்கள் மேலும்! (ஞாபகம்)

## 29· வழிபார்த்தல்

### 1

வந்தது கார்காலம்—வானம்
கொண்டது போர்க்கோலம்
இந்திர தனுவெடுத்து—தாரை
என்னும் சரம் தொடுத்து
உந்தும் குளிர் பரியைப்—பிணைத்த
ஒளிர்மின் முகில் தேரில்
அந்தரமே குலுங்க—இடி
யான முரசொலிக்க
வந்தது கார்காலம்.........

கூண்டில் தூக்கணமும்—மின்மினி
கொண்டு விளக்கேற்ற
கூண்டு கட்டுதற்குத்—தெரியா
குயிலே குக்கூ எனத்
தாண்ட முடியாமல்—கேணித்
தவளை கத்தலிடத்
தாண்டும் மறிஆடு—இடை
தனக்கே திரும்பிவர
வந்தது கார்காலம்.........

## 3

அருவி இசைபாடத்—தோகை
ஆலித்து நட்டமிடக்
குருந்தும் வேங்கையதும்—மகிழ்ந்து
குலுங்கிப் பூத்திடவும்
உருவிலி மன்மதனே—எனது
உள்ளம் எய்யும்கணை
எரிந்து தகிக்குதடி—அன்பர்
இன்னும் வரவில்லையே! (வந்தது)

## 30. எத்தனை தரம் உன்னை!

### பல்லவி

எத்தனை தரம் உன்னைத் தேடி வந்தும் உனக்குச்
சித்த மிரங்காததேன்—என் அன்பே (எத்தனை)

### அநுபல்லவி

சித்திர வசந்த கால நிலாப் போலே—நீ
சிரித்து உலாவிடும் சிங்காரப் பொழில் பாலே
(எத்தனை)

### சரணம்

தண்மலர் விழியாளுனைக் கண்டதுமுதலாய்
வண்டெனவே வட்டமிடுதே என்மனம்
பண்பாடும் குயிலென் துயர் பறை சாற்றியும்
திண்மலை நாடும் முகில்போல் நின்னகம் நாடித்தினம்
(எத்தனை)

## 31. அழகுத் தமிழரசி!

அழகுத் தமிழரசி
ஆடிவராள் மயிலே
பழச்சோலைத் தென்றலென்று
பாடிடுவாய் குயிலே (அழகுத்)

வெள்ளி நிலா மிதக்கும்
வெண் திரைக் கடல் மேலே
உள்ளம் களி கொள்ள
உலவும் அனம் போலே (அழகுத்)

பத்தினிக் கண்ணகியாள்
பாதச் சிலம் பணிந்து
சத்தம் திசை முழங்கத்
தனயா எனக் கனிந்து (அழகுத்)

செம்மைத் திருக்குறளாம்
சித்திரக் கண் வீசி
கம்பன் கவி யமுதக்
காவிய மகராசி (அழகுத்)

## 32. முடிவாக ஒரு வார்த்தை !

### பல்லவி

முடிவாக ஒரு வார்த்தை கேட்டு வாடி—பின்னர்
அடியாள் தலைவிதிபோல் நடக்கட்டும்போடி (முடி)

### அநுபல்லவி

கொடிய அசுரர் முடி பொடி படக்
குணமுயர் சுரர் மனம் மகிழ்ந்திட
படிபுகழ் செந்தூர்ப் பதி தன்னைப்
பாலனம் செய் வேலனிடமே (முடி)

### சரணம்

வீதியிலே பொம்மை வைத்து
விளையாடும் பருவத்திலே
தாதிமி தோம் என ஆடும்
சந்த மயில் மீது வந்து
ஜாதி குலம் துணை ஏதும் இல்லாதவன்
தங்க இடமின்றிக் காற்றாய் அலைகிறேன்
நீ தந்தால் உன் நெஞ்சினில் இடமே
நீங்கேனென்ற பாங்கனிடமே (முடி)

காவினிலும் வாவிதனிலும்
கனவிலும் அவனுடன் கலந்து
மேவிய சுகம் தனை நினைத்தால்
மேனியெல்லாம் சிலிர்க்குதடி

ஆவியைத் தனவசம் ஆக்கிகொண்டே—அவன்
அந்தரங்கம் தனைச் சொல்லாமலே சென்று
தேவயானை தன்னை மணம் செய்து
தினையைக் காத்த கனியை அணைந்தான் (முடி)

இலவுகாத்த கிளியைப் போல
என் கதையும் ஆச்சுதடி
நிலவும் குளிர் தென்றலுமே
நெருப்பெனச்சுட லாச்சுதடி
கலங்கி அழுது அழுது இரண்டு
கண்ணின் நீரும் குறைந்து போச்சு
விலையிலா நம்பிக்கை கொண்ட நான்
வேண்டுமோ வேண்டாமோ என்று (முடி)

# பாராட்டுக்கள்

கவியமைக்கும் ஆற்றல் இந்நூலாசிரியர்க்கு இயல்பாக அமைந்திருக்கிறது. ஆதலின், தமிழுலகம் இவரது அரிய பாட்டின் பலனை அனுபவிப்பதுடன் இவரை நன்கு போற்றிப் பாராட்டவுங் கடப்பாடுடையது.

பேராசிரியர் கா. சுப்ரமணியப் பிள்ளை
எம். ஏ. எம். எல்.

உண்மையில், கம்பதாசன் எண்ணம் நன்று. கவிதையுள்ளம் நன்று. நல்ல கற்பனையைப், புதுமையை வரவேற்கும் தன்மையை, அதைப்போற்றும் ஆற்றலைக் காணுகின்றேன்.

பாரதிதாசன்

நண்பர் கம்பதாசனை யாவரும் அறிவர்; அவர் கவி, கவிராயனுக்குள்ள கவலையற்ற தன்மையும், மிடுக்கும், திமிரும், கம்பீரமும் அவரிடம் காண்பதுபோல் மற்றவர்களிடம் காண முடியாது. வாழ்வையும், கவிதையையும், காவியக் கனவையும் ஒன்ருக்கிய கவின் அவரது உள்ளத்தின் கனிவு. வறுமையூடும் செல்வத்தூடும் மனங்கலங்காது குலுங்காது அநாயாசமாகப் பறந்து செல்லும் வானம்பாடி அவர்.

பாலபாரதி ச. து. சு. யோகியார்.

கம்பதாசன் இக்கால யுவ எழுத்தாளர்; கலைவல்லார். ஆவேசத் துடிதுடிப்புடன் புதுவாக்குத் தேடிப், புதிய சாதனம் வேண்டி நிற்கிருர். அவர் கொண்டுள்ள கருத்துக்கள் அவரது தேவையை விளக்கிக் காட்டுவது கண்

கூடு. காவிய தெய்வத்தின் அபூர்வ வார்ப்படத்திலே பழைய ரத்தம் பாய்ந்திருந்தாலும், புதுக்குரலின் தெளிந்த தொனிப்புக் கேட்கிறது.

**ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா.**

அற்புதக் கற்பனையும் அழகான கருத்தும் கொண்ட கம்பதாசனின் கவிதைகள் சில இப்பிரசுரத்தில் அடங்கியிருக்கின்றன. அவற்றில் "படகோட்டி" "முதல் முத்தம்" "இயற்கையின் கானம்" முதலிய கவிதைகளைப் படிக்கும் போது மகாகவி ரவிந்திரநாத டாகூரின் சிறந்த கவிதைகள் சிலவற்ருேடு அவைகளை ஒப்பிடவே நமக்குத் தோன்றுகிறது.

**ஆனந்தவிகடன்**

தமிழ் மொழியில் கவி பாரதியாருக்குப் பிறகு, இன்று கம்பதாசரின் கவிதைகளே சகோதரத் தொழிலாளர்களுக்கு மின்சார சக்தியையும் நம்பிக்கையையும் உண்மையான கலைப்பண்பையும் தரக்கூடியதாகத் தோன்றியுள்ளது.

**கோவை N. G. ராமசாமி M.L.A.**

## கவிஞர் நூல்கள்

### கதைகள்

கருத்துக்கள் புத்தம் புதியவை. காலங் கடந்துசெல்லும் கற்பனை மெருகுடன் வாழ்வியலின் கோணங்களை வகைபடுத்திச் செல்பவை. ரூ. 2. 00

### நாடகங்கள்

சிற்பி, ஜீவ நாடகம் என்ற இரண்டின் தொகுப்பு. ஒவ்வொன்றும் புனிதமான ஒவ்வொரு தத்துவத்தினை விளக்கும் சிறந்த காவியப் படைப்பு. நடிக்கவும் படிக்கவும் ஏற்றது. ரூ. 2. 00


விவரங்களுக்கு :

அருணா பப்ளிகேஷன்ஸ்

தியாகராயநகரம் : : சென்னை-17

JACKET PRINTED AT PREMA ART PRINTERS, MADRAS-24